ஸ்ரீமதராமாநுஜாயநம:

# பகவற்கீதை,

மூலமும் உரையும்.

---

இஃது

மதுரை-புதுவை-சென்னை

இம்மூச்சங்களிற்றமிழ்த்தலைமைப்புலமை

நடாத்திய-களத்தூர்

வேதகிரிமுதலியாரவர்களால்

முன்னம் அச்சிட்ட பிரதிக்கிணங்க

---

இவை.

கோகுலாபுரம்.

சரவணபண்டிதரவர்களால்

பார்வையிடப்பட்டு.

---

சித்தூர்

வீராசாமிநாயுடு

அவர்களால்-தமது.

வித்யாவிநோத அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

[illegible] - 1881

உ

சர்வம்விஷ்ணுமயம்ஜகத்.

# ஸ்ரீ பகவற்கீதாமகத்துவச்சுருக்கம்.

———(*)———

இவ்வுலகின்கண்சிறந்த மந்திரிகளுக்குள் முழுமந்திரி சுமந்திரன் முக்காலமந்திரி சத்தியகீர்த்தி அரைமந்திரி பட்டி கால்மந்திரி அப்பாசி இந்நான்கு தரத்தாரில் கலியுகத்தில்மிகுந்தமதிசூகியாகவும் இராஜதந்திரியாகவும் சர்வவித்தையானுபவ கைவல்லியராகவும் ஞானசூரியராகவுமிருந்த (அப்பாசி என்பவனை) ஒப்பற்றமுக்கியமென்றுதகுதி அக்காலத்தில அரசுசெலுத்திவந்த ஒருபாட்சாவானவர் சர்வசமயாதிகாரமாகவும் கியானபரானின ஆட்சேபாதிகமாகவும் சுதசாத்விகசுயம்பிரகாச எதார்த்த ஆத்மஞானமோட்ச கைவல்யதிவ்யகிரந்தமெதுவென்று விசாரணைசெய்து தமக்கு அனுப்பும்பொருட்டுதமனுநகரத்திலிருந்து முஹராஞ்செய்தகடிதம் ஒன்றை அனுப்ப அதைக்கண்டு (அப்பாசியானவர) இவ்வுலகத்தின் வேதாகமபுராணசாஸ்திராலங்காரஸ்மிருதிகளிலும் விசேஷமுள்ளதென்றும் சமயகோடிகளினுடைய தர்க்கநிவாரண சாட்சிபூதமென்றும் இருவினையகத்தி ஜீவாத்மாபரமாத்மாவிற் சைதன்யப்படும சத்தியென்றும, மேற்படிபாட்சாவானவர் எழுதியகடித லட்சணத்திற்குக் குறைவில்லாததென்றும, அதற்குமேலொருநூலுமின்றி ஒப்பற்ற வேதபரமரகசியமென்றும பார்த்தன் தர்சனமென்றுமிவிளங்காநின்ற ஸ்ரீமத்பகவற்கீதையை அரபிபாஷையில் மொழிபெயர்த்து பாட்சா அவர்களுக்கு அனுப்பினார், அதுகண்டு மேற்சொன்னபாட்சாவானவர் இந்த அத்வைதகிரந்தத்தை தம்முடையசமுகத்தின் நாற்றிசைமந்திரிகளுக்குங்காட்ட அனைத்து முகதிசைமந்திரிகளும் திவ்யமென்றங்கீகரிக்க மறுமொழிசைமந்திரிமாத்திரம் தம்மதத்தைச் சாராமலிருக்கின்றதென்று அரசனுக்கறிவிக்க அரசன் சீர்தூக்காமல் அப்பாசிக்குப் பதிலுத்தரமெழுத ஆலஸ்யப்பட்டதால் மதிசூகியாகிய (அப்பாசி) நுட்பத்தைக்கிரகித்து மறுபடியும் ஒருகடிதத்தில் (இந்தப்பகவற்கீதையை) அலட்சியஞ்செய்தவன் நீசபீஜமாகயிருக்கவேண்டும், அவனுடைய தூராட்சேபத்தினால் தமது அங்கீகாரகடிதம் வருதற்கு ஆலஸ்யமாயிற்றென்றுணர்ந்தேன் ஆதலால் அந்தச்சந்தேகத்தை நிவர்த்திசெய்துக்கொள்ளவேண்டுமென்று எழுதினார், அதைக் கண்டமாத்திரத்தில் பாட்சாவானவர் அம்மந்திரியின் தாயின்வாய்மொழியால் அவன்நீசபீஜமென்று உண்மைதெரிந்துகொண்டு அவனைக்கண்டித்துப்போட்டு இந்த (ஸ்ரீமத்பகவற்கீதையை) பிரதிகாலம் பாராயணஞ்செய்து ஜீவன்முத்தரானார்.

———*———

ஸ்ரீ பகவற்கீதா மகத்துவம் - முற்றும்.

ஒ.

# பகவற்கீதை

## அத்தியாயங்களின் அட்டவணை.

---



பகவற்கீதை அத்தியாயங்களின் அட்டவணை

முற்றுப்பெற்றது.

---

உ

கடவுள் துணை.







# பகவற்கீதை.

மூலமும் - உரையும்.



## பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஐவகைப்பொருணாற்கரண முக்குணங்கண்மூன்றும்
செய்வினையிரண்டுமொன்றி யாவருந்திகைப்பநின்ற
பொய்யிருளகலஞானப் பொருட்கதிர்விரித்தபுத்தேள்
கைவளராழிச்செங்கட் கண்ணனைக்கண்ணுள்வைப்பாம்

இதன்பொருள்.

அண்டசம், சுவேதசம், சராயுசம், உற்பீசம் மந்திரசம், என்கிற ஐந்துவித சனனசீவன்களும் மனம், புத்தி சித்தம், அகங்காரம்,ஆகிய நான்குகரணங்களும் சாத்துவிகம் இராசதம் தாமதம் ஆகிய முக்குணங்களும் செய்கின்ற காரியமான புண்ணியபாவமாகிய கன்மமிரண்டும் பொருந்தியவெல்லாருந் தன்னையறியாதபடி மயங்க மெய்போலநின்ற பொய்யான அஞ்ஞானம்போகத் தனதுசுபாவ - சோதியான ஞானப்பொருளை விரித்தருளிச்செய்த தெய்வம் திருக்கையிலேவளர்ப்பட்ட சக்கரத்தையுஞ் சிவந்தகண்களையுமுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமியைக் கண்ணுக்குள்ளேவைப்பாம். (எ-று) கண்ணுக்குள்ளேவைப்பாமெனவே, எல்லாமவனைக் காண்போமென்பது கருத்து இதுவணக்கம், அருச்சுனனுக்கு ஞானப்பொருளையென்றெழுதாத தேதுக்கெனில். உத்தமனுக்கும், பின்னுஞ்சிலருக்கு முபதேசித்ததினாலே, அருச்சுனனுக்கென்றெழுதாமற் பொதுவாகவெழுதினது, இதில்வினையுவமமும் பயனுவமமுங்கண்டுகொள்க ஐவகைப்பொருளென்றதுபிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், என்கின்ற பஞ்சபூதங்களும்பொருந்தும்.

(க

மன்னருச்சுனற்காய்ப் போர்ப்ப வாளமர்தனமேலிட்டு
மின்னாழிப்படைக்கைமாய னுரைத்தமெய்ப்பொருளையெல்லாம்
பன்னருமறைகள்சேர்ந்த பழமுனிபணித்தவண்ண
மென்னறிவளவினாலே தமிழினாலியம்பலுற்றேன்.

(இ-ள்.) எல்லாரையுங் கொல்லலாகாதென்று அவர்கள்மேல் கிருபைவைத்து அருச்சுனன்கேட்க அவனையெல்லாரையுங் கொல்லத்தக்க கீர்த்திபிரகாசிக்கிற சண்டையின்மேலிட்டு ஒளிபிரகாசிக்கின்ற பஞ்சாயுதந்தரிக்க திருக்கைகளையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமி யுபதேசித்த உண்மைப்பொருளையெல்லாம் ஓதவரிய மறைபேதங்களை நாலாகச்சேர்த்த வியாசமஹாமுனி கிரந்தமாக வருளிச்செய்தபடிக்கு அடியேனுடைய அறிவு எவ்வளவோ அவ்வளவினாலே தமிழ்மொழிசொல்லத்தொடங்கினேனென்றவாறு ※ (அறிவுளவென்றதனால்வேதத்தை கோவைவிட்டவருடைய அறிவினாலே செய்ததை அடியேனறிவளவினாலே சொல்லுகிறது மறைப அறமாகையால் அவர்சொன்னதுபோல திருக்காமம் பெரியோராலாயிகழப்படவதாயினும் அடியேன் ஆசையினாலேசொன்னதினாலே பெரியவர்களும் இகழாதிருக்க எட்டினதிதை வெளிப்படு கொள்ளுவாயாகவென்பது கருத்து.) (உ)

கலிவிருத்தம்.

விண்ணியல்மொழியினால் வியாசன் பகர்ந்திய
புண்ணியகதையையான் புல்லறிவினொனி
யெண்ணியவகையினிற் றிறமையுணர்ந்
நண்ணியபொருளிலே நுவலுவேனென்றியே

(இ-ள்.) தெய்வபாஷை வசனமான கிரந்தத்தினாலே வியாசமகாமுனிசொன்ன புண்ணியகதையான இந்தக்கதையை அடியேன் தமிழினாலேசொல்லுவதென்னவெனில் மோட்சத்துக்கு சாதனமிட்டதாம் பிரவிர்த்தியங்கள் வேறொன்றுமில்லை யாதொருவரும் இந்தக்கதையால் மோட்சமுண்டாகிறதும் இந்தக்கதையிலுள்ள சூட்சுமப்பொருளிலே புகுதவேண்டிச் சொன்னதென்றவாறு. ※ (இதனால்வருங்காரணங்கூறியது.

பொன்னுநான்மறை மால்வரையுச்சிமேன்
மன்னுமேக முழங்கியவாசகனைப்
பன்னுசீர்ப்பர மார்த்ததரிசனை
மென்னுநாமத் திவனையியம்புவாம்.

(இ-ள்.) பெரியமலையினுச்சியின்மேலே யிருக்கிற மேகங்குமுறிப் பொழிகிற வெள்ளத்தினாலே யுலகத்தை இரட்சிப்பதுபோல எல்லாரும் நினைக்கப்பட்ட நான்குவேதங்களுடைய சிரசின்மேலே யிருக்கிற

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி கெம்பீரமாக உபதேசித்த திருவார்த்தையை-எல்லாரு மோதப்பட்ட சிறப்பையுடைய பரமார்த்த தரிசனமென்று சொல்லப்பட்ட திருநாமமுடைய இந்தக் கீதையைத் தமிழினாலே சொல்லுவாமென்றவாறு. * (இதனானின்னூற்பெயரும் பயனும் கூறியது -இதனுள் வண்ணவுவமமும் வினையினுவமமும் பயனுவமமுங் கண்டுகொள்க. இவைநான்கும் பாயிரம் இந்த நூலுக்குப் பரமார்த்த தரிசனமென்றுகிரந்தப்பெயர்தமிழிற்பரமபொருட்காட்சியென்று மொழிமாறுபெயர் வழங்குகிறது.) (௩)

பாயிரம்-முற்றுப்பெற்றது.

— (*) —

முதலாவது.

# சோக அத்தியாயம்.

வாக்கியார்த்தம்.

கௌரவர்களும், பாண்டவர்களும், குருக்ஷேத்திர பூமியிலே சண்டைக்குப்போன அன்று திருதராட்டிரன் சஞ்சயனுடனே விசாரப்பட்டுக் கொண்டிருக்கையிலே வியாசமஹா முனிவந்து விசாரந்தீரச் சொன்னார் கேட்ட திருதராட்டிரன் சண்டையைப் பார்க்கமாட்டேன் கேட்கவேண்டுமென அதற்கு நல்லதென்று சஞ்சயனுக்குத் தூரப்பார்வையுந் தூரக்கேள்வியு முண்டாகவும் ஆயுதம்படாமலும் முன்பின் வாராமலும் திரிகால ஞானமுமிருக்கத்தக்கதாக வரங் கொடுத்தேன் இவனாலே எல்லாங் கேட்டறியென்று சொல்லப் போனார் அவர்போனபின் சஞ்சயன் சண்டைசமாசாரஞ் சொல்லிக்கொண்டுவந்த பத்தாநாள் இராத்திரி சொல்லுகிறதில் பீஷ்மருக்குச் சேனாதிபதிபட்டங்கட்டி முதனாள் சண்டைக்கு எதிர்த்துப்போர்க்களத்தில் நின்றபோது நடந்த செய்தி சொல்லுகிறது.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

புண்ணியபூமியென்னும் புகல்குருபூமிதன்னி
னண்ணியபின்னர்கண்ணா தவர்களுநமருமாங்குக்
கண்ணியதென்னையென்று கண்ணிலாவரசன்கேட்பத்
தண்ணளியினியசொல்லாற் சஞ்சயனுரைக்கலுற்றான்

(இ-ள்.) உலகத்திற் புண்ணிய பூமியென்று சொல்லப்பட்ட கீர்த்தி பெற்ற குருக்ஷேத்திரத்திலே சண்டைபண்ணவேண்டிக் - கூடின

பின்பு பகைஞராகிய பாண்டவர்களும் நம்முடையவர்களும் அங்கேகி னைத்த தென்னவென்று கண்ணில்லாததிருதராட்டிரன் கேட்க அதற் குக்குளிர்ந்த இனியசொல்லினுமேல சஞ்சயன் சொல்லத்தொடங்கினு னென்றவாறு. (க)

போர்முகமாகிநின்ற புல்லலார்படையைப்பார்த்துக்
கார்முகவுமானைய கலைமறையவனைநோக்கி
வார்முரசதிருந்தானை வாளரவுயர்த்தவேந்தன்
ஏர்முகின்முழக்கமென்ன வின்னனவியம்பலுற்றான்

(இ-ள்) தோலாற்கட்டின பேரிகை - முழங்கப்பட்ட - சேனைகளுடனே பிரகாசமுடைய பாம்பைக் கொடியாக வுயரப்பண்ணினதுரியோதனன் சண்டைமுகமாகிநின்ற சத்துருக்களான பாண்டவர்களுடைய சேனையைப்பார்த்து வில்லாகிய கலபையாலேபகைஞராகிய நிலத்தையுமுறிறவராகியசாஸ்திரவேதவல்லவரான துரோணரைப்பார்த்து நீருண்ட ஆகிய மேகமுழக்கம்போல இவ்வண்ணமாகச் சொல்லத் தொடங்கினு னென்றவாறு. (உ)

கொச்சகக் கலிப்பா.

வீமனையும்விஜயனையு நிகர்தருபோர்வில்லாள
ரேர்மருவுசிலையபிம னுள்ளிட்டாரெனப்பலருந்
தார்மருவுதலைவர்களாய்த் தலைப்பெய்ததானையினை
மாமருவுபெருந்தேராய் பாரென்றுமறித்துரைப்பான்

(இ-ள்) வீமனையும் அருச்சுனனையும்-ஒப்பாகத்தரப்பட்டசண்டைக்கு உபகாரமான ஆயுதங்களையுடையவர்கள் அங்கு தங்கின வில்லையுடைய அபிமன்னன் முதலான உள்ளிட்டாரென்ற அநேகரும் தம்பமாலைதரித்துச் சண்டைக்கு ஆயுத்தமான நாயகர்களாகப்பின்னிட்டுமுன்னிட்டசேனையைக் குதிரைகள்கட்டின பெரியதேரையுடைய ஆசாரியரே பாருமென்று திரும்பவுஞ்சொல்லுவா னென்றவாறு. (௩)

கலிவிருத்தம்.

கங்கையாள்பெறு காதலனுட்புக
ழங்கர்கோனென தாருயிர்த்தோழனு
நங்கள்வாழ்துணை நம்பியுநீயுமிங்
குங்களாருயி ரொருபொருட்டொக்குநீர்

(இ-ள்) கங்காநதி யாளைப்பெற்ற குமாரனாகிய பீஷ்மரும் கீர்த்தி பெற்ற அங்கதேசத்தாருக்கு அரசனென்னுடைய அரிய உயிர்த் தோழனாகிய கன்னனும்நம்முடைய செல்வத்துணையான - அசுவத்தாமாவும், நீருமற்றவிடங்களிலே பேறாக்குறைசொலா யிருப்பினும் அன்றியுமிங்கே என்னிமித்தமாக உங்களுடைய அரிய சீவன்களொ லொரு தகுதி நக்குந்தன்மை எ-று (௪)

அன்றியேயு மரசரனேகரால்
வென்றியேதர வல்லதுவேண்டலா
ரொன்றியேத மெனக்குறுமேலுயிர்
பொன்றியேயதுபோக்குதன்மேற்கொண்டார்

(இ-ள்) அல்லாமலும் என்மேலன்பினாலே வுங்களை யொப்பாசனு சையப்பட்டஅரசர் அனேகம்பேர் அவர்கள் எனக்கு வெற்றியேதர வேண்டுவர், வெற்றியல்லாத தோல்வியைவேண்டார் எனக்குஅவசிய மானகுற்றம்வந்துகலந்து வருமாகிற்றங்களுடைய சீவனைவிட்டேயக் தக்குற்றத்தைப்போக்கிச்செய்நதை வருவிக்கிறஉத்தியோகத்தைமே ற்கொண்டார்களென்றவாறு. (ரு)

எய்தவெங்கள் பிதாமகனேவலாற்
கைகொள்கின்ற கடற்படைகண்ணுறில்
வெய்யவீமன் வியப்பொடுகாத்திடு
மைவர்தம்படைக் காற்றவற்றாகுமோ

(இ-ள்) சேனாதிபதியாகிவந்து எங்கள் பாட்டனான பீஷ்மருடைய ஏவலினாலே கைகலந்து கொள்ளுகிற கடலையொப்பான் சேனையைப் பார்த்தாற் கொடுமையானவீமன் அதிசயத்துடனே காக்கப்பட்டபஞ் சவர்களுடையசேனைக்கு ஆற்றத்தக்கதாகுமோ எ-று, இக்கனுள்வீமன் மேற்றனக்கிருக்கின்ற பயத்தைச் சேனைமேல்வைத்துச் சேனை நடுங்கு மென்றுபாட்டனிடத்தில்சொன்னான், சேனையைச்சேனாதிபதிகாப்பார்நம க்கென்னவெனன்று பயமுறுகையாயிராமலுந்தெரிவிப்பதுகுறிப்பு. ௬

மேல்வகுத்தது மாமின்விரைந்தெனு
மேல்வயிற்றிறல்யாதவர்தம்மொடுங்
காலவளைத்தசிலைக்கங்கையாண்மகன்
வால்வளைத்திரடன்னையும்வாய்மையா

(இ-ள்) இனிமேல் யூகாகாரமாக வகுத்தவிடத்தில் எவரெவரை யெவ்வெவ்விடங்களிலே யெங்களபாட்டனார் வைக்கிறாரோ, அவ்வ வ்விடங்களிலே அவரவரிருந்து அதைச்சீக்கிரப்பட்டுக்காத்துக்கொ ள்ளுங்களென்கிறபோது திறமையுடைய யாதவர்களுடனேயிந்து நாணையேற்றிக் காலவளைத்து வில்லைத்தரித்த கங்காபுத்திரனாகிய பீஷ்மர் வெள்ளைநிறமாகசங்குக்கூட்டங்களை வாயில்வைத்து-எ-று ()

வஞ்சர்செய்த வினைமறவிக்குண
வெஞ்சமர்விளைந்தென்னவும்வேந்தர்கோ
னெஞ்சமுண்மகிழ்வெய்தவுநேரலா
ரஞ்சவுங்கனன் றார்த்தனர்சங்கமே

(இ-ள்) வஞ்சகர் செய்தகாரியம்யமனுக்குப்பொசிக்கக் கொடுமை யான சண்டைவிளைந்தததென்னவும் இராஜாதிராஜனான துரியோதன

னுடைய மனமானது உள்ளேசந்தோஷமடையவும் பகைஞரான பாண்டவர்கள்பயப்படவும் கோபித்துச் சங்குகளை முழக்கினார்கள் (எ-று)(மேரென்றபாட்டும் வஞ்சகனென்றபாட்டும் ஒருதொடர்)

கலிநிலைத்துறை.

ஆர்த்தனவளைகளெங்கு மதிர்ந்தனபல்லியங்கள்
போரத்திடப்படைநின்றிப்பாற்புவனமீரேழும்பூத்த
தீர்த்தனுந்தனதுசங்கைச் செங்கையால்வாங்கிக்கொண்டு
கார்த்திரண்முழக்கமென்னக் கடல்கலங்கார்த்ததென்ன.

(இ-ள்) சங்காகள்முழங்கினபலவாத்தியங்களுமெங்குமதிர்ந்தன சேனைநின்று இந்தப் பூமியைபோர்த்துக்கொண்டது போலநிறைய அப்போது பதினாலுலகத்தையும்பெற்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமியுந்தம்முடையபாஞ்சசன்னியமென்கிற சங்கைச் சிவந்ததிருக்கையாலே வாங்கிக்கொண்டுமேகக்கூட்டங்களின் முழக்கமென்று சிலர்சொல்ல ஏழுகடலுமொன்றாகக் கூடிப்பொங்கியெழுந்துமுழங்கினவென்று சிலர்சொல்ல.(எ-று) (கூ)

கலிவிருத்தம்.

வையமனைத்தையும் வாரிமுன்வைக்குஞ்
செய்யதிருப்பவ ளத்திடைவைத்தா
ரைவரொமக்குயி ராதலினாலே
யுய்வதுமக்கிலை யென்பதையொத்தே

(இ-ள்) முற்காலத்திலே பூமியெல்லாவற்றையும் வாரியுள்ளேவைக்கப்பட்ட சிவந்தபவழத்தையொப்பான திருவதரத்தில்வைத்துமுழக்கினார் - அதெப்படியிருந்ததென்றால், பஞ்சவர்களெமக்குச்சீவனாகையாலே தப்பிப்பிழைப்பது உமக்கில்லையென்று அண்டகடாகமறியச்சொன்னதையொத்த தென்றவாறு. ஆர்த்தனவென்றகவியும், வையமனைத்தனவென்றகவியுமொருதொடர், சகலசீவன்களும் உயிராயிருக்கின்றநமக்குப் பாண்டவர்களுயிரொன்பது இருபைஉமக்கரிதென்று பாடமாயில், உங்களுக்கரிது பஞ்சவருக்கெளிதனவரும் இல்லையென்பது, அரிதென்பது-சந்தேகம். ஆகையாலேசந்தேகமாகத்தெய்வஞ்சொல்லாததினாலே அரிதென்றபாடம் ஓதக்கூடாது

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

தருமன்பவிமனருச்சுனனகுலன்சகாதேவன்
திருமருவுவிசயம்பவுண்டரங் தேவதத்தமெழின்
மருவுசுகோடகமணிபுட்பகக் கொடுமெனவியற்றி
யுரமனையகுரலெதிர்ந்தோர் செவிப்போர்ப்பவூதினான்

(இ-ள்) இப்படிச்சுவாமி யானவர்பாஞ்சசன்னியமென்கிறசங்கை யூதினவுடனே தருமராஜா சிறப்புப்பொருந்திய விசயமென்கிறசங

கம்பலமுற்றான் வீமன்பவுண்டரமென்கிற சங்கம்-அருச்சுனன் தேவதத்தமென்கிறசங்கம் நகுலன் அழகுபொருந்தியசுகோஷமென்கிறசங்கம்-சகாதேவன்மணிபுட்பகமென்கிற சங்கம்-இப்படியென்றுபெயருடைய இந்த ஐந்துசங்கினும இடியையொப்பான குரலானவுபலைகளுடையன காதுகள்செவிடுபடவூதினார்கள் (என்று.) (௰௧)

சந்தவிருத்தம்.

ஒன்றலாதுபலவூதினார்கள்பலருந்தும்வால்வளைபிறேறுசைபோய்நி
ன்றகௌரவர்கணெஞ்சையூடுருவிவிஞ்சுவானிலுயரப்புமேல், வென்
றிசேர்மர்தொடங்குமெல்லேயினில் வெள்ளிமாகடவுதேரின்மே. னின்
றபோர்விசயனென்றுமாயனெதிர்நில்லலாமையெடுசொல்லுவான்,

(இ-ள்) மற்றுமுள்ளராஜாக்களொன்றல்லாதனேகஞ் சங்கையூதினார்கள் இப்படி அனேகரும் ஊதின வெள்ளைச்சங்குகளுடைய சத்தமானதுபோயெதிராகநின்றகௌரவர்களுடைய நெஞ்சுகளுள்ளேபுகுந்து பிறகேபுறப்பட்டுவளர்ந்து யாதாலுநிரம்பாத ஆகாயத்திலும் நிறைய அதற்குமேலிரண்டுசேனையும், வெற்றிசேரப்பட்ட சண்டைதொடங்குகிறபொழுது வெள்ளைக்குதிரைகளாலே நடத்தப்பட்டதேரின்மேல்நின்று சண்டைசெய்யயத்தனப்பட அருச்சுனன் அந்தத்தேரின்மேலேநிற்கமாட்டாதசோகத்துடனே சுவாமிக்கு எதிரேயொருவசனஞ்சொல்லுவானென்றவாறு. * (வானிலுமென்ற உம்மைச்சிறப்பும்மைநிற்கமாட்டாமையா லதுகள்ளாடல். (௰௨)

யாவர்போர்கருதிவெய்தினார்களொதி ரெய்திநின்றுவிவர்தங்களில்
யாவரோடமர்தொடங்கலமெனவறிந்து கொள்ளுமளவியாவையுங்
காவல்பேணியவைதந்து பின்னழவ கரந்துகொண்டருள்செய் கண்ண
னே. மேவுநீ கடவுமாகொடேநிறுத்துவாயென்விளம்பினான்

(இ-ள்) எல்லாவற்றையுங்காவலாகவாதரித்து அவைகளையுண்டாக்கிப்பின்பு அவற்று ளொளித்துக்கொண்டருளப்பட்ட சுவாமியெதிராகவந்துநின்ற விவர்களில்யார் சண்டையைநினைத்துவந்தார்கள்யாரோடே சண்டைதொடங்கலாமென்று அறிந்துகொள்ளுகிற மட்டுமனம்பொருந்தநடத்தப்பட்ட குதிரை பூண்டிருக்குந்தேரைநிறுத்துவாயென்றுசொன்னானென்றவாறு. (௰௩)

விளம்புமவ்வளவின்மேகவண்ணனும் மவ்வெள்ளைமாகடவுதேரி
னைக்களங்கொளும்பரிசுநின்ற சேனைநடுவே கடாவிவிதுகாணென
வளங்கொள்கங்கைமக னாதியாகமுடி மன்னர்யாவரையு முன்னுறத்
துளங்குகின்றமுடி யோடுநெஞ்சினொடு வல்லவாறுசிலசொல்லினான

(இ-ள்) சொல்லப்பட்ட அவ்வளவில் மேகநிறமானசுவாமியும் அந்தவெள்ளைக்குதிரைகளாலே நடத்தப்பட்ட தேரைப்போர்க்கத்தின்னவ்வெவ்விடங்களிலுநிறையக்கொள்ளும்படி நின்றசேனைக்

ஓதலாகாநிமித்தங்களஃதேயல்லடலவுளவாங்
காதலாரைக்கொன்றுபெறும்பயனேவொன்றுங்காணேனு
னுதலாலிவ்வென்றியுடனரசினுரிமையானதனை
ஏதலாவதெய்யின்றறியாஇன்பொருட்டோவியம்பாயால்

(இ-ள்) சொல்லலாகாதநிமித்தங்களொன்றுதானே அல்ல அனேகமுண்டாகிறது என்மேலே அன்புடையவர்களைக்கொன்று பெறப்பட்ட பிரயோசனமோ நான் ஒன்றுங்காணேன் ஆதலால் வெற்றியுடனே அரசுரிமையான அதனைவிசாரிக்கில் எனக்கு குலநாசனென்றேஈகிற ஏச்சாகிறது இப்போது இந்தச்சண்டையென்ன நிமித்தமோ சொல்லுவாய்—எ-று. (௰௮)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அரசவ்வரசால்வரும்போக மதனாலின்பமெய்துமென
உரைசெய்பொருளாகளியாவர்சிலர்பொருட்டாலுலகையுழந்தடைவ
ர், வரைகொள்புயமேனமற்றவர்தம் பொருளுந்தங்கள்வாழ்நாளும்
நிரைசெய்தொருவரொருவரின்முன் னீக்கிவந்துநின்றாரால்.

(இ-ள்) மலையைக்குடையாகக்கொண்ட புயத்தையுடையசுவாமி அரசுஅந்த அரசால்வருகிறபோகம் போகத்தினாலேவருகிற சுகமென்றுசொல்லப்பட்ட மூன்றுபொருள்களையுஞ் சிலபேர்நிமித்தமாகவருந்தி யாதுபூமியையடைவார்களோ அவர்கள் தங்களுடைய அரசுபோகம் சுகமென்கிறமூன்றுபொருள்களையும் தங்களுடைய ஆயுசுகளையும்விட்டுவந்து வரிசைவரிசையாக ஒருவர்முன்னே யொருவர் நின்றார்கள்-எ-று. * அரசுபோகஞ்சுகமென்ற மூன்றுபொருளு மூன்றுபேறு-அவை தகப்பன் தாய் குரு சிநேகர் உறவினர்பெரியவர்கள நல்லவர்கள் இவர்கள் முதலானபேர்களனுபவிக்கவேண்டிப் பெறுகையால். இப்போது இந்தச்சண்டையில் இவர்களைக்கொன்று பெறுவதாகவிருக்கின்றது அதேதென்னில் இவர்களே எனக்குமுன்னே யெனக்குமுன்னேயென்று அவசரப்பட்டு ஒருவர்முன் ஒருவர்வந்து நிற்கையால் இவர்களைக்கொன்றுவரும் பிரயோசனம்ஆகாதென்பதுகுறிப்பு. (௰௯)

ஆனபொருளீதாதலினு லவரைக்கொன்றாலருள்சேரா
தீனமல்லாலெங்களுக்கோ ரின்பமெங்குமில்லையால்
கூனவரிவிற்கொண்டென்னைக் கொலினுமவரையான்கோறல்
வானம்பெறினுமினிவேண்டேன் மண்ணின்பொருட்டால்வல்லேனோ.

(இ-ள்) இந்தச்சண்டையினாலான பொருளிது ஆதலாலவரைத் தயையில்லாமற் கொன்றாற் குற்றமேயல்லாமல் எங்களுக்கு ஒருசுகமாகிலும் எங்குமில்லை - ஆகையால் வளைந்து வந்தவில்லைக்கொண்டு அவர்கள் என்னைக்கொன்றாலும் அவர்களை நான்கொல்லுகிறது பொருட்டு தேவலோகத்தைப்பெற்றாலும் இனி ஆசைப்பட்டேன்-இப்படி

த்ரைலோக்யத்தை வேண்டிக்கொல்லாத நான்மண்ணுலகநிமித்தத்தாலே கொல்லமாட்டுவேனோ மாட்டேன்-எ-று. (௨௰)

கொற்றவா தங்குலங்கெடுத்தால் வருகின்றகுற்றமுமெய்
யுற்றவர்தந்திறம்பிழைத்தா லுறுகின்றவுயர்பழியு
மற்றவர்களறியாது மறந்திடுகமறந்தாலுவ
குற்றமெனவறிந்தவியான் குறிகொள்ளாதொழிவேனோ

(இ-ள்) இராஜாக்கள் தங்களகுலத்தைக்கெடுத்தால் வருகிறகுற்றமும் சத்தியசந்தமானவர்கள் தங்களுடைய ஒழுக்கத்தை விட்டால் அடையப்பட்ட பெரியபழியும் அவர்களறியாததற்குமுன்னேமறக்கவேண்டும், அப்படிமறந்தாலும் ஆகாது செய்தாற்குற்றமென்றறிந்தயான் இனியெப்போதும் நினைவாயிருக்கிறபடிக்கு இடமாய்க்கொள்ளாமல மறந்துவிடுவேனோ விடேன் எ-று. * (இதிலநினைவால்மறந்து ஆயுதமானேன் இனி அறிந்தபின்பு அதையெப்புக்கொளளேனென்பது குறிப்பு) (௨௧)

குலங்கெடவேவருகின்ற குலதருமங்கெடுதரும்
நலங்கெடவேகுலம்பாவ தன்னுமதுமன்னனே
இலங்கிழையார்நெறிதிரிவ ரிவாகநெறிதிரியவே
தலங்குலவுமுறைமையெலாந் தலைதடுமாறுகுமால்.

(இ-ள்) குலநாசமாகவே அநாதியாகத்தொடர்ந்துவருகிற குலதருமம நாசமடையும், குலநலமானதருமமழியவே குலத்தைப் பாவமூடிக்கொள்ளும், அந்தப் பாவங்கள கூடினமாத்திரத்திலே பிரகாசிக்கிற பொன்னாலும் மணியாலுஞ்செய்த ஆபரணம் பூண்டபெண்கள் தங்கள மானத்தைக கப்புவார்கள்-இந்தப்பெண்கள பதிவிரதாமார்க்கத்தைத்தப்பி விபசாரியமபண்ணவே பூமியிலேவழங்கின வரிசையான முறைமையெலலாந் தலைதடுமாற்றமாரும்-எ-று (௨௨)

தடுமாற்றமக்குலத்தைச் சார்ந்தார்க்குஞ்சாராதே
கெடுமாறறவினைத்தவர்க்குங் கெடாநிரயமிடைப்பிக்கும்
படுமாறறமெனனுனைகமேன் பண்டிறந்தோர்களுக்குமக்கொன்
றிடுமாற்றலவாகளபெறு திருணரகத்திழிவர்களால்

(இ-ள்) முறைகெட்ட தடுமாற்றம்சங்கரமான அந்தக்குலத்தை [illegible] அந்தக்குலத்தைக தான்சாராமல் அழியும்படி [illegible] ந்தககாலமும் அழியாத நரகத்தையனுபவிக்க [illegible] ணவசனத்தை யென்னசொல்லுவேன் [illegible] ர்களுக்குந் தங்களுக்கிடுவதொன்றுன பி [illegible] ள இவைகளில்லாத்திறலே பெருமயிருணடநரக [illegible] ர்களிறங்குவார்கள்-எ-று. * (இது அதோகதியான நரகிலே தலைகீழாகவிழுவது.) (௨௩)

சாராநின்றகுலமயங்கப் பண்ணினோர்க்குமற்றவரை
சாராநின்றகுலத்துக்குந் தருமங்களர்ந்துசாயுமாற்

சார்ந்தபின் றகுலந்தருமமிரண்டுந்தளர்ந்துசாயவே
பேராநிரயமெய்துமெனப்பெரியோர்யாரும்பேசுவரால்.

இ-ள்) பூமியுள்ளநாள்முதலாக வரப்பட்டகுலத்தை மயக்கப்பண்ணிச் சங்கரமாக்கினவர்களுக்கும், அந்தக்குலத்தைக்கெடுத்தவர்களைச்சார்ந்து நின்றகுலத்தாருக்குந் தருமங்கெட்டு விழுந்துபோம் இந்தவுலகத்தைச்சார்ந்துநின்ற குலமென்றும், தருமமென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டும் நிலைகெட்டுவிழவே அந்தமனிதர்களுக்கு நீங்காத நரகங்கிடைக்குமென்றுபெரியோரெல்லாருஞ் சொல்லுவார்கள்-எ-று. * (குலத்தாருங் குலத்தைக்கெடுத்தாரும் நரகத்திலெக்காலமு மிருக்கவேண்டுமென்பதினாலேபோராநிரயமென்றார்.)

மின்னேயனையசெல்வத்தை வேண்டித்தங்கண்மெய்யுயிரைக்
கொன்னேகழிக்கநின்றவரைக் கொல்லத்துணிந்தகொடுவினையே
னென்னேகொடியபெரும்பாவ மெய்தநினைந்தேனியானுமிவர்
முன்னேபடைவிட்டமர்துறந்துநின்றாலிவர்கண்முனிவாரோ

(இ-ள்) மின்னலையொப்பானசெல்வத்தைவேண்டிதங்களுடையசரீரத்துயிரை வீணிலேபோக்க நின்றவர்களைக்கொல்லத்துணிந்தகொடும்பாவியான நான் என்னமோகொடுமையானபெரியபாவத்தையடையநினைத்தேன் நானும் இவர்கள்முன்னே ஆயுதத்தைவிட்டுச்சண்டையைவெறுத்துநின்றால் இவர்கள்கோபிப்பாரோ கோபியார்-எ-று * (மின்காட்டின அந்தக்ஷணமேமறைகையாற் செல்வம்நிலையாதென்பது கருத்து.) (உ௩)

கலிவிருத்தம்.

கொல்லினுமெனக்கது பொறுக்கைகுணமென்றே
கல்லினுயர்தோல்விடலை கண்ணனெதிர்கூறி
வில்லுடனேபகழி சோரவிழிசோரச்
சில்லிமணியாழிபொரு தேர்மிசையிருந்தான்

(இ-ள்) நிராயுதனென்றுபாராமலென்னைக்கொன்றாலும் அதுபோறது எனக்கு ஸுகிர்தமுமல்லது என்று மலையையொப்பாகவுயர்ந்த தோள்களையுடையகாளையாகியஅருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணசுவாமிமுன்னேசொல்லி வில்லுடனே அம்புநழுவக் கண்களாநீர்துளிக்க அழகியவணடிலானதுஇடியைப்போலபூமியைப் பிளக்கப்பட்டதேர்மேலிருந்தான்-எ-று. (உ௪)

சோக அத்தியாயம்-முற்றுப்பெற்றது.



பாயிரமுட்பட ஆகதிருவிருத்தம்-௬௰,



இரண்டாவது

# சாங்கியயோக - அத்தியாயம்,

———(*)———

கொச்சகக்கலிப்பா.

இவ்வண்ணமறிவொதுங்க வெழுகின்றவிரதத்தாற்
செய்வண்ணமறியாது திகைத்திருந்ததேர்விசயன்
உய்வண்ணமதுநாடி யொருவண்ணமுலகோதுங்
கைவண்ணமலருடைய கார்வண்ணன்கட்டுரைப்பான்

(இ-ள்) இந்தப்படிக்கு அறிவுவிலக வெழும்புகிற தயையினாலேசெய்யத்தக்கதை யறியாமற்றிகைத்துத் தேரிலிருந்தஅருச்சுனன் மயக்கந்தீர்ந்து பிழைக்கத்தக்க தென்னவென்று ஆலோசனைபண்ணிஉலகத்தார்தோத்திரம்பணணக் கொடுத்தருளுகின்ற செந்தாமரைப்பூவையொப்பானதிருக்கையையுடைய மேகநிறமான ஸ்ரீகிருஷ்ணசுவாமிஉபதேசமார்க்கங்கள அனேகத்தில் ஒருவிதத்தைச் சொல்லுகிறார் எ-று.* இரக்கமாவது பகைஞரைகம்முடையவர்களென்றும் அபிமானத்தாலெழும்புகிற இரக்கம்.) (க)

ஆயாதவர்க்குமலிகட்கு மடுப்பதழியாப்பழியினது
தேயாவறிவைத்தேய்ப்பதற்கச்சிறுமைகளினுஞ்சிறுமையது
சாயாநரகத்திடைசாய்ப்பதுன்போல்பவர்க்குத்தகாததுவந்
தேயாநிலததிலுனையயவெவ்வாறடைந்ததெனவறியேன்

(இ-ள்) ஐயா வேதசாஸ்திரங்கள் விசாரியாதவர்களுக்கும்ஆணும் பெண்ணுமல்லாத அலிகளுக்கும் அடுப்பது தீராதபழியையுடையது, கெடாவறிவைக்கெடுப்பது மெத்தவும் அற்பமானவைகளிலும்அற்பமானது - ஒழியாதநரகத்தினிடத்திலே விழப்பண்ணுவதுஉன்னை யொப்பானவர்களுக்குத்தகாதது - இப்படிக்கொத்தஅஞ்ஞானம்வந்து இந்தப்போர்க்களத்திலேவுன்னையெப்படி யடைந்ததென்றறியேன் எ-று. (உ)

ஒவ்வாதிதொழிந்தமர்மேலொருப்படுகென்றுருக்கரிய
செவ்வாயின் திருமொழியத் தேர்விசயன்செப்புவான்
மெய்வாயினெடுமனத்தான்மிகப்போற்றற்குரியாரை
எவ்வாறுகொலைபுரிவே னென்றிவ்வாரியம்பினன்.

(இ-ள) இந்த அக்கிபானம் பெரியோர்களுக்குஒவ்வாதுஇதைவிட்டுஉயித்தியத்தின்மேலே ஒருமைப்படுவென்றுகரியதிருமேனியுஞ்சிவந்தவாயுமுடையசுவாமி திருவாக்கருளிச்செயயவிசாரிக்கிறஅருச்சுனன் சொல்லுவான்-மனோ வாக்குக்காயமென்கிறமூன்றுகரணத்தா

(இ-ள்) செந்தாமரைப்பூவையொப்பான திருக்கண்களையுடைய மேகவண்ணனே சபிப்பிழைத்துப்போகப்பட்ட வழியைக் கேளாமற் சொல்லுவேனோவென்று திருவுள்ளத்தில் நினைத்தருளவேண்டாம் அடைக்கலம்புகுந்துவிட்டேன் உம்முடையமறைவுபுகுந்தேன் இடைவிடாதபத்திசெய்தேன் உம்முடைய சிஷ்யனாக உனதுதிருவடித் தாமரைகளை அடியேனுடைய சிரசிலேதரித்தேன் பயப்படாதேயென்று இங்கே அடியேன்செய்யவேண்டியகாரியங்களை யேவல்செய்தருளியாளுவாய் - எ-று. (௭)

கலிவிருத்தம்,

மண்ணாளுநர்பெருஞ்செல்வமன்றியேமாயாத
விண்ணாடுபெற்றிடினுமென்னுடையமெய்யுணர்வு
நண்ணாமலடுதுயரநலியாமற்காப்பதனைக்
கண்ணாலிங்கெவ்விடத்துங் காணகிலேனெனக்கலுழ்ந்தான்.

(இ-ள்) ஆளப்பட்ட பூமியை யாளுகிறபெரியசெல்வமு மல்லாமல் அழியாத தேவலோகத்தைப்பெற்றாலும் என்னுடைய மெய்யான அறிவுசேராமல் நெருக்கப்பட்ட துக்கமானது என்னை வருத்தாமற்காக்கப்பட்டதை இங்கே எந்தவிடத்திலேயுங் கண்ணாலேகாணேனென்று அழுதான் — எ-று. (அ)

நெய்ம்மார்பிற்சொரிவதென நெடுங்கண்கணீர்சோர
விம்மாநின்றவன்காதல் வெந்தீயால்வேவாமே
கைம்மாறொன்றின்றியுயிர் காக்கவேகடன்பூண்ட
வம்மாயன்றிருவாய்மை யருண்மாரியாலவிப்பான்.

(இ-ள்) மார்பிலே நெய்சொரிவதுபோல நீண்டகண்கள் நீர்சிந்த விம்மி விம்மிநின்ற அருச்சுனன் உறவின்மேல்வைத்த ஆசையான உஷ்ணமுள்ளநெருப்பாலே வேகாமல் முன்னேதானே பிரதியுபகாரமில்லாமற் பஞ்சவர்களுடைய சீவனைக்காக்கிறதேகடனாகப்பூண்ட அந்தகிருஷ்ணசுவாமி திருவாக்கிலேபொழியப்பட்ட கிருபையாகியமழையால் அவிக்கவேண்டி — எ-று. (௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னையன்னதிருநகைகொண்டருளிவிரைத்தாமரைநாறும்
பொன்னையணியுந்திருமார்பன் போகாததுயர்போம்பரிசெண்ணி
முன்னைமறைகளெடுத்துரைத்துமுடியாப்பொருளைமுதற்பொருளாய்
தன்னையுள்ளபரிசவர்க்குந் தானேசாற்றத்தொடங்கினர்.

(இ-ள்) பரிமளித்த பொற்றாமரைப் பூவினிற்றோன்றிய மகாலட்சுமியைத்தரித்த திருமார்பையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமி மின்னலையொப்பான திருநகை கொண்டருளி எப்போதும் போகாத துக்கம் போம்படிக்கு நினைத்தும் பழையவேதங்களெடுத்துச்சொல்லியு முடியாதபொருளை முதலானபொருளினாலே தன்னையுள்ளபடி அந்த

இவ்வகை யதாகிலழல் சீதமிடரின்பந்
செய்வகையிலா தறிவு சேர்க்குவதே கொன்னில்
மெய்வகையினுமிவை விளைத்ததாமேய
ன்வகையினுய்புல னும்பொறியுமையா.

(இ-ள்.) இப்படிச்சொன்னதைக்கேட்ட அருச்சுனன் சொல்லுவது இந்தப்படி சனனமரணம் ஆன்மாவுக்கு இல்லாவிட்டால் உஷ்ணம், சீதளம் துக்கம், சுகம், இவைகளைத் தன்னுடையதல்லவென்று செய்யும்படியில்லாமல் ஆன்மாவிலேசேர்ந்து சுட்டதென்றுங்குளிர்ந்ததென்றும் கிலேசித்துஞ்சந்தோஷித்துஞ் செய்வதென்னவென்று கேட்டதற்கு ஸ்ரீகிருஷ்ணசுவாமிவாக்கியம் அச்சுப்பேதத் தேகவிதங்களினுமிவைகளுண்டாக்கிவருவன துக்கசுகத்தைப் பஞ்சீகரணபேதத்தினுலுண்டாகிய பஞ்சதன்மாத்திரைகளாகிய சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்கிற ஐந்து ஞானேந்திரியமாகிய மெய், வாய் கண், மூக்கு, செவி, யென்கிற ஐந்துவுருவாய அடைந்து அநுபவிப்பதல்லாமல் ஆன்மா அநுபவிப்பதல்லவை—எ-று. (௰௬)

கொச்சகக்கலிப்பா.

சீதமழன் முதலவற்றின் செயலகேட்கிலநித்தியமாய்ப்
போதலொடுவருவனவா யிருக்குமவைபொறுநீயு
மாதலிலென்பயனென்னி லவைபொறுத்தபெரியோரை
ஏதமவைநிலைகலக்கா தவன்வீடெய்துவனல்.

(இ-ள்) சீதள, உஷ்ணமுதலானவைகளின் செயலைக்கேட்கில் அநித்தியமாய்ப்போகிறதும் வருகிறதுமாயிருக்கும் அவற்றைப்பெரியோர்கள் பொறுப்பார்கள நீயும் பொறுத்தால் ஆகிறபிரயோசனமென்னவென்றால், அவைகளை சமமாகப்பொறுத்த பெரியோரைக்குற்றமான அந்தச் சீதளஉஷ்ணமுதலானவை நிலைகலக்கிவாதியாது அவர் மோக்ஷத்தையே அடைவாராகமடையார் —எ-று. (௰௭)

மண்ணினுயவிகாரமுமம் மண்ணேயதமன்றொழிந்து
பண்ணினருமற்றிலலைப் பணணப்பட்டபலபொருள்க
ளெண்ணவருங்காலமுமதுமற் றிறந்தவிடத்துநிகழ்விடத்துங்
கண்ணினுடின்மன்றொழியக் கண்டாருளரோகட்டுரையாய்.

(இ-ள்) மண்ணிலுண்டாகிய விகாரங்களான கடமுதலானவெல்லாம் அந்தமண்ணேயல்லாமல் வேறல்ல-அந்தமண்ணைவிட்டுமற்ற அப்பு தேயு வாயு ஆகாசங்களாலே கடமுதலானவைகளைப் பண்ணினபேருமில்லை-அப்படிப்பண்ணப்பட்ட பலபொருள்கள் நினைப்பாலுண்டாகிய வருங்காலத்திலும போங்காலத்திலும் இப்போது நடக்கிறகாலத்திலும் நினைத்து விசாரிக்கில மண்ணைத்தவிர வேறுபூதங்களாகக் கண்டபெயருண்டோசொல்லுவாய்-எ-று. * கண்ணினுனென்றுபாடமாயிற்

கண்களினாலே பார்க்கிலென்றுரைகொள்ளும் - அப்படியுரைசெய்தால் கண்டதுமெய் காணாதுபொய்யென்ற சாருவாகமதமாம் அதுகூடாது ) (௰௮)

கலிவிருத்தம்.

வையாரயிலுழுவாவதன் வகையேயதன்வகைகேண்
மெய்யாதுநசியாதித னுடன்வேறெனவிரவும்
பொய்யானதுநிகழாதிவை புலனாகியபொருளே
ஐயாவெனையறிவாரிவை யறிவார்பிறரறியார்.

(இ-ள்) கூர்மைபொருந்திய ஆயுதத்தினாலே பகையரசரானபூமியையுழுது விளக்கப்பட்ட அருச்சுனா அந்தந்தப்பூதங்களாலாகிற இதங்கள அதனதனாலேயாகிறதல்லாமல் ஒருபூதத்தின்தொழிலை வேறொரு பூதஞ்செய்யமாட்டாது - அதனதனாவிதத்தைக்கேள் சத்தியமான ஆன்மாவானது அழியாது இந்த ஆன்மாவினுடனேவேறான அநான்மாவென்றுகலக்கப்பட்ட பொய்யானதேகமானது நித்தியமாகாது-இந்த அருத்தம் அறிவாலுண்டாக்கிய பொருளேயல்லாமல் வேறல்ல-ஐயா இந்த அர்த்தத்தை என்னையறிந்தபேரறிவார்கள் - அறியாதவர்கள் இதையறியமாட்டார்கள்-எ-று * (தெய்வத்தை கர்த்தாவென்றும், ஆன்மாவை யகர்த்தாவென்றும் உடலை யநான்மாவென்றும் வழங்கப்படுகையால் வேறெனவிரவுமென்றும்பாடினார்-பொய்யைத் தேகமென்றும் மெய்யை ஆன்மாவென்றும்சொன்னதேதென்னில், இவ்விடத்திற் சொன்னதெல்லாம உடலுயிரண்டின் செய்தியாகையாலும் உடல்மாயாசம்பந்தமாயழிகையாலும், உயிர்நித்திய ஞானசம்பந்தமாயிருக்கையாலும் சொன்னது.) (௰௯)

யாணும்வகையதுகேளெழு மொலியேமுதலியாவும்
மாணுதியில்வருபூதமும வருநால்வருமிடர
யாணுதெழுமறியாரையு மறிகாரணமதுவாய்ப்
போனொடுவருநாள்வழிபுணராததோர்பொருளே

(இ-ள்) நானாகிறவிதத்தைக்கேள் அருச்சுனா, எழும்புகிற சத்தமுதலான அஞ்சும் ஆகாசாதிபூதங்களில் வரப்பட்ட மகாபூதங்களும் உண்டாகிறகாலம் வருமிடமாய் நீங்காமலெழும்பப்பட்ட அறியாரையும் அறியப்பட்ட காரணமாய்ப்போகிற காலத்துடனேவருகிற காலத்தின் வழியைப் பொருந்தாத பொருளேநான் -எ-று, * (மகாபூதமாவது பஞ்சீகரணத்தில் ஒன்றோடொன்று கலக்காமல் நிறை மூலப்பாகபூதம் இந்தமகாபூதங்களுண்டாகிறகாலம் பிறக்கிறவிடமாய்அறியாரையும் அறிவாரையும் அறியப்பட்ட காரணமாய் திரிகாலத்தைச் சேராதபொருளே நானென்றது.) (௨௰)

அழியாதமெய்யஃதியாதெனி லவிகாரத்தையுருவா
யொழியாநிறைவொடுதூய வென்றியானெனவுணரா
வழியாமதியியல்பாலிது சிலமாறுகொளநுவதாய்
மொழிவார்செயன்முடியாமையின் முயலார்கெடவயலார்,

(இ-ள்) அழியாத சத்தியமெதுவென்றுகேட்கில் விகாரமில்லாத அஃது விகாரத்தையுருவமாய் அணுவளவிடமாகிலும் விட்டொழியாமல் நிறைந்தபரிபூரணத்துடனே வளர்ந்தது, எனதெனகிறசுத்தமும், நானெனகிற ஆங்காரமும அறியாதவழியானது அதுசுபாவத்தினாலே இது சிலவேறுபாடுகொள்கிறதாய்ச சொல்லுவாருடைய சொலலுந் தொழில்முடியாததினாலே முயற்சிபண்ணுாக நினைக்கப்படாததாயச் சேடத்துக்கு அன்னியராயிருப்பது ஆன்மா-எ-று. * (சிலமாறுகொளுவதாவது மாயையுடனேகூடியபோது தேகியாய்ச் சுதந்தரியாய் ஆங்காரியாய் நிற்பது கருததது.) (உக)

இல்லாமையிலிபல்கேளெழு கழுதாழியினடையே
யல்லாதெழுவினபோலழி வுறவேயழிகுதலா
லெல்லாவகையினுமாயத்தில வுருவேயழிவதுதான்
கொல்லாதழிகொலையானது குறுகாததனெறிகேள்.

(இ-ள்.) இனி எப்போது மில்லாதது இருந்தும் உள்ளதுபோலக் காணுகிற தேகத்தினுடைய சுபாவத்தைக்கேள அருச்சுனா. கோடையிலெழும்புகிற பேய்த்தேராகிய கானலினிடத்திலே நிச்சயமான சலமலலாமற் பொய்யாகவெழும்பப்பட்ட சலத்தைப்போல அழிவுண்டாக அழிகிறதினாலேபொருந்காத விதத்தினாலும், பொருந்தும் விததினாலும் உண்டாகிய இந்தத்தேகமே யழிவது-ஆன்மா அழிவதில்லை-அது அவிகாரியானதினாலே தான்கொலலாது - தான் மலலாவற்றிற்கு மன்னியமானபடியால் அதைக் கொலையானது சேராது-அந்த ஆன்மாவினுடைய சுபாவத்தைக்கேள் என்றவாறு, * (கொலைசேராதென்பது அதை யாராலும கொலலப்படாதென்பது எல்லாவகையிலுமென்ற உம்மை எதிரதுதழுவிய உம்மையாகையால் ஒல்லும்வகையிலுமென் றெதிர்தழுவியது,) (உஉ)

கொச்சகக்கலிப்பா.

ஊறுபடவொன்றிலே பிறத்தல்பிறந்துளதாதல்
வேறுபடவளர்த்தல்வளர்ந்தயலொன்றாய்விளைந்தமைதல்
மாறுபடத்தேய்தலற மாய்தலெனவருகின்ற
வாறியல்பமுடமபன்றி யறிவடையாதாதனால்,

(இ-ள்) தூலசரீரமுண்டாக ஒன்றோடொன்றுபரிசப்பட ஒன்றிலே பிறக்கிறது பிறந்திருக்கிறது - அந்தபபருவம்வேறுபடவளருகிறது வளர்ந்துஅன்னியமான தொன்றாகவிளைந்து அமருகிறது

இவையல்லாவற்றிற்கு மாறுபட கிழத்தனமாய்க்குறைகிறது இந்தவைந்துந்திரச்சாகிறது என்றுவரப்பட்ட ஆறுசுபாவமும்உடலையல்லாமல்ஆன்மாவையடையாவாம் எ-று, * (அறிவையான்மாதென்றது அசேதனமானதேகத்தைநடத்துகையால்) (உஅ)

கலிவிருத்தம்.

இல்லாவுடற்கேநின்றேயு நித்தமாகியதுநாச, மில்லாததுபோய்ப்பிறப்பிறப்பொன்றறியாததுமற்றதுவறிந்தோர், கொல்லார்கொலையேவலுஞ்செய்யார் கொலைமேலிட்டிக்குலமறைக, ளெல்லாம்விதித்ததெழிவினையே யியம்பிற்றென்றேயிதுதெளிநீ.

(இ-ள்) நிலைமையாய்நில்லாமல் அழிகிறவுடலுக்கே ஆதாரமாகநின்றும். அந்தவுடலைப்போல் அநித்தியமாகாமல் நித்தியமாகியது அழிவில்லாதது பொய்யானபிறப்பிறப்பென்றஇரண்டிலொன்றுமறியாதது - ஆன்மா அதை அறிந்தவர்கள்சொல்லாற் கொல்லுவிக்கிறதுஞ்செய்யார்-ஈரலொன் றெநசாதிபான வேதங்களெல்லாம்கொலையைமேலிட்டுக் குலாசாரதன்மத்தைச்சொல்லிற்றென்று இதைநீதெளிவாம்-எ-று. * (ஆன்மாவைநித்தியமாய்நாசமில்லாததாய் ஜெனனமரணமில்லாததாய் அறிந்தவர்கள் கொலைசெய்தாலும் செய்வித்தாலும்செய்ததும் செய்வித்ததுந்தமக்கல்ல-தேகத்துக்கென்று சாட்சியாயப் பார்ப்பார்களென்பதுகருத்து.) (உ௯)

இதுவுங்கலிவிருத்தம்.

பிறியபோர்வையைப்பெயர்த்தும்பின்னரோ
வேறியபோர்வையை விரும்புவாரென
ஊறியவுடம்பினி லுத்தவுண்மைதான்
மாறியோடரும்பினை மருவுமன்னனே

(இ-ள்) இருந்தபோர்வையைவிட்டுப் பின்பொருவேறுசுபோர்வையை ஆசைப்பட்டுப்போர்த்துக்கொள்ளுவாரைப்போலச் சிரணமுடைய தூலமானவுடம்பிலேபிறவேசித்த ஆத்மா அந்தச்சிரணதூலதேகத்தைவிட்டுவிலகி வேறொரு தூலதேகத்தைக்கூடும் இராஜாவே-எ-று. * (இதனாற் தேகியான ஆன்மாசிரணதேகத்தைவிட்டு நூதனதேகத்தை தரிப்பதல்லாமல் அத்தேகத்தைப் போலத்தேகிநாசப்படாரென்பது. * போர்த்துமென்றதுபிறின போர்வையைவெறுத்துவிட்டுப்பின்புவேறொருபோர்வையைவிரும்புபோதுமுந்தினபோர்வையைப்போலச்சிலநாளிலேகிழியுமென்றறிந்தும்இனிமேல்கிழிகிறபோர்வையை இப்போது புதிதுகெட்டியாயிருக்குமென்றுபோர்த்துக்கொள்வதுபோலஅழிந்ததேகத்தைவிட்டும்இனியொன்றை யெடுத்தாலும் அழிவதுதானேயென்றுசும்மாயிராமல்வேறொருதேகத்தைக்கூடுமென்றவுவமை (உ௰)

இதுவுங்கலிவிருத்தம்.

உருப்பான்மைமற்றவனுக் கொருநாளுமிலைமையாற்
செருக்கால்வெம்படைக்கலங்கள்சேதிக்கமாட்டாவா
நெருப்பாய்வெந்தழியாது நீராலனைக்கொழுகாது
மருத்தாலுஞ்சலியாது மற்றதன்றனியல்கேசாய்

(இ-ள்) தேகசுபாவம்அந்ததேகிக்குஒருநாளுமில்லையாகையால்அந்தத்தேகியைச்சண்டையிடத்துக்குஉபகாரணமான கொடுமையுள்ள ஆயுதங்கள் பிளக்கமாட்டாவாம் நெருப்பால்வெந்து அழியாது தண்ணீரால்நனைந்தொடாது காற்றினாலும்அசையாது இதுதவிர இன்னம் அதினுடைய சுபாவத்தைக்கேள்-எ-று * தேகத்துக்குச்சலனருத்தமுமுண்டென்பது கருத்து- சுகத்துக்குச்சுபாவமானது தேகம் தேககபாவமாகையால்அதற்குத் துக்கப்படத் தேவையில்லையென்றது, ஆயுதமாவது பிருதிவினுடையகாரியமாகையால்காரியத்தையுடையகாரணமானமண் ஆகப்பிருதுவிமுதல் நாலு பூதத்தாலும் அழியாதென்றது இவ்விடம் ஆன்மசொரூபம்) (௨௬)

அறுசீரடி யாசிரிவிருத்தம்

எல்லாப்பொருட்கும்பழையதனையெங்குந்தானாயிருப்பதனை
நில்லாத்தன்மையில்லபனை நித்தியத்துவத்தைநிலப்பேற்றை
யல்லாப்புலன்களபதினாலு மறியாவறிவையறியாதே
இல்லாப்பொருள்போலழியுமென விறங்குகின்றதென்னண்டோ

(இ-ள்) எல்லாப்பொருளுக்கும் பழையபொருளானதைஎங்குந்தானாயிருக்கின்றதை நிலையாய் அழிகிறசுபாவமில்லாததை இன்றுபேர்வென்று மிருக்கின்றதைப்பெயர்ந்துபோகாமல்நிலையாமல்நின்றபேருடையதைஇந்தகுணங்களையல்லாதபதினாலுகரணங்களுமறியாத அறிவானசைதன்னியத்தைஇப்படிக்கொத்தஆன்மாவையறியாமல்இல்லாதபொருளைப்போலஅழியுமென்றிரங்குகிறதுஎன்னகண்டோ எ-று * (பழையதென்பது-அநாதிங்குந்தானாயென்பதுபூரணமான தன்மையில்லாதென்பது, அழியாததுபதினாலுகரணமாவது-இந்திரியம்பத்து கரணம்நாலு ஆகபதினாலும் இல்லாப்பொருளென்பது- மாயாசம்பந்தமானதேகாதிபிரபஞ்சத்தை. (௨௭)

கலிவிருத்தம்.

வீலரெனக்கொடு மெய்தளர்வாமேல்
யாவர்பிறப்பவர் யாவர்களேனுஞ்
சாவர்பெயர்த்துமிவ் வாறுசனிப்பவர்
காவலிதற்குள தோகடனேகாண்

களைதருகுணமுறநீர் கருமமுதிடனுமுர்
அவைகெடவருமெய்ப்பாலறிவினையெனதிறபார்,

(இ-ள) ஆனால் காமியகருமங்களை வேதத்திலேசொல்லுகிறதேயெ ன்றால் கேள் குற்றத்தைக்கொடுக்கப்பட்ட குணங்களை மூன்றினிடத்தி லேபலனைவைத்து நிறைந்தபலவிஷயததில் சுவையைதெரியப்பட்ட முக்குணங்களிலே மையமாகவிருந்த கருமங்களைவேதத்திலேசொன்ன மார்க்கத்துடனேசேர்ந்து மூன்றாகப்பாகத்தரப்பட்ட மூன்றுகுண த்தையு மடைந்தவர்களே பலனையிச்சித்த கருமத்தினிடத்திலே கூடி னவர்கள் அந்த மூன்றுகுணங்களுமொட்ட விட்டுக் குணாதீதமாகிய அ ரிய ஆத்மாவினிடத்தில் ஞானியென்று திடமாகிறபார்-எ-று. (சக

குளமுதலியவற்றே குளிமுதலியதுப்பா
னளவறுபுனல்பெற்று லவைகொளலருமைமந்தோ
ளமுருகருமத்தால் வருசிறுசுவையற்று
லுளமகிழ்பிரமத்தே யுட்கொளலு ரிமைத்தாம்

(இ-ள்) ஆனால் வேதஞ்சொன்ன கருமங்களைவிடலாமோவென்றால் குளிச்சிமுதலாகியனவேண்டியதாகமானவன் குளமுதலானவற்றிலே அளவற்ற தண்ணீரைப்பெற்றால் அவற்றில் தனக்குவேண்டிய தண் ணீரெடுத்துககொள்ளுகிறது அருமையோ அல்லவே அதுபோல வமைமையானகருமத்தினாலே வருகிறஅற்பவிஷபத்தைஇச்சியாவிட்டா ல இருதயமகிழப்பட்டபிரமத்திலேயுள்ளதைக்கொள்ளுகிறதுரித்தாம் எ-று. * (வேதங்களிற்சொன்ன அநேகத்தில அறிவுளளவன் மோ ட்சத்துக்கு அதிகாரியென்பதுகருத்து) (சஉ)

உறிவினையறிகுற்பா யகிலமுமடைகுற்றே
பிரிபொழுதினிலொற்றே பெருவினைதனினிற்பாய்
சொறிகருமறிவெட்டா வகைவினைதனினிற்பார்
சிறியவரெனமிக்கோர் தெளிபவர்செயலைக்கேள்.

(இ-ள்) விவேகியான நீ அறியத்தக்க கருமத்தையறிவாய், தரும த்தினால்வருகிறபலன் சகலமுங்கிடைத்தபோதும் பிரிந்தபோதுஞ்சம ஞகிய பெருவினையாலுள்ள கருமங்களில் நிற்கிறவர்கள் கொஞ்சமான வர்கள் இவர்களால் என்னையறியக்கூடாது என்னைப்பெரியோர்கள் தெளிந்திவார்கள் அவர்கள்செய்கிற கருமத்தைக்கேள-எ-று. *(பெரு வினையாவது-பலனையிச்சியாதகருமம்.) (சங)

தருபயனதுவிட்டே தருவினைசெயலுற்று
லருமயலறுமற்று லறிவுறுமறிவுற்று
லிருவினைவிடும்விட்டா லிழிவொடுபெறுதம்பா
லொருமனர்வருமத்தா லெனையுணருளர்கிற்பார்.

(இ-ள்) கொடுக்கப்பட்ட பிரயோசனத்தைநிச்சயமாகவிட்டு அவரவருக்குத்தக்ககாரியத்தைச்செய்தால் வேறொன்றுலுமாறுத மயக்கமறும்மயக்கமற்றால்அறிவுண்டாகும்அறிவுண்டாகில நல்வினைதீவினையான இரண்டுகருமமுமவிடும் இந்தஇரண்டுவிட்டால இழுக்கிறதுடனேபெறுகிறதுமான நஷ்டம்வந்தவிடத்திலும் ஆதாயமவந்தவிடத்திலும் ஒருமனதாகவரும், அந்தமனதினுலேஎன்னையறிவார்கள் அறிவுடையவர்கள்-எ-று. * (பலனையிச்சித்தால் மயக்கமவிடாது-விடாவிட்டால் ஞானம்பிறவாது பிறவாவிட்டாற்புண்ணியபாவம் விடாது-விடாவிட்டால் இலாபநஷ்டத்திலேமனதுஒருமைப்படாது படாவிட்டால் என்னை யறியமாட்டாரென்பதுஅருத்தாபத்தி ஒருமனமாவது இலாபம் வந்தபோது சந்தோஷமில்லாமலும் நஷ்டம்வந்தபோது துக்கமில்லாமலும்இந்தஇரண்டும்பிராரத்துவமென்றிருத்தல்-தகுவினையாவது குலத்தருமம், தகாவினையாவது பரதருமம்தருபயனதுவிட்டேதகுவினை செயலுற்றுலென்றது பிரயோசனத்தை யிச்சியாதவன்தகாவினையுஞ் செயயலாமென் றெண்ணுமல் தகுவினையேசெய்யவேண்டுமென்பதுகருத்து) (சச)

பேதமையடைகுற்றே பிறிதுறுமனமற்றே
பேதமிறெளிவுற்று ளியாதொருபொழுதப்போ
தோதவொடுலகத்தே யுரைகளினுளம்விட்டா
ஞதலிலெனைமெய்ப்பா டடைதருநெறியைக்கேள்.

(இ-ள்) அறியாமையையடைந்து மோட்சத்துக்குவேறுன சொற்காதிபதங்களை இச்சித்திருக்கப்பட்ட மனதானது அந்தஅறியாமையை நீக்கிச் சொற்காதிபதங்கள் அநித்தியமும் துக்கமுமென்றுகுற்ற மில்லாத தெளிவையடைந்தான்-அது எப்பொழுதோ அப்பொழுதே உலகத்திலேசொல்லுடனேவினைகளிலே மனத்தையிரத்தாமல்விட்டான் ஆகையாலே யென்னைமெய்யாக அடைகிறமார்க்கத்தைச்சொல்லக்கேள-எ-று, * (அறியாமையாவதுமயக்கம்மனத்தில் தெளிவாவது சொர்காதிபதங்களை நித்திய மென்றுஞ்சுகிமென்றுந்தடுமாறி மயங்காமல் அநித்தியமென்றுந் துக்கமென்றும் நிச்சயம்பிறந்ததுக்கு மெய்ஞ்ஞானமென்றுந் திடஞானமென்றுந் தெளிவென்றும் பேராசையாற்குற்றமில்லாத தெளிவென்றுன்இந்தத்தெளிவுபிறந்தபோதே நூல்களினும் அதினுரைகளிலும்போகவிட்டானென்பதுகருத்து,) (சரு)

விடலரும்வகையாற்றால் வினைபயனதுவிட்டே
கடவியவினைமுட்டா வகைசெய்துசுழிவுற்றே

ருடலொ டில்வுலகத்தே யுளனெனவிசம்பெற்றே
இடர்களையறவிட்டா ரெனையறிவகைபெற்றார்,

(இ-ள்) விடுதற்கரிதானஇந்தவகைகயினாலே விளையப்பட்டபிரயோசனத்தைவிட்டே நடக்கப்பட்ட காரியத்தைத் தடைபடாதபடிசெய்து கழித்தபோகள் இந்தவுலகத்திலே இப்போ இருக்கிறார்போலஎப்போதுந் தேகத்துடனே யிருக்கிறாரென்னப்பட்ட பேருபெற்றே துன்பங்களையறத்தக்கதாகவிட்டபேர்என்னையறியப்பட்டவகையைப்பெற்றார்-எ-று, * (கடவியவினையாவது தெய்வச்செயலாலேநடத்தப்பட்டகாரியம் விளைபயனாவதுஉண்டாகிறபிரயோசனம்விடலருமவரையாவது அநுமானத்தை நம்பிப் பிரத்தியட்சத்தைவிட அரிதாகையால் விடலரிதென்றது,) (சக)

கொச்சகக்கலிப்பா.

தலைநின்றபொருளின்பிறசந் தேகமின்றிசலியாதே
நிலைநின்றதியாதொருபோதப்போதுநெறிநின்றாய
கலைநின்றமெய்ஞ்ஞான யோகங்காணுமென்னச்
சிலைநின்றதோள்விஜய னிவ்வணஞ்செப்பினான்,

(இ-ள்) எல்லாவற்றிற்குந் தலைமையாகநின்றபொருளிலேசந்தேகமில்லாமற் சலியாமல் நிலைபாகநின்ற தெப்போதோ அப்போதுமோட்சமார்க்கத்திலே நின்றாய் அதினாலே சாத்திரங்களிலே அசையாமல் நின்ற மெய்ஞ்ஞானயோகம காணப்படுமென்று கிருஷ்ணசுவாமிசொல்ல. வில்லுநிற்கப்பட்ட கையையுடையஅருச்சுனன் இந்தப்படி சொன்னான்-எ-று- * (கலைநின்றஞானமாவது, வாசகஞானத்தை நம்பாமல் மயங்கையிலந்தமயககந்தீரவும்,நம்பவும், திடம்பிறக்கவும்,வேதமுதலானதுகளிலே சொல்லாநின்றஞானத்திடம்பிறககவும் வேதமுதலானதுகளிலே சொல்லாநின்றஞானத்தைக்காட்டுகையாம்) (சஎ)

அறுசீக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இவ்வகையவனைநின்றோ ரெல்வகையுரைப்பரதச்
செவ்வகையிலாதோன்செய்யுஞ் செயல்களென்செப்புமாறென்
மெய்வகையருளுகென்னவிண்ணையேமுதலாக்கொண்ட
வைவகைப்பொருளுமீன்ற வவனிதையருளிச்செய்தான்,

(இ-ள்) இந்தப்படி பிரமமே நித்தியமென்று சலியாமல் நின்று அடுத்த காரியததைச்செய்து அடுக்காத காரியத்துக்கு முயறசியல்லாமலிருக்கிற சமாதி யறிவுடையவன் அவனை தவிரநின்றபேர்கள்யெப்படிச்சொல்லுவார்கள - அந்தச்செய்யும்வகை யொன்றுமில்லாதவன் செய்யப்பட்ட செயல்களென்ன பேசுகிறவழியென்ன இவைகளை மெய்யானவகையாக அருளிச செய்யுமென்ன ஆகாயத்தையே முதலாக எண்ணவைத்துக்கொண்ட ஐந்துவகை பூதங்களை

யும் உண்டாக்கின அந்தச்சுவாமி இதையருளிச் செய்வார்-எ-று.*(பி ருதுவிமுதலாக எழுங்கினாலும்,சேத்திராதி,சத்தாதி,வாக்காதி வசனாதிமுதலான தத்துவ உற்பத்தியுஞ் செயலும்.ஒழுக்கமும் சொல்லும் போது ஆகாயமுதலாய்வைத்துக்கொண்டதினாலேதற்றோகாரம்வருவித்தார்.) (சஅ)

அறிவினையமுகிதாக வறிந்தெலாவரவநீக்கி
வெறிதருவெங்குளிகாம மயக்கநீத்தின்பதுன்பம்
வறிதெழுபொழுதில்வாடி மகிழ்ச்சியென்றிவையுமாய்த்துப்
பொரிதருபுகழுந்தீங்கும் போற்றல்போற்றாமைபோக்கி,

(இ-ள்) ஆத்மஞானத்தை நன்றாகவறிந்து அந்த மனதுக்கும் புத்தியிந்திரியங்களாலும்வருகிற வெல்லா ஆசைகளையும்போக்கி மோதப்பட்ட கோபம் ஆசைமயக்கம் இந்தமூன்றையும்விட்டு விருதாவாகச் சுகதுக்கங்களெழும்புகிறபோது சந்தோஷமுங் கிலேசமுமென்ற இந்தவிரண்டையுங்கெடுத்து உலகத்திலெழுகிற கீர்த்திஅகீர்த்தியைப் பரிபாலித்தலும், அபகீர்த்தியைப் பரிபாலியாததுங்போக்கி-எ-று.(சகூ)

ஆமைதன்னுறுப்போனைந்துந் தன்னுளேயடக்குமாபோற்
றீமைசெய்புலன்களைந்துந் தன்னுளேசெறியச்சேர்த்தி
வாய்மையினிசமுமன்னே வழுத்தவும்படுகின்றாற்
றாய்மைசெய்தவைவையத்தாணுய்ச் சொல்லுவதவன்றன்சொல்லே.

(இ-ள்) ஆமையானது தன்னுடைய வுறுப்பான நாலுகாலும் ஒருதலையும் ஆகிய ஐந்தையுந் தனக்குள்ளேயடக்குகிற வழியைபோலப் பொல்லாங்குசெய்யப்பட்ட ஐந்து புலன்களையுந்தன்னுள்ளேயடங்கிச் சேர்த்து வாக்கினாலே நிந்திக்கிறதும வாழ்த்துகிறதுஞ் செய்கிறவர்களாலே இரண்டையுஞ் சமனாக்கி யப்போதே மனதைச் சுத்தஞ்செய்து அந்தமனதே தானாய்ச்சொல்லுகிறது அவனுடைய சொல்லென்றவாறு, (ரு௰)

குறையுமாற்பணியற்றாலுங் கொண்டவிப்புலன்களெண்ணி
லறைகடலனையநெஞ்சத் தவாவறாவறிவினில்லா
மறையொழிபலவுமோதி யடக்குவாண்மனத்தைவாங்கிப்
பொறைகெடப்புலன்களைந்தும் பொறியிலேபோக்குங்கண்டாய்

(இ-ள்) இப்படியடக்கிக்கொண்ட இந்த ஐந்துபுலன்கள்செயலற்றாலும ஆத்மஞானங் குறைவுமாகில் அளவில்லாத அலைகளாலே சத்தமுள்ளகடலையொப்பான மனதிலே ஆசையறாது ஆத்மஞானத்தில் நில்லாமல்வேதவாக்கியங்களை அனேகமும ஓதியடக்குகிறவனுடையமனதை ஐந்துபுலன்களும் வாங்கிப் பொறுமைகெடத்தக்கதாக ஐந்துபொறிகளிலும் போகவிட்டுக் கெடுக்குங்கண்டாய் அருச்சுனா எ-று. * ஆ

த்மஞானம் வளருமாகில் ஆசைவிடுமென்றும் ஆத்மஞானத்தில் நின்றவனுடையமனதை விடயங்களாகிய புலன்கள் கெடாதென்றும் அப்போதும் இந்திரியங்கள செயலற்றுச்செடமாமென்றும் அருத்தாபத்தி இந்திரியங்களுடைய செயலாவது விஷயங்கள் அதையறியலாவது அனுபவியாது விடுதல் ஆகையால் ஆத்மஞானமில்லாமல் இந்திரியங்களை அடக்கி விஷயங்களை யனுபவியாமல் விட்டாலும் ஆசைவிடாதென்பது ஆத்மஞானத்தில்நில்லாமல் வேதவாக்கியங்களினலடக்குகிறவனுடையமனதை விஷயங்களிந்திரியங்களிலே போகிக்க வெங்கரு மெனவே மோக்ஷத்திலே செலுத்தாதென்பதுங்குறிப்பு ) (௫௧)

ஆதலாற்புலன்களைந்து மடக்கறிதடங்காவாகிற்
றீதலாக்கருத்துந்தீதா லவற்றிலேசெல்லுஞ் சன்றுந்
காதலாற்புகைந்துவெய்ய காமமாக்கொளுமக்காம
மேதிலாகாமத்தீபா வெகுளியாயெரியுமன்றே.

(இ-ள்.) ஆத்மஞான மில்லாதவனுடைய மனதை விஷயங்களிந்திரியங்களிலேசெலுத்தும் ஆகையாலே ஐம்புலன்களையும் அடக்குவது அரிது அது அடங்காதாகிறபொல்லாதல்லாதநல்லமனதும்பொல்லாதாய் அந்தபொல்லாங்கிலே போம் போனல்விஷயவிச்சையினலே அந்தமனதுபுகைந்துவிருப்பத்தையுடைகாமமாகக்கொள்ளும் அந்தக்காமம் மனதிற்கு அன்னியமாகாமலொன்றுகிய பொல்லாத கோபமாகியெரியும் எ-று, * (விடயங்களடங்காவிடில் மனதுபுகைந்து கொளுத்தியெரியுமென்பது மனது ஞானத்தைக்கூடிற்றே அதுபோலே நடக்கையாலும ஞானத்தைக்கூடி மோட்சத்தைப் பெறச்செய்வது மாகையால் நல்ல மனதென்றார்.) (௫௨)

எரிதிகர்வெகுளிபொங்க மயக்கமங்கெய்துமெய்தத்
தெரியவைசிதையுமுள்ளந் தெரிந்தவைசிதைந்தபோதே
யுரியமெய்யுணர்வுமாயு முணர்வுமாயுந்தொழிந்தவாரே
யறியவென்றறிஞர்பேசு மனைத்துமாய்ந்தொழியுமன்றே.

(இ-ள்.) இப்படி நெருப்பையொப்பான கோபம் கொதித்தெழும்ப அப்போது அஞ்ஞானமுண்டாம் இஞ்ஞான முண்டாகவே அப்போதே ஆத்மஞானதைக் தெரிகிறபுத்தியழியும் மனதுதெரிந்தபுத்தியழிந்தபோதே யுரிந்தான சத்தியஞானம் நாசமாம் தெளிந்தஞானம்நாசமாய்ப்போனவுடனே பெரியவர்கள் அரிதென்று சொல்லப்பட்ட சகலமும் நாசமாய்ப்போம்-எ-று. (௫௩)

வேண்டல்வேண்டாமையின்றி மிகைசெலாப்புலன்களாலே
மாண்டபோகங்கடுய்ப்பான் மனங்கலங்குறுன்மற்றத்தா
னீண்டியதெளிவுண்டாமற் றெளியவேயெல்லையின்றிப்
பூண்டநோய்நீங்குநீங்கிற் புலனலாப்பொருளுந்தோன்றும்

(இ-ள்.) தன்தன்வழியே போகாமலடங்கின விஷயங்களாலே மகிமையுள்ள போகங்களை விருப்பு வெறுப்பு இல்லாமல் அனுபவிக்கிறவன் மனது கலக்கமடையான் அந்தக்கலங்காதமனதினாலே நெருங்கிய தெளிவுண்டாம் தெளியவே பிரமாணமில்லாமற் பூண்ட பிறவிமுதலான வியாதிநீங்கும் நீங்கினால் விஷயங்களே யெல்லாமென்றிருந்ததினாலே அந்தவிஷயங்களல்லாத பரமாத்மாவும் பிரசன்னமாம். ([illegible])

அடுத்ததன்றொழில்செய்யாதார்க் கறிவில்லையறிவின்றாக
விடுத்தமெய்யுணர்வின்றாமல் மெய்யுணர்வில்லையாகத்
தொடுத்தபின்சித்தசாந்தி தோன்றிடாததுதோன்றாதே
லெடுத்தசுகமின்பமென்று மில்லையேயினைக்கவேண்டாம்.

(இ-ள்) பிரசன்னமாகவே அடுத்த பரமாத்மாவினுடைய தொழிலான ஞானயோகத்தைச்செய்யாதவர்களுக்கு ஞானமில்லை ஞானமில்லையாகவே சகலமும்நித்தமென்று பெரியோர்கள் கைவிட்டமெய்ஞ்ஞானமில்லையாம் மெய்ஞ்ஞானமில்லையாகவே மோசத்தை வருவதாகத் தொடுக்க இனிதானசித்தசாந்திதோன்றாது அதுதோன்றாவிடில் மேலாகவெடுத்த மோட்சசுக மென்னைக்குமில்லை உண்டென்றுசொல்லவேண்டாம்-எ-று. *(மிதகையாவது-பொய்) (௫௫)

ஆறுசொல்பொருள்சேர்க்கை மையபுலன்களுக்கும்பின்னே
காமுடர்நெஞ்சையந்தப் புலன்களேகலக்குமாகே
நாறுசெய்கடலுளோடங் கலத்தினையுடன்செல்காற்றே
வேறுசெய்தறைந்துமாய்த்து வீழ்த்துமாபோலவேயாம.

(இ-ள்) வழிபாகப் போகப்பட்ட போகங்களை யனுபவிக்கப்பட்ட விஷயங்களைந்துக்கும் பிரகேகாலம் தொடரப்பட்ட மனதை அறிந்த துன்பத்தைச்செய்யப்பட்ட விஷயங்கள்தானே கலக்குகிறவழியைக்கேள் அருச்சுனா கடலினிடத்தோடுகின்ற மரக்கலத்தை அந்த மரக்கலத்துடனே கூடப்போகின்ற காற்றுத்தானேமோதி வேறுபடுத்தி அழித்துவிடப் பண்ணுகிறாப் போலவேயாகும்-எ-று. *(இதனால் விஷயங்களின்பிறகே தொடருகிறமனதை அந்தவிஷயங்களே தெளிவைக்கலக்கி ஆத்மஞானமில்லாமல் மயக்கப்பண்ணுகிறது எப்படிப்போலவென்னில் கடலிலோடுகிற மரக்கலத்தைக்கூடப்போகிற காற்றே கெடுத்ததுபோலவாமென்பது ஆத்மஞானத்துக்கு உவமைகடல் அதிலேநடக்கிற மனதுக்குவமைமரக்கலம் அதைகெடுக்கிறவிஷயங்களுக்கு உவமைகாற்று ஆகையால் விஷயங்களின்பிறகே தொடராமல ஆத்மஞானத்தைத் தொடரவேண்டுமென்பது குறிப்பு. (௫௬

யாதொருபொருளையெல்லா வுயிர்களுமிருள்போற்காணு
வோதருஞானியத்தை யுளங்கையிற்கனிபோற்காணும்

யாதொருபொருளேயெல்லா வுயிர்களுமெங்குங்காணுங்
காதலில்யோகியத்தைக் கண்ணிலுந்தெரியக்காணும்

(இ-ள்) எல்லாச்சீவன்களும் யாதொருபொருளை யிருள்போல எங்குங்காணுமோ அந்தப்பொருளைசசொல்ல வரிதானஞானி உள்ளங்கையிலிருக்கிற நெல்லிப்பழத்தைபபோலக் காண்பான்எல்லாச்சீவன்களும் யாதொருபொருளை எங்குங்காண்பனவோ அந்தப்பொருளை ஆசையில்லாதயோகி கண்ணிலே தெரியக்காணுவன்-எ-று, * (தேகிகாணும்பொருள் ஆத்மா தேகிகாணும்பொருள் விஷயங்கள் ஆகையால் ஆத்மாவை ஞானிகாண்பான் விஷயத்தை யோகிகாணுனென்பது குறிப்பு.) (௬௭)

நீரினுனிறைந்துநின்ற கடலின்மேலெறிமேற்கொண்டு
நீரினுனி றைந்தவாறு விழுமதுநெறிவுறாது
தேரினுலதுபோலாசை செறிந்தவர்திறமேநோக்கிச்
சாருமாலாகிலத்தை யவர்களுந்சகித்தல்செய்வார்

(இ-ள்) சலத்தினுலே நிறைந்துநின்ற சமுத்திரத்திலே சலத்தினுலேநிறைந்த ஆறுவருகிற வழியை மேற்கொண்டுவழி அந்தஆற்றுச்சலத்தினுடைய வழியை அகக்கடல் சேராது எப்போது முள்ளபடியே யிருக்கும் அதுபோல நாம்விசாரிக்கில் ஆசையானது சித்தசாந்தியான வனமுடையவர்களிடத்தைக் குறித்துச சேருமாகில் அந்தஆசையை யவர்களுஞ சகித்தல் செய்வார்கள்-எ-று * (இதனால் கடலிலெத்தனையாறுகளுஞ்சலம் கூடினுலும் கடலானது அதிககுறைச்சலும் ஆற்றுச்சலத்தினுடைய குணமில்லாமல் தன்சுபாவப்படியேயிருக்கிறதுபோலச் சகலஆசைகளும் வந்தாலும் அதிலேபற்றில்லாதவர்கள் சலனப்படார்களென்பது கருத்து இச்சையுள்ளவனுக்குச் சாந்தமில்லையென்ற தாற்பரியம்) (௬௮)

யானெனதெனப்தின்றி யெவ்வகைப்பொருளுமிட்டான்
றனைசகரிக்கின்றான்யா ரவனேயேயடையுஞ்சாந்தி
ஞானமதனையடையாதிந்தை யடைந்தவரிறக்கும்போதின்
ஞானமேயடைவாரென்னை நண்ணுவார்பிறவிநண்ணார்,

(இ-ள்) நானென்கிற அகங்காரமும என்னுடையதென்கிற சுதந்திரமுமில்லாமல் எந்தவிதப்பொருள்களையும விட்டவன் சகலபொருள்களுந் தானேயென்று சஞ்சரிக்கிறவனெவனே அவனேயேசாந்தியடையும அஞ்ஞானமடையாது இந்தச்சாந்தியையடைந்தவர்கள மரணமாகிறபோது ஞானத்தைச்சேர்ந்து பிறகு என்னைச்சேருவார்கள், பிறவியடையார்கள்-எ-று * (ஞானமேயென்ற தேற்றேகாரத்தினுலே சாந்தியானபிரமத்தினுடையபத்தியை நிசமான அப்பியாசம்பண்ணினவன் ஞானத்தைப்பெற்று மோட்சத்தையடைவானென்பது கருத்து.

கலிவிருத்தம்,

பின்னையோவிவ் வுலகமெலாம்பெற்ற
வன்னையோதிரு மார்பத்தணைத்தவன்
முன்னையோர்புகழ் வேதமுடிவையோ
தன்னையோவுள்ள வாறெலாஞ்சாற்றினூர்

(இ-ள்) மகாலட்சுமியோ உலகமெலாம்பெற்றதாயோ அவளைத்திருமார்பிலேயணைத்த கிருஷ்ணசுவாமிபெரியோர்கள் புகழப்பட்டவேதாந்தத்தையோ தன்னையோ அந்தப்பிரமத்தையுள்ளபடியெல்லாஞ்சொன்னூரென்றவாறு. (௩௰)

உ-வது சாங்கியயோக அத்தியாயம்-முற்றுப்பெற்றது
ஆக அத்தியாயம்-உ-க்குக்-கூடியசெய்யுள்-௩௰.





மூன்றாவது.

# தேவபூசா அத்தியாயம்.



கொச்சகக்கலிப்பா.

அலையிலேகடற்கிடந்த வருமறைகளாவற்றின்
தலையிலேயிருக்குமவன் றேரிலேநின்றருளிக்
கலையிலேபொருள்விரித்துக்காட்டவும்மெய்காணூதோ
சிலையிலேயுயர்விசய னிவ்வண்ணஞ்செப்பினூன்

இ-ள்) திருப்பாற்கடலில் 'அலையிலேபள்ளிகொண்டவர்ஓதவரிய வேதங்களின்சிரசிலே யிருக்கிறவர் இப்படிக்கொத்தகிருஷ்ணசுவாமிதேரிலேநின்றருளிச் சாத்திரத்திலே சொன்னபொருளை விரித்துக் காட்டவும் உண்மையாகக்காணூமல் வில்லிலே அதிகனென்றுபெயர்பெற்ற அருச்சுனன்இந்தப்படிசொன்னூன் எ-று.* (கிடந்ததையும்இருந்ததையுங் கண்ணாலேகண்டதில்லை-தேரின்மேலேகாண நின்றருளிவேதாந்தப்பொருளை விரித்துக்காட்டவுங் காணூத அர்ச்சுனன்கிடந்தபோதுமிருந்தபோதுஞ்சொல்லுவது ஒருசொல்வேதாந்தப்பொருள் மகாசூட்சுமம் அப்படிகிடந்தபோதுமிருந்தபோதுங்காணூமற் கேட்கப்படுகிற ஒருசொல்லாலே மகாசூட்சுமத்தைக்காணமாட்டுவானோமாட்டானென்பதுகுறிப்பு) (௧)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

நன்றேவினையின் ஞானமெனவுரைத்தாய்மீளவினைநல்ல
வென்றேயுரையாநின்றனையா னிவற்றிலெதுநன்றெனவுணரக்
குன்றேயனையாயுனையடைந்தேன்குற்றதுயர்நீக்குவதா
மொன்றேயாகவுரைத்தருளவேண்டுமென்னவவனுரைப்பான்

(இ-ள்) கருமத்திலும் ஞானமே நல்லதென்றுசொன்னீர் திரும்ப ஞானத்திலும் கருமமேநல்லதென்று சொல்லாநின்றீர் இக்கருமம் ஞானமிரண்டிலெதுநல்லதென்று நான் அறியவேண்டும், நீலமலையையொப்பானதிருமேனியையுடையவரே உம்மைசரணமாக அடைந்தேன்-என்குற்றமான துக்கத்தைத் தீர்க்கிறதுகருமஞானமிரண்டில் ஒன்றே நிச்சயமாக உபதேசிக்கவேண்டுமென்று கேட்கக்கிருஷ்ணசுவாமிசொல்லுவார்-எ-று (௨)

கலிவிருத்தம்.

ஆதியிலுலகினையாக்கியன்றுநா
னோதியபொருளிவையிரண்டுமுண்மையே
நீதியல்வாவறான் செயலைமாற்றுவான்
மீதியல்வினையுறான் விடுமேவிடான்

(இ-ள்) ஆதிகாலத்திலே யுலகத்தையுண்டாக்கிறபோது நான்சொன்னபொருளானஇந்தக்கருமஞானமென்றவிரண்டும்நிச்சயமேஇவற்றில் ஞானிகளுக்கு ஞானமுங்கருமிகளுக்குக்கருமமென்றுநீகேட்டிருந்தமையால் நீதியாய பொல்லாங்கே சுபாவமான ஆசையையறாதவன் கருமத்தைவிடுவான் ஆசையைவிட்டவன் கருமத்தைவிடான-மேலானசுபாவமுள்ள கருமத்தையடையாதவன் மோட்சத்தையடையான்-எ-று * (மீதியலவினையாவது பலனையிச்சியாதகருமம்ஆசையையறாதவன் கருமத்தைவிடுவது ஆசையறவேண்டி அந்தவேண்டலே ஆசையாயிற்று ஆகையாற் கருமத்தைவிட்டாலும் விட்டவனல்ல-கருமத்தை யடையாதவன் மோட்சமடையானென்பதென்னவெனில் ஞானோபதேசமும் அனுசந்தானமுங் கருமமாகையால் மோட்சம்வேண்டிக் கருமத்தைவிடும்போது ஞானோபதேசமும் அனுசந்தானமுங் கூடவிடும், இதைவிடவே மோக்ஷமடையான்.) (௩)

ஒருவருமொருபொழுதினுமோர்காலமு
மிருவகைவினைசெயா தவர்களில்லையா
லருமையினவாவறு வினையடக்குவான்
யருவரலொடுபொய்யே பாவிப்பானரோ

(இ-ள்) ஒருவரும் அனேகரும் ஒருநாளிலும் அனேகநாளிலும்ஒருகாலமும் அனேககாலமும் நல்வினைதீவினையென்றிரண்டுவகையான கருமத்தைச் செய்கிறார்களே யல்லாமல் செய்யாதவர்களில்லையாகையால் அருமையினாலே ஆசையறாதவன் கருமத்தையட

க்கினால் அவன்விசாரத்துடனே பொய்யே பாவிக்கிறவன்-எ-று, * ஒ ருத்தனாகிலுங் கருமஞ்செய்யாதவனில்லை - கருமஞ்செய்யாததானாய காலமுமில்லை ஆசையறுதல் கருமத்தையடைகிறவனே பெய்யேபா விக்கிறவனென்றது கருமத்தையடக்கி ஞானியானால் பயனையிச்சியாத கருமானுஷ்டானத்தினாலே ஞானயோகஞ் சாதிக்கவேண்டுமே விஷை யங்களை நினைத்துக்கொண்டிருக்கிறவனே (நைமித்தியாசாரனென்று) சொல்லப்பட்ட விசாரமாவது கருமத்தையடைக்கி ஞானியென்றுபே ரிவித்துக்கொண்டோமே விஷையத்திலே பிரவேசித்தால் உலகம் நி ந்திக்குமேயென்கிற விசாரம் ஆகையால் இந்த நித்தியநைமித்தியகரு மம் விட்டதினாலே கருமஞ்செய்யாமலிருக்கிறதில்லை மூன்றாலென்ப து குறிப்பு.) (௪)

புலனவைபொறிவழி போக்குமாற்றிமெய்ப்
பலனறவினைகளென் பொருட்டேப்பண்ணுவாய்
நலனுறுமவ்வினை நரகமன்றியே
சலமுறுபிறவியுந் தவிர்குந்தன்மைகேள்

(இ-ள்) விஷையங்களை ஐம்பொறியான விந்திரியங்களிலே செல்லு கிறதைவிலக்கி மெய்யானபலனை யறப்பட்டகருமத்தை என்னுடைய நிமித்தியமாகப் பண்ணுநன்மையுடைய அந்தக்கருமமானது நரகமல் லாமல் வைரமடைந்த பிறவியையுந்தவிர்க்கும் அந்தச்சுபாவத்தைக் கேள்-எ-று. * (என்பொருட்டெனவே யுன்பொருட்டாக இச்சித்துச் செய்யாதேயென்றது நரகமன்றியென்றது நரகைவிலக்கும் அதுமா த்திரமோ பிறவியையுந் தவிர்க்குமென்றது இப்படிப்பலனை யிச்சியா மல் கருமானுஷ்டானம் பண்ணுகிறவனைச் சுத்தஞான நிஷ்டனிலும் அதிகமென்றுசொல்லப்படும் தேகமெடுத்தவனுக்கெல்லாங் கருமம்ப ண்ணுகிறது நியமம் ஆகையால் நீயும் நிசமானகருமத்தைப்பண்ணு க ருமத்தைவிட்ட ஞானத்திலுங்கருமத்துடனேகூடின ஞானம்நல்லது- கருமம்பண்ணமாட்டேனென்றால் சரீரத்துக்கு நடக்கவேண்டிய கரு மத்தைவிடவேண்டும், இவையெல்லாம் அருத்தாபத்தி தன்மைகே ளென்றதாவது இந்தக்கருமம்பண்ணிற் பந்தமென்றால் இந்தக்கரும மே பந்தமல்லாமல் தேவதாபூசையான என்னூர்த்தமான தருமபந்த மல்ல அதெப்படியென்றால் அதினுடையசுபாவத்தைக் கேளென்றத ருத்தாபத்தி தேவதாபூசையென்றும் எக்கியார்த்தமென்றும் பாட்டி ருக்கிறதோவென்றால் பின்வரும்பாட்டுக்களாலும் இந்தப்பாட்டில் எ ன்பொருட்டென்று இருக்கிறதினாலுஞ் சொன்னது) (௫)

தேவர்களைமகிழ்விக்குஞ் செயலோடேதெரிந்திந்த
மூவுலகவுலகினையு முன்படைத்தமுதன்மொழிவான்

மேவரியசுரர்பூசை யிவுநீங்கள்வேண்டிஞன்
யாவுகையுநதருமின்ன மிதுகேட்பிரோலவிசைப்பான்.

(இ-ள்) தேவர்களைச்சந்தோஷப்படுத்துகிற கருமத்தோடேகூடவிந்த மூன்றுவிதமான உலகங்களையும், ஆதிகாலத்திலே விசாரித்துண்டாக்கின பிரமதேவர் அந்தச்சனங்களுக்குச் சொல்லுவார், இது அடைய அரியதேவர்பூசை இந்தத்தேவர்பூசை நீங்கள் வேண்டிய இஷ்டார்த்தவிதமெல்லாம் கொடுக்கும இதையின்னமுங் கேட்பீர்களென்றுசொல்லுவார் எ-று. * செயலோடேயென்றது - மகிழ்வியாத செயலோடேன்றதுபாராமல் மகிழ்விக்குஞ்செயலோடேயென்றது நிச்சயஞ்சொன்னது, தெரிந்தென்றது சிருஷ்டிககுமுன்னே பிரமதேவர் ஆலோசனைபண்ணினது இந்தச்சிருஷ்டியைச் சத்கருமத்துடனே உண்டாக்கவேண்டுமே, அதற்குச்சத்கருமமே தேவர்களை மகிழ்விக்குஞ்செயல், ஆகையால் அதுவுடனேசிருஷ்டிக்கவேணடும், அதல்லாத துற்கருமத்துடனே சிருஷ்டிக்கலாகாதென்று ஆலோசனையில் விசாரித்துத் தெரிந்தபின்பு இந்தமூவுலகமும் படைததாரென்றது, இதுவென்றது சொல்லும் பொருளைக்காட்டல.) (௬)

செயல்வகையா நீங்களவர் திறம்போற்றுமாங்கவரும்
புயல்வகையாலுங்களையே புறம்போற்றிபார்தருள்வா
ரியல்வகையானதுபிழைபீ ரொனிவிரண்டுதிறத்திரு
முயல்வகையாலெனையடைவீ ரெங்கலத்தோர்க்குரைத்தனனுல்

(இ-ள்) நீங்கள்செய்யும் விதங்களினாலே அந்தத்தேவர்களின் விதங்களைப் பூசைசெய்யுங்கள்-அப்போது அந்தத்தேவர்களும் மேகமென்கிறவிததினாலே வுங்களையே புறம்பேகாத்துத்தயைசெய்வார்கள்உங்களாலியன்றவிதமானதுதப்பாமற்செய்வீராகில்இரண்டுவிதமானதேவர்மனிதரான நீங்களுந் தப்பிப்பிழைக்கிறவிதத்தினாலே யென்னைச்சேருவீரென்று மனிதருக்குச்சொன்ஞர்-எ-று * (இதனுள் எக்கியம் பண்ணித் தேவர்களைச்சந்தோஷம்பண்ணுங்கள்-அவர்கள் மேகங்களாலே மழையைப்பெய்வித்துப் புறமபேகாத்தாட்சிப்பார்கள் - இப்படியிருவகையாருந் தப்பாமல் நடந்திர்களானு லென்னைசசேருவீர்களென்று மனிதரைப்பார்த்து இருவகையாருசகுஞ்சொன்ஞர், ஒருவனைப்பார்த்திருவருக்குஞ் சொன்னதேதென்னில் ஒருவன் முன்னேசெய்தால் மற்றொருவன் பின்னேசெய்யவேண்டிய விதியாகையால் முன்னே செய்யவேண்டி மனிதரைப்பார்த்துத் தேவாடத்தையுங்கூடச்சொன்னது தப்பிப்பிழைக்கிறவிதமாவது-நான் எனதென்கிற ஆங்காரசுதந்திரமிரண்டினாலுங் கெடாமலிருத்தல் இப்படியொருவருக்கொருவர் அன்னியோன்னியமாகவிருந்தால மேன்மையையடைவார்களென்பதுகுறிப்பு. (௭)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணிற்கருதருமறிவையகருதிய தறிவேமிகவருகளிகூர்ரோ,வெண்ணிற்றெழுதிறருபயனுற்றிடுவகை யிசையாறுதலின் வினையாவும் பண்ணிப்பெறுவதோர்பயனுண்டோவவைபண்ணு துறுவதோர்பழிப்புண்டோ, மண்ணிற்பிறிதிவனிவையுற்றிலனெனமதியாரவை செய்தவிதியாரால்

(இ-ள்) கண்ணாலேகாணவும்,மனதாலேநினைக்கவும்,அரிதாகியஆத்மாவைத்தரிசனமுந்தியானமுஞ்செய்து அந்த ஆத்மாவே நஷ்டமில்லாமல்மிகுந்திருக்க அதனாலுண்டான களிப்பமிகுந்தவன் விசாரித்தாலவனுக்குச்செய்யவேண்டிய காரியமொன்றுமில்லாததினாலேகருமத்தால்வருகிறபலனை யடையும்படிக்குச் சம்மதியான ஆகலால் ஆத்மதரிசனம் சித்தியானவனுக்குச் சகலமும் அதுவேயல்லாமல் வேறே சகலகருமங்களையும் பண்ணிப்பெருவதொரு பிரயோசன முண்டோ அதுவில்லை ஆனல் அந்தக்கருமத்தைப் பண்ணுகதினாலேயடைகிறதொருபழியுண்டோ அதுவுமில்லை ஆனலிவனையுலகத்தில் மற்றப்பொருள்இவன் இந்தக்கருமத்தைச் செய்து இந்தப்பிரயோசனத்தை யடையவில்லாதவனென்று மதியார்கள் யென்றவாறு * (விதியென்கிறதை விதியாரென்றது உபசாரம் விதியாவது பிரமம்பலனையிச்சியாதவனுக்குஉலகம்மதித்த லென்னபிரயோசனம் மதியாமையால்என்னநஷ்டம் இரண்டுமில்லையென்பது கருத்து.) (௰௧)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆதலானீயும்பலத்தின்மேலவ்வ றடுத்தகாரியஞ்செய்வாயதனாற்
றீதிலாவீடேசேருவாய்முன்னஞ் சேர்ந்தவரனேகர்முன்றேறிற்
சாதலாலரசன்சனகனேமுதலோர் கருமமோடொழுகியேயன்றோ
போதலாவுலகுபுக்கதுமற்றுப் புகுந்தனரனேகர்முன்பொலிவார்

(இ-ள்) ஆகையால்நீயும் பலத்தின்மேலாசையற்று இராஜாக்களுக்கு அடுத்தகாரியத்தைச்செய்வாய் அதனாலே குற்றமில்லாதமோக்ஷத்தையேசேருவாய் இப்படிமுற்காலத்திலேசேர்ந்தவர்கள் அனேகம்பேர் அவர்களாரென்று ஆசையாலேமுன்னேவிசாரிக்கில்ராஜாவானசனகனே முதலானவர்கள்கருமத்தோடே நடந்ததேயல்லவோ மற்றவர்கள்யாரும் போகமாட்டாத மோக்ஷமாகிய உலகத்திற்புகுந்து பின்னேயுமுன்னே புகுந்தனரனேகர்விளங்குவாரென்றவாறு *(விளங்குவாரென்றது அவர்களையுலகர்புகழ்ந்துகொண்டேயிருக்கையால் விளங்குவாரென்றார், பதத்திலாசையற்றவன் அடுக்காத காரியத்தை முயற்சியண்ணினன்,அடுத்தகாரியத்தைசசெய்வான் அடுத்தாவதுபசிவந்தபோது தனக்கல்லவென்றுபொசித்தது அடுக்காதாவது பசியில்லாத

போது பொசிப்பைக்கண்டாற் பசிவாராமற்பொசிக்கவேண்டுமென்று பொசித்தல் இன்னமும் அடுத்தாவது அவரவர் குலத்துக்கு அடுத்தகருமம் அடுக்காததுபரகருமமும் சனகராஜாவைச் சொன்னதேதெனில், இந்தஅர்த்தம் அன்னியசாதிக்கென்று நினையாமற்காட்டினது கருத்து.) (மஉ

பெரியவர்பயின்றபடியலாற்பயிலார் பின்புளோரென்பதன்றுபெரியவிவ்வுலகமூன்றினுமெனக்குச் செய்யவேண்டுவதுமொன்றுண்டோ, வரியவைவென்றுலுறுதவுமுறுதற் பாலவுமியாதைமிங்கையா, பரியவிவ்வுலகுமகிழவும்வினைதான் பண்ணுதற்கென்னையும்பாராய்.

(இ-ள்) பெரியவர்கள் ஆசரித்தபடியே மற்றசனங்களும் ஆசரிப்பாகளேயல்லாமல் மற்றொன்றையு மற்றசனங்களாசாரிபார்கள இப்படியென்று சொல்லப்படும அப்படியாகில உரியதான இந்தப்பூமியந்தரசுவர்க்கமென்ற மூன்றுலோகங்களிலும் என்னிச்சையாயிருக்கிறவெனக்குச் செய்யவேண்டிய தொன்றுளதோ ஒன்றுமில்லை என்னாலேகூடாத அரியதுவுங் கூடத்தக்கவுரியதுவும் என்ன இந்தவுலகங்களிலொன்றுமில்லை ஐயா இப்படியெங்கும் என்னிச்சையாயிருந்து ஒன்றுடனுங்கூடாதவனு மினிமேற் கூடுகிறவனுமல்லாத எனக்குச்செய்யவேண்டுவ தொன்றுமில்லையே இப்படிக்கொத்த நான்பருத்த இந்தஉலகங்கள் சந்தோஷிக்கவும் துதிக்கவும் கருமம்பண்ணுகிறேன் இப்படிப்பலனையிச்சியாமற்கருமம்பண்ணுகிறதற்கு முன்னே ஜனகமகாராஜன்முதலான அனேகரைப்பார்க்கச்சொன்னேன் இப்போது என்னையும்பார் எ-று.*(மகிழவுமென்றவும்மையாற்றுக்கிக்கவுமென்றுவருவித்ததுஎன்னையுமென்ற வும்மையால்முற்காலத்துச் சனகன் முதலானோரையும் இந்தக்காலத்திலென்னையும் பாரென்றுமுற்பாட்டுரையைஎதிரதுதழுவியது.) (மகூ)

என்செயறவிறில்யான்செயாவினைக ளியாவருஞ்செயாரதனாலே, மன்செய்கதுலங்கண்மயங்கிமாய்ந்திடுவர் மற்றவர்மற்றதற்காகப், பின்செயலறியாதவாவொடு முயலும்பேதைகைப் போற்பிறர்பொருட்டாடா, லுன்செயல்களைச்செய்யவைசெய்வார்தம்மை யுணர்வுவேறுக்கலு முரைப்பான்

(இ-ள்) இப்படிக்கொத்த வென்னுடைய செயலானது செய்யாமல்விட்டால் நான்செய்யாதகருமங்களை யாருஞ்செய்வார்கள் அதனாலே நிலைமையாகச்செய்தகுலங்கள் மயங்கி நாசமாவார்கள் ஆனலிந்த நாசம் நானேபண்ணினவனுவேன் மற்ற அஞ்ஞானியான ஜனங்கள் அந்தக்கருமத்தைத் தங்களுக்காகச் செய்து பின்னேவருகிற அனுபவச்செயலையறியாமல் ஆசையுடனே செய்யப்பட்ட மூடனைப்போல

சிலபேர் அவர்களோ கருமங்களை அறவிட்டவர்கள் இனி யென்னிடத் திற்பொருமையாலே நானசொன்ன இந்தவாக்கியத்தை யிகழுகிற பேர்கற்பாறையான தரையிலே முளைத்தமரம்போல மாய்ந்துபோவார்களாதுவலலாமல் அறிவுமாய்ந்தபேர்களென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர் எ-று. (௰௬)

கலிவிருத்தம்.

பண்டுநின்ற பழவினையின்படி
கொண்டுநின்றது கூடுமவர்கட்குக்
கண்டுநின்றவர் கற்பனையென்செயு
முண்டுநன்றவெ ணுவுணாநன்றுமோ

(இ-ள) தேகமெடுத்திருக்கிற பேருக்கு முன்னேபழையதாயிருந்த வினையின்படி கைகூடுமென்று வஸ்துவைக்கண்டு மிருக்கிறபேர்களுக்குக் கற்பனையானவினையென்னசெய்யுமென்று அறுவகைச்சுவையுண்டு நல்லதென்றாலது நாவுடனேசேரும் அப்படிப்போல வஸ்துவைக்கண்டிருக்கிறபேரை வினைசேராதுஎன்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௰௭)

இதுவுங்கலிவிருத்தம்

அஞ்சுபுலன்வழிதொடரு மஞ்சுபொறியிலையாம்
வெஞ்சுரனுழறியுயிர்வெம்பியழிவுறுவோ
ருஞ்சுபுகுமவழிதகைய வொன்றுபகையுளதே
ளெஞ்சுதலிலின்பமிட ரென்பவையையிகநீ

(இ-ள்) ஐந்துபுலனையும ஐந்துபொறிதொடருமதினால் உலகத்திலிருக்கிறபேர் கோபத்தினாலேயுமுன்று உயர்வெம்பியழிந்து போவார்களெப்படிக்கொத்தபேர் பிறந்திருக்கிறவழியை மறிக்கிறதற்கு ஒருவகையுண்டுசொல்லுகிறேன்கேள் அது எப்படியென்றால் சுகதுக்க மென்கிறவை யிரண்டு இழந்துவிடுகிறதே பிறந்திருக்கிறவழியை மறிக்கிறவகை ஆகையினாலே நீயுமிகழ்ந்துவிடுமென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௰௮)

தவித்ததொழிலசெய்வது தகாததுதனக்கே
யடுத்ததொழில்செய்துகொடு மேனுமழுகையா
விடுத்தகருமபெரிது செய்வதெனின்மேலோர்
தொடுத்தகருமஞ்சிறிது செய்கைதொழிலென்றான்.

(இ-ள்) ஞானவான்கள்வேண்டாமென்னத் தொழிலைசெய்கிறதுஆகாது தனக்கு அடுத்ததொழிலைச்செய்வது யாதாகிலுங் கொடுக்கிறதே அழுகையாவென்று விட்டுவிட்டகருமத்தைத் திரளாயச்செய்கிறதினாலேயு மேலோரான ஞானவான்களை செய்கிறகாரியங்கொஞ்சமா

கிலு காமத்தைச்செய்கிறதே தொழிலென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ண தேவர்-எ-று, (ய௯)

அறுசீரடி யாசிரியவிருத்தம்,

மாயனிவையென்றுரைசெய்ய விசையன்மறுத்துக்கூறுவான்
தீயவினைசெய்யாதவரைத் திகைப்பச்செய்துதிறலாலே
யேயயணிகொள்வாரைப்போ லியற்றுவிப்பாராரென்றான்
பாயல்பரவையாககொண்ட பழையோனிவ்வாறெனப்பணித்தான்,

(இ-ள்) இந்தவிசம் ஸ்ரீகிருஷ்ணதேவ சொல்ல அதற்குத்திரும்பவும் அருச்சுனராஜன்கேட்கிறான்-அதெப்படியென்றால், கொடிதான வினைசெய்யாதபேரைத் திகைக்கச்செய்து வலமையினாலே வேணடிய தொழில் செய்வித்துக்கொளளுகிறவர்களைப்போலச் செய்விக்கிறபேர் ஆரென்றுகேட்க அதமறு யாக்கையென்கிற பொம்மையை ஆட்டிவைக்கிற ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்லுவார்-எ-று, (உ0)

கலிவிருத்தம்,

தீமனந்தனி லேசெனனஞ்செயக்
காமமென்னுங்கைத தாயவளர்கின்றது
வேமனங்கொள வெகுளியென்கிறபது
காமமறுமகன் னன்னபெந்தன்னைக்கேள.

(இ-ள்) அக்கினியிலேபிறந்தது மனது மனதிலேபிறந்தது, காமம் காமத்திலேபிறந்து, குரோதம் குரோதகர்மமென்கிற தாயினுடைய கைபோலச் சகலமும் வளர்கின்றது - குரோதமென்கிறது மதனமயங் கொண்டிருக்கிறது இது இரணடையும்போற - விட்டுவிடுகிறதேக லனைலம், அதைஇன்னம் தெரியச்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உக)

எவ்வகைப்பய னுந்தினைவல்லது
மெவ்வகைப்பெரும் யாவமுமிவ்வகை
யெவ்வகைப்பொருட் கும்பகையாவகை
யெவ்வகைத்தெனப் பேசுவதின்னங்கேள.

(இ ள்) எந்தத்தருமஞ்செய்தாலு மந்தத்தருமத்தைவிழுங்கிப்போடுகிறதும், எந்தவகையினாலேயும் வெறுமபாவத்தையுண்டாக்கிறதும், எந்தப்பொருளுக்கும் பகையாக்கிறதும், எந்தவகையினாலேயுந் தினம் பேசுகிறதும், காமக்குரோதத்தினாலேயென்று இன்னஞ்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு, (உஉ)

நெருப்பைமுற்றிய தூமமுநீடொளி
தருப்பணத்தை மறைத்தனமாசுமொத்
துருபபடைத்த ருள்ளுணர்வியாவையும்
விருப்பமுற்றவெவ காமம்விருப்புமால,

(இ-ள்) புகையினாற்பிறந்த அக்கினிக்கு மதிப்பிரகாசம் பொருந்தியமனதைக் காமமானது எப்படிமறைந்ததுவென்றால் தக்கப்பணத்தை மாசுமறைத்தாப்போல உலகத்திலே யிருக்கிறபேர்களுக்கு ஞானமுண்டாகிய உள்ளுணர்வான மனதெல்லாவற்றையும் விருப்பமுற்றகாமமும் விழுங்கிப்போகுமென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௨௧)

காதலாற்றரிக் காமபுலன்களை
வாதலாற்புகுந் துள்ளமயக்கவ
தாதலாற்புல னைந்துமடக்கியே
யேதலாற்கபெங் காமமிறக்குவாய.

(இ-ள்) ஆசையினாலே தவிக்கிறகாமமானது ஐம்புலன்களினுடைய வாசலிலேபுகுந்து மனதை மயக்குமாகையினாலே ஐந்துபுலனையுமடக்கி ஒப்பில்லாத காமக்குரோதபாரத்தை யிறக்கிப்போடுவாயென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௨௨)

ஆற்றமிவ்வுடம் பிற்பாமைம்புலன்
மாற்றமைம்புல னிற்பரமாமனம்
போற்றும்புந்தியி னிற்பரம்புத்தியி
ருேற்றுமிங்கிவை காண்பதுதொல்பரம்.

(இ-ள்) வாயுவினாலேசஞ்சரிக்கிற தேகத்துக்குப் பரமாயிருக்கிறது ஐம்புலன்தேகத்தைமாற்றுகிற ஐம்புலனுக்கும் பரமாயிருக்கிறதுமனது மனம்போற்றுகிறதற்குப் பரமாயிருக்கிறதுபுத்தி - அந்தப்புத்தியிலே பரமாயிருக்கிறது காணுமதைக்காண்பது மேலானபரமென்றுஞ் சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௨௩)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

மேலாயுள்ளவிப்பொருளை மெய்யாவறிந்துபொய்மாய
மாலான்மயங்குமனத்தினையு மடக்கியந்தமனங்கலக்குங்
காலாயுள்ளகாமத்தைக் காப்பாயென்றுகட்டுரைத்தான்
சேலாயுலகமுறுபுலனோர் செவியின்புரையிற்செலுத்தினான்.

(இ-ள்) சகலத்துக்கு மேலாயிருக்கிறவஸ்துவை மெய்யாகவறிந்து பொய்யானது இறந்துபோகத்தக்கதாக மயங்குகிறமனதையடக்கிக் கலக்கிறதற்குக் காலாயிருக்கிற காமத்தைக்காப்பாயென்று முன்சேலாயுலகத்திலே அவதரித்து இப்போது ஜனங்கள் செவியின்வழியாகஞானத்தைப்போதித்தார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று, (௨௪)

௩-வது-தேவபூசா அத்தியாயம்-முற்றுப்பெற்றது.

——(*)——

ஆக-அத்தியாயம்-௩-க்கு-சுலோகம்-செய்யுள்-௭௰௪.



நான்காவது

# சம்பிரதாய அத்தியாயம்.

---*---

கலிவிருத்தம்.

நற்றவமகிழ்தரு கருமஞானமு
மற்றதுமறவுணக் கறியக்கூறினேன்
மற்றவைகளினிவர் வாறுகேளெனக்
குற்றமிலாழியாங் கையன்கூறுவான்.

(இ-ள்) நல்ல தவமகிழ்வினாலே யுண்டானதல்லாமல் முன்னிருந்த பேருக்குஞ் சொன்னேனென்றும், கருமஞானமிரண்டுமுனக்குமயக்கமறத்தக்கதாக அறியச்சொன்னேனென்று சொன்னதல்லாமல் முன்னிருந்தபேருக்குஞ் சொன்னேனென்று மவர்கள்பெயரையுஞ்சொல்லுகிறேன் கேளென்று குற்றமில்லாதகையிலே சங்குசக்கரத்தைத் தரித்த ஸ்ரீகிருஷ்ணதேவர் சொன்னார்-எ-று. (க)

எவமறமுன்பியா னிரவிக்கோதினே
னவன்மனுவரசனுக் கறியக்கூறினா
னுவகையோடகனுமிக் குவாவுக்கோதினான்
தவமுயலரசனீ யறியுந்தன்மையா.

(இ-ள்) மயக்கமறக்கியானத்தை முன்னாலே சூரியனுக்குச்சொன்னேனென்றும், சூரியனுமனுராசனுக்குத் தெரியசசொன்னானென்று மனுராசனுங் குவாவுக்கு வகையாய்ச்சொன்னானென்று மாயையினாலே ஞானயோகத்தைமுயன்று ஆசரிக்கிறபேரிதையறிவார்களென்று மின்ன மதன்வகையைத்தெரியச்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உ)

கருதரும்வகைகிசழ் காலஞ்சேரலா
னருவரும்வகையதாய் மறைந்தவாய்மைமை
யிருவினைகெடவரு யோகநீர்மையை
யொருவருவறிவரி தாயவுண்மையே.

(இ-ள்) மூற்காலத்திலே மாயைவஸ்துச்சேர்ந்து அனேகவிதமுண்டானவகையுங் கருவுண்டாய் முன்பிறந்திறந்துபோனவகையையு மிப்போதுபிறந்து இனியிருக்கிறவகையையு மிருவினைகள் கெடவருகிற யோகநிலையையு முன்னுடைய வுண்மையுமறிகிறதற்கு எவர்களாலேயு மரிதென்றுசொன்னா னருச்சுனன்-எ-று (ங)

நல்லகாதல்செய் நண்பெனுமாயனே
யல்லதியாவு மறியவொாதலால்

சொல்லென்மெய்யின தென்றனன் றூயவன்
மெல்லவேறுவிசயன் விளம்புவான்

(இ-ள்) இந்தவகைகளெல்லாமறிகிறதற்கு எனக்குந்தோண்டிபட்டு என்பேரிலே யன்பாய்மனதுவைத்துனாலேயரியவேணுமென்னை யல்லாமலறியப்போகாது ஆனையினாலே யிதுமெய்யென்று தூயவனு ஸ்ரீகிருஷ்ணதேவர்சொல்ல, விசயனான அருச்சுனன்கேட்டு மெள்ளச்சொல்லுவான்-எ-று. (௪)

கலிவிருத்தம்.

ஞானமாமிது நல்லவர்கேட்டிடப்
போனகாலமும் யான்புகன்றேனென
வானதாயினு மவ்வுடம்பன்றிது
தானதாம்வகை தாமறிதக்கதோ

(இ-ள்) ஞானமானதைநல்லவர்கள் கேட்கத்தக்கதாக முற்காலத்திலேயும் நான் சொன்னேனென்றுசொன்னீரே யுமக்குமெனக்குமுன்னே மாயாதேகம்வந்தவகையுமிப்போது தேகம்வந்தவகையும்நமக்குத் தெரியுமோவென்று அருச்சுனராசன்கேட்டான்-எ-று (௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்

சொல்லார்விசைய னிதுமொழியத் துளபமுடியோனருள் செய்வான், பல்லாயிரங்காலுடம்பெனக்குமுனக்கு நடுவும்பரித்தழிந்தவெல்லாமறிவன்யானீயு மேதுமறியாயிதுவன்றே, வில்லார்தோளாய்நமக்குள்ளவேறுபாடுவிளம்புங்கால்

(இ-ள்) விசேடத்தினாலே விசையனான அருச்சுனராஜன் இந்தவகைகேட்கஅதற்குத் துளபமாலைமுடியோனான ஸ்ரீகிருஷ்ணதேவர்கிருபை பண்ணிச்சொல்லுகிறார் அதெப்படியென்றால்பல்லாயிரமாய்எனக்கும்வியாபித்திருக்கிறதே கங்காணெனக்கென்றும்உனக்கென்றுமுனக்குநடுவேதேகம்வந்து அழிந்துபோனதுமிப்போதுதேகம்வந்ததுமநாலெல்லா மறியேனென்றும் நீயேதுமறியாயென்றும் இவையல்லாமல் வில்லைத் தோளிலேதரித்த அருச்சுனராசனே நமக்குள்ளவேறுபாடானவிருத்தாந்தத்தைச்சொல்லுகிறேன்கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௬)

கலிவிருத்தம்.

சாவாதுபிறவாது தனிமுதலாயிருந்தவனு
ணுவாதுவுலகுபடு மழிதுயர்நீர்ப்பதற்காக
மேவாதுநின்றேமெய் மாயையினால்மெய்போல
வோவாதுபிறந்திடுவே னுகந்தோறுமுகந்தோறும்

(இ-ள்) என்னுடைய விருத்தாந்த மெப்படியென்றால் நான்சாகிறதுமில்லை பிறக்கிறதுமில்லை தனிமுதலாயிருக்கிறவனான் என்னைய

றியாமல்உலகத்திலேயிருக்கிறபேர்நானுவிதமாய்ப்பிறந்து அழிகிறதய ரைத்தீர்க்கிறதற்காக உலகத்தைச்சேராமலிருந்து என்மாயையினாலே மெய்போல ஒப்பில்லாமலும் தலங்களதோறும் பிறந்திடுவேனென்று சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு (எ)

மெய்வகையதிதுவென்ன வேண்டியார்வேண்டியன
வைவகையதேயுமா யானேகாணளிப்போது
மிவ்வகையென்செயல்களினை யறிந்தாரிவ்விம்மையினின்
றுய்வகையநெறிபெற்று றுயர்ந்தாரையுரைப்பரிதால்

(இ-ள்) இந்தவகைநான்சொன்னதேமெய்யென்றுஎவரெவர்களுக்கு எந்தத்தெய்வத்தின்பேரிலேயிச்சையோ அந்தவிதம் பலவகையான தெய்வங்களையுண்டாக்கினவனுவென்று மென்செயல்களை யிந்தவகை யென்று அறிந்தபேரிம்மையான சனனமரணவகையைச் சேராமலு லகத்தார்க்கெல்லாமுயர்ந்த கதியடைவார்கள் அவர்கள்பெருமையைச் சொல்லுகிறதற்கு அரிதென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர் எ-று.()

செயலாலுங்கருத்தாலுஞ் செயநாடுங்குணநாலு
மியலானமுறப்படைத்தே னிப்பொழுதுகாப்பேனுன்
மியலாலவ்வினைப்பயனின் மனமவையேன்மற்றவனு
மயவாயேயுருக்குமெனக் கவையிவைவோறிவாரார்

(இ-ள) மகிமையுண்டான நான்குகுணத்தை வல்லமையினாலேயும மனதினாலேயு மியலாகமுறைனையுண்டாக்கினவனான் இப்போதெலலா வற்றையுநாசகிறவனும்நான் ஆசையினாலே காலப்பலத்தின்பேரிலே மயலாகியமவைக்காற்றினாலேயென்னை யெதுவுஞ்சேராமலிருக்குமி ப்படிச்சேராமலிருக்கிறனென்கிறதை அறிகிறபேர் ஆரென்றுசொன் னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (கூ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உய்யும்பரிசிலுணர்ந்தவர்க ளுணர்ந்தவினைமேலொருபடிநீ
செய்யுங்கருமஞ்செய்யாமை நீயருருமமொன்றிலதை
மெய்யுமபொய்யுமறிவரியவேண்டும்பொருளுமிவையன்றி
மெய்யுஞ்சிலைக்கையுரவோய்மற் றிவற்றன்செயலையியம்பக்கேள்

(இ-ள்) வினையொழிக்கிற காறிய மறிந்தபேர்செய்த கருமத்தின்பே ரிலே நீயுமொருமையாய் மனதைவைத்துச் செயயென்று முன்னே செய்தகருமமெலலாந் தீதானகாரியமென்றறிந்து அதைசெய்யவே ண்டாமென்றுமெய்யானஞானத்தையும் பொய்யானகருமத்தையும்வி சாரித்துவத்துவை நன்றாயறியவேணடுமென்று கருமத்தைச செயகி றவிற்கையுடைய அருச்சுனராசனேமனதினுட்செயலைச் சொல்லுகி றேன்கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (ய)

தின்றபோட்டுவினையுண்டென்றுசொல்லார்கள் அப்படிச்செய்திருக்கிறபேர்களை வினையானது கட்டுபண்ணுமோவென்று சொன்னார்ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௰௪)

அடங்குகின்ற புலன்களோடாசைபோய்
மடங்குகின்ற மனத்தினனாவை
னுடம்பிதன்பொருட்டாலுளதாவெனத்
தொடங்குகின்ற வினைத்தொடக்குண்ணுமே

(இ-ள்) ஆசைசேர்ந்திருக்கிறபுலன்களுடனேமனது சேர்ந்திருக்கிறபேர்களுக்கு அறிவுமேலிட்டதேகமுண்டாம் தேகந்தனதென்று எண்ணி வினைதொடாதிருக்கிறபேர்களுக்கு வினையென்கிறதொடக்குக்கெட்டுப்போகாதென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று, (௰௫)

பெற்றதேகொடுவந்துமுன்பேறிழ
வற்றபோழ்திலொத்தொன்றுமொருவர்பாற்
செற்றமேது மிலாதவன்செய்வினைக்
குற்றமோவற் றின்றிறங்கூறக்கேள்

(இ-ள்) தேகமுண்டானதுகொண்டும்புலாதிகளின்விவரத்தைதன்றுகமுன்னே தெரிந்தஞானவான்களவற்றி லொன்றிலேயுஞ்சேருகிறதுமில்லை அவர்களுக்கு மொருவரிடத்திலேயும்சினேகமுமில்லை அப்படிக்கொத்தபேர்செய்கிறவினை குற்றமாமோ வென்று மதினுடைய விவரத்தையின்னஞ்சொல்லுகிறேன்கேளென்றுஞ்சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௰௬)

விட்டுமுற்றும் வினைகள்வினைப்பயற்
றிட்டமற்றினைவதன்னிலெழுங்கருத்
தொட்டநிறைவன் யாகப்பொருட்டுறப்
பட்டகாமப் பலத்துடன்மாயுமால்

(இ-ள்) கருமங்களையெல்லாமவிட்டுக்கருமபயத்தினுடையநடத்தையுமற்று தேகத்திலேயுண்டான கருவைத்தொட்ட வஸ்துவேதானாகவெண்ணியிருக்கிற ஞானவான் செய்கின்ற கருமம்பலத்துடனேமாயுமென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர் எ-று. (௰௭)

பிரமநேயம் பிரமநெருப்பிடை
பிரமமாகிய மந்திரந்தன்னினாற்
பிரமமாய சருவுடன்பெய்துபின்
பிரமமேயடை வாருளர்பின்னுங்கேள்

(இ-ள்) நேசப்பிரமமான பிரமாக்கினியிலே நேசப்பிரமாயிருக்கிறமந்திரத்தினாலே பிரமம் மாயாசமித்தானதேகத்தை யாகுதிபண்ணிப்பின்புபிரமத்தையடைகிறபேருண்டு இதுவல்லாமல் இன்னம்பி

ரமத்தையடைகிறபேர் செய்கிறவிதத்தைச்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (யஅ)

அறிவதாகிய வங்கியிலேகொள
வறிவையேசில ராகுதிபண்ணுவர்
செறிவதாஞ்சமத் தீயிடையேசில
பொறியதாய புலன்களைப்பவர்கள்.

(இ-ள்) அறிவாகிய அக்கினியிலே சேரத்தக்கதாகஅறிவைத்தானே சிலபேராகுதிபண்ணுவார்களென்றுஞ் சமத்தினாலே தாமுண்டாக்கின அக்கினியிலே குறிவைத்தெரிவதுபோலச் சிலபேர ஐம்புலாதிகளையிவார்களென்றுஞ்சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (யகூ)

புந்தியாப்பொறி யைந்தையும்போக்கவே
யிந்தியத்தழல் வாயிடுவார்சில
ரிந்தியத்தொழில் யாவையுஞானசெய்
சிந்தியொக்கவெந் தீயிடுவார்சிலர்.

(இ-ள்) ந்தவாயிருந்து ஐந்துபொறியையும், இந்திரியாக்கினிவாயிலிடுகிறபேர் சிலபேரென்று மிந்திரியத்தொழிலெல்லாவற்றையும், ஞானமென்கிறசெய்வார்த்து யோகத்தினாலேவெந்த அக்கினியிலே யிடுகிறபேர்சிலரென்றுஞ் சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவரென்றவாறு. (உய)

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

தேடியபொருள்களாலுஞ் செயலறிதவங்களாலும்
நாடியயோகத்தாலு நவின்மறைஞானத்தாலும்
கூடியபரிசிலவேள்வி குலாவுவாரனேகரிங்குப்
பாடியவிவர்களன்றி யினஞ்சில பரிசுங்கேளாய்.

(இ-ள்) சம்பாதிக்கதிரவியங்களினாலேயும் வல்லமையினால்செய்த தவங்களாலேயும் பிரமத்தை நாடிச்செய்த யோகத்தினாலேயும் சொல்லுகின்ற நால்வேதஞானத்தினாலேயும், பிரமத்தைக்கூடுகிறநிமித்தியம் யாகஞ்செய்கின்றபே ரனேகம்பேருண்டென்று மிப்போதுசொன்னவிவரமல்லாம லின்னம்பிறமத்தைசசேறுகின்றவிவரமுண்டு அதையுஞ்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர் என்றவாறு. (உக)

கொச்சகக்கலிப்பா.

மிகமேநின்றபிராமணனை யங்கபானனிடையேபுகவிட்டுள்
ளகமேநின்றவபானனையிப் பிராணனிடையாகுதிபண்ணி
யிகமேயிரண்டுமயக்கமற விருப்பார்சிலர்மற்றிவர்கள்காண்
டகமேநின்றபிராணாயாமத்தே தலைநின்றவரென்பார்.

(இ-ள்) முகத்திலேயிருக்கிற பிராணனை அபானனிடத்திலேபோக விட்டு மனதுக்கு அதிகமாயிருக்கிற அபானனை இந்தப்பிராணனிடத் திலே யாகுதிபண்ணி இசத்திலேயிந்த இரண்டுமெயக்கமுமறத்தகககா கவிருக்கிறபேர் சிலபேருண்டு பின்னையும்-இப்படிக்கொத்தபேர் தே கத்துடனேயிருந்தாலும், பிராணயாமத்திலே மேலாயிருக்கிறபேரெ ன்பார்களா என்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உஉ)

கலிவிருத்தம்.

இன்னவர்கள்யாவர்களும் யாகமுழிவாரோ
யன்னவாகளேயரனிற் றீமையினகன்றார்
சொன்னபரிசாலிவை தொடங்கிமுடியாதார்க்
கென்னபரிசாலுமிக மில்லைபரமுண்டோ.

(இ-ள்) இப்படிக்கொத்தபேரெல்லாரும பிரமத்தைச்சேர்கிறவிவா த்தையறிவார்களென்றும, அதுவுமல்லாமலிவர்களே தீமையைநீக்கஅ றுத்திருக்கிறபேர்களென்றும, நான்சொன்னபிரகார மிந்தவகைசெய் தாமுடியாதபேர் எந்தவகைசெய்தாலு மவர்களுக்கு இகபரமிரண்டுமி ல்லை என்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உ௩)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

இப்படியுரைத்தவிந்த யாகங்கள்யாவுமுன்னாஞ்
செப்பியபிரமத்தின்கண்ணே செனித்தனசெய்யுங்காலே
யொப்பரிதாயபுத்தி கருமத்திலுளவாமுள்ள
தப்படியறிந்துநீயும் பாவத்தினகலநிற்பாய்

(இ-ள்) இந்தவிதஞ்சொல்லுகின்ற யாகங்களெல்லா முன்னேசொன் னபிரமத்தினுடையகண்ணிலே பிறந்தனவென்று மதுவல்லாமல் ஒப் புகளு அரிதானபுத்திகருமத்துக்குள்ளாவாயென்றும் யிதுவுண்டான காரியமென்று நீயுமறிந்து பாவத்துக்கு அகலநில்லென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர் எ-று. (உ௪)

கலிவிருத்தம்.

தொன்மையயாகமுன் சொன்னதொகைக்கெல்லாம்
நன்மையயாமிகற் பாலதுஞானமே
பின்மையாலுறுத் தங்கதுபேணிடின்
தன்மையாதெனி லாங்கதுசாற்றுவாம்.

(இ-ள்) என்போலாகிறதற்கு விவரமாய்முன்னேசொன்ன தொகைக் கெல்லாம் நன்மையானதென்னவென்றால் களங்கமில்லாதஅமிர்தமா யிருக்கின்றது ஞானமென்றும் இதுவல்லாமல் பின்னையுந்தேகங்காணு கத்தானை செய்கின்றவகையைப்படியென்று லதுவுஞ்சொல்லுகிறேன் கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உரு)

விழியாமெனவறிவாலறி வுறுவார்வீழ்வசமே
வழிபாடுசெய்தவர் சேவடிமலர்சூடுடவர்நா
மொழியாதவர்களும்யாவையு மொருநீயுனதிடையே
யழியாவகையதுவாவதோ ரறிவேயருளுவரால்.

(இ-ள்) அறிவின்கணவசமாய் வழிபாடுசெய்தவர்கள் சேவடியிலே மலர்சூடினபேர்கள் தயையிலாதநீச்சராளுலும்அவர்களுக்கு வழிபோலே அறிவினாலே அறிவுண்டாமென்று மானபடியினாலே எல்லாவற்றையும் நீவிட்டு உன்னிடத்திலே அழியாவகையாயிருக்கிறபேரறிவை யறியென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உசு)

அதனால்வருபயன்யாதெனி லழிபாதகமுதலாய்
விதனூடம்வினையாழியி னிடையேவிழுகுறுவார்
இதனுகியவறிவாகிய சிதையாழிதனையினுல்
விதனும்வகைகளசேவர் களென்னனெயெனிலதுகேள்.

(இ-ள்) தயவுஞ்சாத்மீகமுமில்லாமல் உலகத்திலே இருக்கிறபேர்களுக்கு அதனால்வருகிறபயனென்னவென்றால், பழிபாதகமுதலானவெல்லாமுண்டாய் வினையென்கிற சமுத்திரத்திலேவிழுந்து அழுந்திப் போவார்களதுவெப்படியென்றால் அதிதனாயிருக்கிறதற்கு அறிவாகிய வாளினாலே வினையெல்லாவற்றையும் சங்கரித்தால எனைப்போலாகிற வகையாய்க் களைசேர்வார்களதுவெப்படியென்றால் அதுவுஞ்சொல்லுகிறேன்கேளென்றுசொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (உஎ)

எறியாவெரிவருகானிடை யெரியாதனவெவைதா
னறியாவறிவுடையீர்களு மறிவீரதுமதுபோற்
குறிபால்வருகுணஞானமே யனலேலொளுவிடுமேற்
பொறியால்வருவினையாயிவை பொடியாமிதுபொருளோ.

(இ-ள்) காடானதுவெந்துபோமென்றறியாமல காட்டுமரந்தானேயிழைந்து பற்றிப்படுக்காடுவெந்ததுபோல மனதினாலேவருகிறதையுங் குணத்தினால்வருகிறதையும், மெய்ஞ்ஞானமென்கிற அனலகொளுக்கிப்போடுமென்று அறிவுடையபேரறிவார்களென்றும் அதுவல்லாமல் பொறியினாலேவருகிறவினைப் பொடியாகிறது ஒருபொருளோவென்றுஞ்சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று (உஅ)

கலிக்லேத்துறை.

நீதற்பாலம்வினைபுரிவோருஞ்சிலநாளி
லேதற்பாலமறிவறிதககோயாதென்னி
லோதற்பாலர்பாலுமிவ் வுண்மைப்பொருள்பாலுங்
காதற்பாலாம்புலங்களைவென்றாரிவர்களன்டாய்.

(இ-ள்) கருமத்தைச்செய்கிறபேர் சிலநாளையிலே கருமத்தைப்போ லத்தீதையடைவார்க ளறிவைநன்ருகவறிந்த 'பெரியோர்களைமொன்ற ஞானத்தைச் சொல்லுகிறபெரியோர்களிடத்திலேயு முண்மையானவ ஞானத்திலேயுங் காதலுடனேமனதுவைக்கபேர்களே ஐம்புலனை வென்றபேர்களென்றுசொன்னூர் ஸ்ரீகிருஷ்ணதேவர்என்றவாறு.()

சொலலருஞானப்பொருடெரியாதுசொன்னலு
மல்லவிதாமென்றையுறுவாறுங்கன்பில்லா
ரில்லவராவரிசபரமில்லாரிவர்கண்டாய்
தொல்லறிவாலேயையுறவற்றூர்துறவுற்ருர்.

(இ ள்) கருமிகளுக்குச்சொல்லுதற்கரிதான ஞானத்தினுட்பொரு ள்தெரியாது அல்லவென்று ஞானத்தைஎத்தனைசொன்னூலும் இதுப ரமல்லவென்று சந்தோஷப்படுவார்கள், சொல்லுகிற ஞானத்தினிடத் திலே யன்பில்லாதபேரவர்களுக்குச் சுகமிகபரத்திலுமில்லை பேரறிவி னலே சந்தேகமற்றிருக்கிறபேர் துறவானஞானத்தை அறிந்தபேர்க ளென்றுசொன்னூர் ஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (௩௰)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

யறியாமையிலேபிறந்துன்ற னகத்தேவளர்ந்தேதையுறவை
நெறியாநின்றஞானமெனும் வாளால்வெட்டியறநீக்கிக
குறியாயுன்றன்வினைவினைத்துக் கொள்வாயென்றுங்கூறினுன்
உறியார்வெணணெய்தொட்டுண்டிவ் வுலகமுண்டபெருவாயான்.

(இ-ள) என்னையறியாமையினூலே யிதுவரைக்கும் உலகத்திலே ய னே சனனமெடுத்தாய் இனியுன்னுடையமனதிலே வளர்ந்தசந்தேகத் தைச செவ்வையாயிருக்கின்றஞானவாளினூலே நீக்கியறவெட்டிப்போ ட்டுக் குறிபபாய்என்பேரிலேமனதைவைத்து உன்னுடையகருமத்தை ச்செயதுகொடுவாவென்று வெண்ணை யுறிதாவியெட்டியுணடு பூலோ கத்தையுமுண்ட பெருவாயனுன ஸ்ரீகிருஷ்ணதேவர் சொன்னூரென்ற வாறு. (௩௧)

௪-வது-சம்பிரதாய அத்தியாயம்-முற்றுப்பெற்றது.

*

ஆச-அத்தியாயம்-௪-க்கு-கூடியசெய்யுள்-௱௪௯.

ஐந்தாவது

# சந்நியாசயோக அத்தியாயம்,



கலிவிருத்தம்.

பூத்தருளியொருமலரிற் புவனமவையீரேழுங்
காத்தருளிவிளையாடிக் கடையொடுக்கிக்கணவளரும்
தீத்தவமறைமுறைமொழிந்ததிருவாக்குத்தெரியாது
பார்த்தனவனெதிர்நின்று சிலபின்னுமபகரலுற்றான்

(இ-ள்.) திருவுந்தித் தாமரைப்பூவொன்றினாலே ஆதியிலேபதினாலு லோகத்தையுஞ் சிருஷ்டித்தருளி நடுவிலே அதைக்காத்தருளித்தா முங்கூடிநின்று திருவிளையாடலாடி அந்தத்திலேயொடுக்கியோகநித் திரைசெய்தருளுகிறசுவாமிவேத விதியாகச்சொன்னதிருவாக்குத்தெ ரியாமல் அந்தசுவாமி முன்னேநின்று பின்னையும் அருச்சுனஞ்சிலவ சனஞ்சொல்லுகிறானென்றவாறு * (கடையென்பதனாலே ஆதிமத்தி யம்வந்தருத்தாபத்தியொடுக்குதலாவது திருவயிற்றிலேயடக்குதல்) (க)

கலிவிருத்தம்.

கருமநன்றெனவுமெதிர் களறுகின்றனைதுறவை
யருமருந்தெனமொழிதி யவையிரண்டினுமமல
ஒருமையென்றவர்தலைவை யுரைசெயென்றனன்விசைய
னிருமையின்பரிசுமிதுவெனவியம்பிடுமிறைவன்,

(இ-ள்) கருமத்தை நல்லதென்றும்முன்னே சொல்லுகிறீர் ஞானத் தைஅரிதான அமிர்சஞ்சீவியென்றும்பின்னே சொல்லுகிறீர் நின்மல மான சுவாமி அந்தக்கர்மஞானமென்றவிரண்டிலும் ஒன்றென்றுஅதி கமானதேது அதைச்சொல்லுமென்றான் அருச்சுனன் அதற்குச்சுவா மி யிரண்டின்விதமுமிதுவென்று சொல்லுவாரென்றவாறு. *(மருந் தெனவுமென் றும்மைவருவிக்க.) (உ)

துறவுநன்றருவினைசெய் தொழிலுநன்றிவைதுணியி
லறவுநன்றருவினைகள விடலிலகைவைமுயல்கை
பெறலினின்பமுமிழவினிடருமொன்றிலர்பெரிது
துறவினின்றவர்பிறர்கடெறினின்றிடுதொழிலர்

(இ-ள்) ஞானமும் நல்லது அரியகாரியத்தைச் செய்கிற கருமமும் நல்லது இந்த இரண்டிலும்அதிகமேதென்றுசொல்லத்துணிந்தால் அ றிய கருமங்கள்மெத்தவும் நல்லது அந்தக்கர்மங்களை விடுகிறதிலுஞ்செ ய்கிறதிலுஞ்நல்லது பலன்பெறுதலிலே சந்தோஷமும் இழக்கிறதி லேதுக்கமும் இவைகளொன்றுமில்லாதகர்மிகளே பெரியஞா

னைதநல அசையாமல் ........ இப்படி இல்லாதவர்களான ஞானிக ளே துக்கத்தாலசையாமல் சிறந்தகருமிகள்-எ-று. * (பிறர்களாலவரு பெருதலிலேசந்தோஷமும்; இழக்கிறதிலே துக்கமுமுள்ள ஞானிக ள்பெரியகருமியென்று மறிவது,) (௩.)

பெருமையென்றியதுறவு கருமமென்றிருமையினு
மருமையொன்றினையறிஞ ரவையிரண்டையுமுடைய
திருமையென்றறியுமவரிவையறிந்திலரியல்பி
னொருமையென்றுணருமவரிவையுணர்ந்தவருணர்வில்

(இ-ள்) பெருமைபொருந்திய ஞானம்கர்மமென்கிறஇரண்டிலும்ஒ ன்றை யருமையாக அறிந்தவர்களே அந்த இரண்டையுமுடையவர்கள இரண்டையுமொன்றென்றறியாமலிரண்டென்றறிகிறவர்களே இரண் டையுமறிய அறிவில்லாதவர்களிந்தயிரண்டும் ஒருசுபாவத்திலே அறி விலொன்றென்றறிகிறவர்களேயிரண்டையுமறிந்தவர்கள்-எ-று. * துற வாவது விடுதல் இந்தவிடுதலேஞான மென்றுரை யெழுதுவானேனெ னில்அறம் பொருளின்பமாளகர்மமூன்றையுமவிட்டபிறகுஞானமாகை யாலே துறவை ஞானமென்றுரை யெழுதினது இரண்டாக அறிதலி னாலேகர்மபந்தப்படுவனென்பது இயல்பினொருமை ரென்றுணருமவ ரென்பதுகர்மானுபவத்தையும்,ஞானானுபவத்தையும்,முன்னிலாராய் ந்துமனதிற்கொடுத்துக்கொண்டது சுபாவம்இந்தச்சுபாவத்திலே யிர ண்டனுபவமு மொன்றானதினாலே ஞானகருமமென்றயிரண்டும் ஒன் றென்றுகொண்டறிகிறவர்களென்பது இதனாலே யிரண்டென்றறிகிறவ ர்கள அறிந்தவிரண்டையுமேஅறியார்களென்பது ஒன்றாகஅறிந்தவன் ஞானியென்பதருத்தாபத்தி ) (௪)

வினைமுயன்றிடவதனில் வினைதருந்துறவதுகொ
டெனையடைந்திடுவரெவர்கருமதன்செயலெதெனி
னினைவருந்தகையபொருணெறியர்தவாகனெறி
யனைதநதொழில்புரிய மவர்களென்பதனையறி

(இ-ள்) யதனை யிச்சியாத கருமத்தைச்செய்ய அந்தக் கருமபலத்தி ல்ஞானம்விளையுமஅந்தஞானத்தைக்கொண்டவர்களும் என்னைச்சே ருவார்கள் அந்தக்கருமத்தின் சைகை யேதென்றால் நினைக்கஅரிதா னசுபாவமுள்ள பொருளின் மார்க்கத்தை அறிந்தவர்களுடைய வழி யையொப்பானதங்கள் கருமத்தைச்செய்கிறவர்க ளென்கிறதை நீயறி யென்றவாறு* என்னையடைதலாவது பிரமத்தையடைவ ரென்பதுஇ ந்தப்பிரமத்தை யடைகிறது இன்னாருக்குண்டு இன்னாருக்கில்லை பெ ன்யதில்லை அவர்களுங் கருமனிஷ்டனுகிற பிரமத்தையடைவார்கள் அ ந்தக் கருமச்செயலே தென்னிற் பிரமத்தை யடைகிற வர்கள் வழியேகரு மம்நினைக்க அரிதான சுபாவமுள்ள பொருளாவது பிரமம், நினைவருசத்ய பொருணெறி யறிகஇடுத லறியதனையதக்

தொழில்புரியுமவரறிந்திவேரறி என்றுபாடமோதில்பிரமார்க்கத்தை யறிதலரிதுஅதையறிவதாரென்னில், அதையொப்பானதங்களுடைய கருமத்தைச்செய்கிறவர்களறிவர்அதைநீயறியென்றுரைகொள்ளும்.)

கவைதருங்குண்ணுமிகு களிதரும்புலனுமெனு
மிவைகடந்தவர்களெனை யறிவினின்றிசையுமவர்
நவைதருந்தொழில்செயினு நலிவதெவகவரையவை
யவையுகந்தவர்கள்வினை யமைதுறந்தடைகுவதென்

(இ-ள்) கருமத்தைத்தரப்பட்டகுணமூமிகுந்த சுகத்தைத் தரப்பட்ட விஷயமுமென்று சொல்லப்பட்ட இதைக்கடந்தவர்களென்னை யறிவிலேநின்றுபொருந்தப் படவர்களிவர்கள் குத்தத்தைத்தரப்பட்ட கருமத்தைச் செய்தாலும் அந்தக்கருமம் அவர்களைஎங்கேவருத்தப் பந்துமவருத்தமாட்டாது தானேகெடும் அந்தக்கருமத்தைஇச்சித்த வர்கள அந்தக்கருமத்தினாலே விளைகிறபலனை விட்டுப்பெறுவதென்ன அந்தப்பலனையே பெறுவரென்றவாறு * (குணத்தையும் விஷயத்தை யும கடந்தவர்கள் நிருமலராகையாலேஅவர்களைக்கருமமான அழுக்க டையாது இச்சித்தவர்கள் குணவிஷயங்களுடனே கூடினவராகையா லே பலனாகிறஅழுக்கடையுமென்பது.) (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்

காணுங்கேட்குமூறுமுகக்குங்காலாணடக்குங்களைவளரும், பேணுந்து றக்குமூச்சுவிடும் பேசும்விழிக்குஞ்சும்பிளிக்கும், பூணுமின்னும்பல வெளினும்புலன் சேர்பொறியின்புணர்ப்பென்றே, தூணுங்கிரியுமெனு வென்றுந் துளங்கான்விளங்குந்துணிவுடையோன்

(இ-ள) கண்பார்க்கும் காதுகேட்கும் தோல்பரிசிக்கும்மூக்குமுகக் கும் கால்நடக்கும் நித்திரைப்பண்ணும்கூடும்விடுமூச்சுவிடும் பேசும் கண்விழிக்கும்கண்மூடும் இப்படித்தரிக்கப்பட்ட இந்தவிதங்களனே கமானாலும் விஷயங்களைச்சேர்ந்தவிந்திரியங்களின அனுபவமென் றேநிச்சயமாகஇவையெல்லாம் தான்பண்ணினவனல்லவென்றும்தூ ணைப்போலும் மலையைப்போலும்என்றைக்குங்கலங்காதஅறிவுவிளங் கப்பட்ட தூணிவையுடையவன்-எ-று * இவையெல்லாம் தான்பண்ணி னவனென்றுந்தன் அனுபவமென்றும் அறிந்தவன் துரும்பைப்போ லும் அணுவைப்போலுந் தடுமாறுவனென்றகருத்தாபத்தி தானல்ல வென்று விளங்காதவன் துளங்குவனென்றும். (௭)

யாரும்வினைகளென்பொருட்டாலிபற்றிப் பயனைபிகள்வார்கள்
சேரும்வினைகளவற்றோடு சேராரோவத்திடனுரைக்கில்
சாருமுடனேபிறந்தெழினுந் தண்டாமரையின்றனையிலைபு
நீருமெனலாயிரப்பரதுநின்றூற்கென்றுநிகழாதால்

(இ-ள்.) ஆசானனுமெனிமித்தமாகக் கருமங்களைச்செய்துபிர யோசனத்தை விட்டவர்கள்தங்களைச் சேரப்பட்டகருமங் களோடும்

தாங்கள்சேரார்கள் அந்தக்கருமங்களோடுசேராதவர்களுடனே அந்தக்கருமங்கள்சேர்ந்தவிதத்தைச் சொலவிச் சார்பாகப் பட்டதந்நீருடனேகூடப் பிறந்தெழும்பினாலுங் குளிர்ந்த தாமரையினிடமான இலையும் நீரும்ஒன்றோடொன்று கூடினாலும் ஒட்டாதுபோல விருப்பார்கள அப்படிஒட்டாமல் நின்றவர்களுக்கு என்றைக்கும் அந்தக்கருமமடங்கடவாது எ-று.*(நடவாதாவது அவர்களுடனே கூடிநடவாது அப்பொழுதே பழியுமென்பது ஒழினுமென்றவும்மை சிறப்பும் மைகீரிலேபிறந்து நீரிலேவளர்ந்து நீரிலெழும்பி எல்லாம்நீராலே விளங்கினாலுமந்நீரும்இலையும கூடினாலும் ஒட்டாததினாலே சிறப்பும்மை.)

கொச்சகக்கலிப்பா.

உடனாயபுலனானு மன்னானுமுடம்பானு
நடமாகுமெனமுயல்வர் நாடோறுமுயன்றாலும்
விடமாகும்வல்வினையே வீடாகும்வினைப்பயனைக்
கடனாகுமெனமிலவா னவற்றாலேகட்டுண்பான்

(இ-ள்) கருமத்துக்குடனாகிய விஷயத்தினாலும் மனதினாலும் உடம்பினாலும் பலசங்கம் நஷ்டமாகுமென்று கருமத்தைச் செய்வார்கள் தினமதினமுஞ் செய்தாலும் விஷயத்தை யொப்பாக வெறுக்கப்பட்ட வலுமையான கருமமே மோக்ஷமாகும் கருமப்பலனைத்தனக்கு அனுபவிக்கக் கடனுமென்றிச்சித்துச் செய்கிறவன் அந்தக்கருமத்தாலே கட்டுண்பான்-எ-று. (பலசங்க நஷ்டமாவது கருமபலத்துடனே கூட்டம் நாகமென்பது பலத்துடனே கூடின சித்தத்துக்குப் பலசங்கம் நஷ்டமாகவே சித்த சுத்தியா மென்றறிவது பலனைவிஷபமாக நினைத்துச்செய்கின்ற கருமிக்கு அந்தக்கருமமே மோக்ஷமாம்வேறில்லை கருமம்பலனை அமிர்தம்போல அனுபவிக்கக்கடனுமென்றிச்சித்தவன்கருமபந்தப்படுவனென்பதுவிஷயத்தால் வந்தஅமிர்தம ஆகுபெயர்.) (௬௨)

கலிவிருத்தம்.

அன்பவினையாகுபயன்விட்டமைதியாலே
யென்பதுபொய் வாயிலமையூரதனி னுள்ளே
இன்பவுருவாயினி னிருப்பனியல்பாயே
முன்பயில்வதாம்வினைசெயென்முயல்வியேனால்,

(இ-ள்) தோழர்கருமத்தாலுண்டாகிற பிரயோசனத்தைவிட்டு அடங்கியமைந்த விவேகசித்தத்தினாலே ஒன்பதுபொய்வாசலமைந்தடங்கானதேகம் அந்தத்தேகத்தினுள்ளே சுகசொரூபமாய்ச் சுகமாயிருப்பான்கருமமானது சுபாவமாகவே அநாதியே வந்த பழக்கமாம் நான் கருமத்தைச்செய்யேன் செய்வியேனென்றவாறு * இதன்பொழிப்புரை இந்திரியஜெய முண்டானவன் எப்படி யிருப்பானென்னில் அடங்கியமைந்த விவேகசித்தத்தினாலே கருமத்தாலுண்டாகிற பிரயோசனத்தை விட்டுத்தான் கருமம் பண்ணேன் பண்ணுவியேன் கருமமானதுநவத்துவார புரமான தேகத்துக்குச் சுபாவமாக அ

ளுதியேவந்த பழக்கமென்று அநாதத்தேகத்துள்ளே சுகசொரூபமாய்ச சுகமாயிருப்பனென்பது இதனை யமைதியாலே வினையாகுபயன் விட்டு வினைசெய்யேன்முயல்வியேனென்பது பொய்வாயிலமையூரிய வபாயே முனபயில்வதாமதனி னுள்ளேயின்பவுருவாயினிதிருப்பனெனமாறுக) (௰)

இவ்வகையினுயசெயல் யாவுமியல்பேகா
வவ்வகையமாயையத னலறிவுற்றே
செய்வகைபன்யானென்னது செயமைவினைவென்றே
மொய்வகையினுலழிவரோபுலனிலாதார.

(இ-ள) இக்கவிதத்தினுலுண்டாகிய கருமங்களெல்லாஞ் சுபாவமேகண்டாய அருசசுறு அந்தவிதமான மாயையினலே அறியமாட்டாமலே கருமங்களைச்செயதவனை நான் இந்தக்கருமங்களை நானசெயதேனென்று நிச்சயமாகப் பொய்விதத்தினலேசாசமாகிறவனையறிவிலலாதான்-என்றவாறு * எலாறேயென்ற ஏகாரமும், இயலபேயென்றஏகாரமும் உற்றேயென்ற ஏகாரமும அழிவரேயென்ற ஏகாரமும்தேறறகாரம், அறியமாட்டாமலாவது கருமங்களைச்சுபாவமென்றறிய மாயாமயக்கத்தினலேமாட்டாமலே நாஞ்செய்தேன் என்கருமமென்றேபொய்யான அகங்காரசுதந்தரவிதத்தினலே யறிவிலலாதானுசமாகிறதேயல்லாமல இருக்கமாட்டுவானோமாட்டானென்பது இயல்பேயாவது சுபாவமேயலலாமல வேறலலவென்பது அறிவுற்றேயாவது அறியமாட்டாமலேயல்லாமல் அறிந்தல்லவென்பது என்றேயாவது நான்செய்தேன் கருமமென்றேயெலலாம் சுபாவமாகச்செயயப்பட்டது சுபாவமாகவுள்ள கருமமென்றெண்ணுமலென்பது, அழிவதேயாவது அழிவதல்லாமலிருப்பதில்லையென்பது அறிவுள்ளவர்கள மாயையைநீங்கிச்சுபாவமென்றறிந்து தன்செயலுஞ் சுதந்திரமும் மறநதும் அழியாமலிருப்பனென்பதருத்தாபத்தி. (௰௧)

கலிவிருத்தம்.

அறிவினலறிவிலா தவையெலாமழியவே
செறிவினறிவுயா னிரவிபோறறிகழுமா
னெறியினனிதனினர் நிலையுமாயிதனிலோர்
பிறிதிலாவகையினு பிறவியானவையிலார்.

(இ-ள) ஞானத்தினலே அஞ்ஞானமெலலாம் நாசமாகவே ஞானமானவர்கள் ஞானமானது ஆகாசத்திலேவிளங்குகிற சூரியனைப்போலப் பிரகாசிக்கும், இந்தமார்க்கத்தினலே ஞானத்திலேநிலைமையும் நிஷ்டையுமாகி இக்ஞானத்மாவான சைதந்நியத்திடத்தில் வேறொன்றில்லாவிதத்தினலே பரவசத்தையுடையவர்கள் இனிமேற்பிறக்கிறதானசனையில்லாதவர்கள்-எ-று * (வேறொன்றாவது அஞ்ஞானத்திலேமயங்கி ஆங்காரத்தையடைந்து மறுபடியும்பிறக்கிறது) (௰௨)

ஆறுசீரடியாசிரியவிருத்தம்.

நன்றேஞானம்வருமறையோ னாட்டினாயினிறைச்சியினைத்
தின்றேயுழலுமவன்யானை யாவேனதிர்ந்ததிறத்தெல்லா
மன்றேயொன்றதாமென்று தறிவாய்நின்றவனேயெங்கும்
ஒன்றேயாகக்கண்டிருப்பா னுடம்போடிருந்தேயுடம்பறுப்பான்.

(இ-ள்) நன்மையுள்ள ஞானமவரப்பட்ட பிராமணன் காட்டிலேகா யிறைச்சியைத்தின்று தம்மாறுகின்றநீசன் ஆனை பசு இப்படியென்ற திந்த வித்ததிலெல்லாம வற்றக்குறைச்சலினாலே அல்லவென்றுமல் ஆத்மாவாயநின்று அந்தக்கருமங்களெல்லாம் ஒன்றாகவேகண்டிருக்கி றவன் அந்தவுடம்போடேயிருந்த சிருஷ்டிதேகத்தை இனிமேலவாரா மலறுப்பான் எ-று. * இப்படியெல்லாரிடத்திலும் ஆத்மாவொன்றாக க்கருமமுமொன்றாக இதையல்லவென்றுமல் ஆமென்றுமல்சமமா கக்கண்டிருக்கிறவ னிந்தத்தேகத்துடனே இந்தப்பிறவியையொழிப் பானென்பது,) (௰௩)

இகமேசெழுபுலன்விளைந்த வின்பமெல்லாமறவிகழ்ந்துள்
ளகமேநிறையும்பேரின்ப மடைந்தார்க்கென்றுமழியாதாற்
புகமேய்கின்றபுலன்பொறிகள் புணர்ந்தேயின்பமாமென்றுந்
தகமேவிடார்களெனவுவமை தக்கோரென்றுஞ்சாராரால்.

(இ-ள்) வெளியிலேவிளங்கும் விஷயங்களிலே விளைந்தசிற்றின்ப மெல்லாமறவிட்டு உள்ளேநிறையப்பட்ட பேரின்பத்தையடைந்தவர்க ளுக்கு என்றைக்குமந்தப் பேரின்பமழியாது மனதிலேபுகுந்த அனுப விக்கின்றவிஷயங்க ளிந்திரியங்களைப்பொருந்திச் சுகமாமென்றும், ... வயவத்துக்குத்தக்கதாக மேவிட்டதுக்கமாமென்றும் அவைக ளொரு காலத்துக்குந்தக்கவர்களான பிரமஞானிகள் என்றைக்குஞ்சே ரார்கள் என்றவாறு. * (பேரின்பமாவது ஆத்மசித்தி ஆகையால்ஆத்ம லாபம்பெற்றவர்களுக்கு பிரமநிஷ்டைதவிராதென்பது-ஆல் ஆசை சு கமாமென்ற சந்தோஷத்தையும் துக்கமாமென்ற கிலேசத்தையும் ஆ த்மஞானிகளடையாரெனவே இதிவிளையாத திருக்தியாயிதைமோகி யாத அமோகியாயிருப்பானென்பது அருத்தாபத்தி ) (௰௪)

கலிவிருத்தம்.

உடம்புடனேயுள னாகியிருந்தே
விடம்புரைகாம வெகுளியின்வேகாச்
சடம்பொறையாமை தவிர்ந்தவனேநல்
லிடம்புகுஞானியு மின்புறுவானும்.

(இ-ள்) உடம்புடனே யுள்ளவனாயிருந்தே விடத்தையொப்பான காமத்தினவேகம் கோபத்தின்வேகம் இந்தவேகங்களாலாகிற தேகப் பொறுமையைத் தீர்த்தவனே நல்லிடமான மோட்சத்தைக்கூடுகின்

ற ஞானியுமானந்தம் பெறுவான் என்றவாறு. * (உடம்புபோன பின்பு அறிவு வாராததினாலே உடம்புடனே இருக்கும்போது தானே ஞானம்பெறவேண்டுமாகையா லுடம்பிருக்கும்போது தானே காமக் குரோதாதிகளின்வேகத்தைப்பொறுக்க அறிகிறவனே ஞானியுஞ் சுகியு மென்பது,இதையறியாதவன் மூடனுந் துக்கியுமென்றதருத்தாபத்தி.) (உரு)

மெய்யறிவேவினை யின்பமதாகவு
மெய்யறிவேவினை யாடிடமாகவு
மெய்யறிவேயொளி யாகவுமேயா
மெய்யறிவேபெறுமின்பம்விடாதார்

(இ-ள்.) ஆத்மாவே விளையப்பட்ட சுகமாகவும், ஆத்மாவே விளையாட்டிட மாகவும், ஆத்மாவே சோதியாகவும், இப்படியாகு மிவர்கள ஆத்மாவே பெறப்பட்டமோட்சசுகத்தைவிடாதவர்கள்-எ-று. * (விளையாடு மிடமாவது,ஆத்மா ராமமானந்தமாவன-இதை ஆத்மாராமனென்பார்கள்.) (உசு)

காவல்செய்தைந்து புலன்களிரண்டு
மேவலருமபுரு வத்திடைவிட்டிட்
டாவகைநின்ற வபானபிராண
னேவலிலான னடக்கையறுத்தே

(இ-ள்) பஞ்சேந்திரியங்களை விடயங்களி லோடாமற்காவல்செய்து கண்களிரண்டும்யோகத்தைக் கூடவருகிறபுருவத்தினடுவிலேவிட்டுநிறுத்தியோகத்துக் காணவிதமாய்நின்ற அபானவாயுவையும் பிராணவாயுவையுந் தன்னுடையஏவலினாலோடிமீளுவதல்லாமல் அவைகளின் சுபாவமாக ஓடுவதான அசைகின்றதை யறுத்து அடக்கஎன்றவாறு

அஞ்சுபொறித்திறனாசையடக்கா
னெஞ்சுபயத்தொடு கோபமுனீவா
வெஞ்சுதிறத்தொலி யோகிகளேகா
ணுஞ்சுபிறப்பிட ரியாவுமுதிர்ந்தார்

(இ-ள்) பஞ்சேந்திரிய விதயங்களின் ஆசையையடக்கி மனதுபயத்துடனே கோபமும்நீக்கி ஒருகிமிடமானாலு மிளைத்துவிடுவதில்லாமல்நிரந்தரமு மிப்படியிருக்கிற யோகிகளேகண்டாய் கருமத்துக்குத்தப்பிப் பிழைத்துப் பிறவி துக்கமுதலானதுக்கமெல்லாங் கீழேவிழ அடித்தவர்கள் எ-று *(காவல்செய்தென்றகவியும் அஞ்சுபொறியென்ற கவியும்உரைபொருதொடர்- இந்திரியங்களைக்கட்டிக்கண்ணிரண்டையும் புருவ நடுவேநிறுத்திப் பிராணவபான னிரண்டும் அசைவகளிச்

சையாக அசையாமற்றனக்குவேண்டியபோதசைய அடக்கி இந்திரிய ஆசையையடக்கி மனப்பயத்தையுங்கோபத்தையுந் தவிட்டு இனையாமலெப்போதுமிப்படியிருக்கிறயோகிகளேதப்பிப்பிழைத்துப்பிறவித்துக்கமுதலானதுக்கமெல்லாம்விழுந்தள்ளினவர்களல்லாமல் இப்படியிராதவர்களல்லகண்டாயருச்சுனாவென்று இரண்டு கவிக்குமிது பொழிப்புரை-உயர்ந்தலாவதுஇப்படியிருக்கிற யோகிகள் மேலேறினவர்களாகையால் அங்கேகூடவிருந்த பிறவித்துக்கமுதலான வெல்லாங்கிழியுதிர அடித்தவர்களென்பதுஇவர்களுக்குப் பிறவிமுதலொருதுக்கமுமில்லாதவரென்றதருத்தாயத்தி,) (யஅ)

அறுசீரடி யாசிரியவித்தம்

சாதிபுரியுந்தொழில்களுக்குந்தக்கோர்செய்யுந்தவங்களுக்குத்
தீதிலுலகமேழினுக்குஞ் சேருமிடனுயுள்ளவெனை
யோதிமுடியும்பரிசேமெய் புணர்ந்தார்பிறவாரெனவுரைத்தா
னுதிமுடிவொன்றின்றியே யனைத்துந்தானேயாய்நின்றான்

(இ-ள்) அந்தந்தச் சாதிகள்செய்யப்பட்ட கருமங்களுக்கும் பெரியோர்செய்யப்பட்ட தவசுகளுக்குங் குற்றமில்லாத வேழுலோகங்களுக்குஞ் சேரப்பட்ட இடமாயிருக்கிறஎன்னையோதிமுடியப்பட்ட முறைமைபோல மெய்யாக அறிந்தவர்கள் இனிப்பிறவாரென்று சொன்னார் அவர்யாரெனில் ஆதியந்தமொன்றுமில்லாமலே யெல்லாந்தானேயாகின்றஸ்ரீகிருஷ்ணதேவர்-எ-று. (யகூ)

கூ-வது சந்நியாசயோக-அத்தியாயம்,

முற்றுப்பெற்றது.



ஆக-அத்தியாயம்-கூ-க்கு கூடிய செய்யுள்-௱கூஅ.

ஆறாவது

# அப்பியாசயோக அத்தியாயம்.

---*---

கலிவிருத்தம்.

யோகமனைத்தவர் யோகமதற்கே
யேகமுகப்பொருளா யிருந்தே
நாகபடத்திடையேநடமாடு
மேகனவர்க்கிவை மீளவுரைப்பான்

(இ-ள்) யோகமனைத்துடையவர்களின்யோகத்துக்கொன்றானபொருளாயிருந்தேகாளிங்கனென்னுமொருபாம்பின்மேலேகூத்தாடப்பட்ட மேகநிறமான திருமேனியையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமி அருச்சுனனுக்குஇதைத்திரும்பச்சொல்லுவான்-எ-று. (க)

செய்தவினைப்பயன் விட்டவைதீரா
தெய்தவியற்றி யிருப்பவனேகா
ணுய்பவனைத்தகை யோகியுஞானி
வெய்தழற்பொலிவேள்விசெய்வானும்

(இ-ள்) செய்த கருமபலத்தைவிச்சியாமல்விட்டு அந்தக்கருமத்தை விடாமற் சேரச்செய்கிறவனைகண்டாயருச்சுன தப்பிப்பிறைக்கதினைத்த நல்லயோகியும்ஞானியும்லக்ஷணமுள்ள அக்கினியிலேவிளங்க யாகஞ்செய்கிற கருமியும்-எ-று. : இவன்பலத்திதனையல்லாமல்கருமத்திதனல்லவென்பது இதைஞானயோகமென்பார்கள் இதுவேசத்துவயோகமென்றறிவது.) (உ)

யேவினையாவையும் விடுதலில்லா
ரியாவர்களேனுநல்லயோகிகளாகா
ராவர்களாகி லவாவறலாகா
ஞேவலிலாதமெய் யோகமுமையா

(இ-ள்) ஐபாதங்களைச்சேர்ந்ததானசங்கற்பமெல்லாம்நாசமில்லாதவர்களெவர்களானாலும் நல்லயோகிகளாக மாட்டார்கள்சங்கற்பமுள்ளவர்கள் யோகிகளாவார்களாகில ஆசையறுதலே கண்டாயிந்திரியவிஷையமில்லாத மெய்யோகமுமெய்ஞ்ஞானமும்-எ-று * இதனாலாசையறுவிடிற் சங்கற்பமறுதுசங்கற்பமறுவிடில் யோகிகளாகார்கள் ஆவாகளென்னில அவர்கள்பொய்யோகியும் பொய்ஞ்ஞானியுமென்ப தருத்தாபத்தி யோகமுங்கருமமாகவிருக்கயோகமவேறு கருமம்வே

ருக்கசொல்லுவதேதென்னில் சரியைகிரியையோகம் ஞானமென் று நாலாம் இந்நாலுங் கருமமே இதைப்பதவிபேதத்தினாலே யொன்றை நாலாகவினது பதவியாவது சாலோகம் சாமீபமசாரூபமசாயுச்சியமெ ன்றுநாலாம்சாலோகம் கடவுளுலகத்தில் இருத்தல்சாமீபம்கடவுள்சமீ பத்திருத்தல் சாரூபம் கடவுளுருப்போன் றிருத்தல் சாயுச்சியம் கட வுளிற்கலந்திருத்தல். (௯)

உய்வகையோக மொருப்படுவார்க்குக்
கைவருமாசெயல் காரணமேகாண்
மெய்வகையோகம் விளைந்தபின்மெய்யே
செய்வனவானவை தீமையவேயாம்

(இ-ள்) தப்பிப்பிழைக்கிற விதமானயோகத்தி லொருமைப்படுகிற வர்களுக்கு அந்தயோகங் கைவருகிறபடிசெய்கிற கருமமேகாரணங்க ண்டாயருச்சுனா அப்படிமெய்பானவிதமாகியயோகம் விளைந்தபின்பு செய்கிறதான அந்தக்கருமமானது மெய்யாகவேபொல்லாதாகும்-எ-று. * (ஏகாரம்அசையோகமேஞானம்ஞானத்துக்குமப்படியென்பத ருத்தாபத்தி.) (௰)

புன்மையவாய பொறித்திறனோடும்
பன்மையவாய வினைப்பயனோடும்
அன்மையனானவ னப்பொழுதையா
தன்மையில்யோக மதித்தலின்றான்

(இ-ள்)புல்லியதாகிய விந்திரிய விதங்களோடும்பலவிதமாகியகரும பலத்தோடுங்கூடாதவன்அப்பொழுதே ஐயா தன்சுபாவமிலலாதயோ கத்திலே தலைமையாகநின்றவன்-எ-று. * (கூடினவன்கீழாகிறாசமான வனென்பதருத்தாபத்தி அன்மையனாவது அல்லாதவன் அதாவதுவி ஷையங்களோடும்பலத்தோடுங் கூடினவனல்லாதவன் ஆகையாலேகூ டாதவனென்பதுஅப்பொழுதேயென்றதுபின்னேவருமென்னாமல் அ ப்பொழுதேயென்றதுசங்கைநிவர்த்தி ) (௱)

தானலதியாவர்தன் மேன்மைசெய்தக்கோர்
தானலதியாவர்தன் கீழ்மைசமைப்பார்
தானலதியாவர்தன் மெய்ப்பகையராவார்
தானலதியாவர்தனக்குறவாவார்

(இ-ள்) இப்படிஞானசிரேட்டனாக நின்றவர்தானே தனக்குமேன் மைசெய்யத்தக்கவரல்லாமல்வேறேயார்தனக்குமேன்மைசெய்யத்தக் கவர்களாருமில்லை இப்படி ஞானநிலையில் நிலலாதவன் தானேதனக் குக் கீழமைசெய்கிறவ னலலாமல் வேறேயார் தனக்குக் கீழ்மை செய்கிறவர்களாருமில்லை இப்படிகவொத்த அஞ்ஞானிதானே தனக்

குமெய்யானபகையல்லாமல்வேறேயார்பகையாகிறவர் ஆருமில்லைஞானிகளுக்குத்தானேதனக்கு உறவல்லாமல்வேறேயார்தனக்கு உறவாகிறவர்கள்யாருமில்லை-எ-று.*(இதனால் ஞானியாயிருந்தால்தானே தனக்குமேன்மைசெய்கிறவனும் உறவாகிறவனும் அஞ்ஞானியாயிருந்தால்தானே தனக்குக்கீழ்மைசெய்கிறவனும்பகையாகிறவனும்தன்னையல்லாமல்வேறேயாருமில்லையென்பது ஆனாலன்னியராலேவருகிறதேதென்னில் அதுவுந்தன்ஞானாஞானங்களால்வந்ததாகையால் அன்னியராலேவந்ததல்ல தன்னாலேவந்ததேயாம் ஆகையால்தனக்குநன்மைவேணுமானால் ஞானியாயிருவென்றது அருத்தாபத்தி (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இறவாவகைதம்முள்ளத்தை யடக்குமவரேதமக்கென்று
முறைவாயுளரல்லாதார்தமக்கேபகையாயொழுகுவார்
துறவாதொழுகுந்துவந்துவங்கடுறந்தொன்றினையே தொடர்தவர்பால்
மறவாதொழுந்தமெய்யறிவும்மாரைமறைக்கமறையாதலால்

(இ-ள்) ஆத்மஞானத்தைநாசமாக்காதபடிக்குத் தங்களின்மனதை யடக்கப்பட்டவர்களே என்றைக்குந் தங்களுக்கு உறவாயுள்ளவர்களிப்படியல்லாதவர்கள் தங்களுக்கே பகையாய் நடப்பவர்கள் விடாமல் நடக்கப்பட்ட பாவத்தொடர்புகளை விட்டு ஒன்றான ஆத்மாவையே தொடர்ந்தவர்களிடத்தில் மறவாத அனுசந்தானத்தி லெழுந்தமெய் ஞானமானது இந்தமாயைமறைக்க அதனாலே மறைபாது-எ-று. * (இதனால்தன்மனதைச்செயித்தவனுக்கு அந்தமனதே உறவுசெயிக்காமலவிட்டவனுக்கு அந்தமனதேசத்துருவுமாகும் துவந்துவமான மாயாசம்பந்தங்களைவிட்டு ஆத்மாவையே தொடர்ந்தவனுக்கு அனுசந்தானத்திலெழுந்தஞானத்தை இந்தமாயைமறையாதென்பது ஆகையாலாதம ஞானமில்லாமல மனதைசசெயிக்கமாட்டான் இவன்ஞானத்தை மாயைமறைக்குமென்பது அருத்தாபத்தி.) (எ)

படும்பனுவல்பலவோதி யவற்றாலறியும்பயனுணர்ந்து
நீடும்புலன்களவைவென்று நிலையிற்கலக்கற்கரியானு
யோடும்பொன்னுமொருபொருளாயோ லொக்கப்பார்க்குமவனேயிங்
காடும்பெரியமாயக்கூத் தாட்டங்கண்டேயமைந்திருப்பான்.

(இ-ள்) பெரியோர்களாலே பாடப்பட்ட பலநாலுமோதிபந்த நூலாலே யறியப்பட்ட பலனை யறிந்துவளரப்பட்ட விஷயங்களைச் செயித்துத் தான்நின்ற நிலைமையில நில்லாமல் கலங்கச்செய்கிறதற்கு அரிதானவனும் ஓடும்பொன்னு மொருபொருளைப்போலச சரியாகப் பார்க்கப்பட்டவனே யிங்கேயாடப்பட்ட பெரிய மாயக்கூத்தாட்டத்தைக்கண்டு அமைந்திருப்பான் எ-று. * (நிலைகலங்காதது மனசுசெயமானது ஓடும்பொன்னுஞ் சரியாகப்பார்க்கிறதாவது நிருவிகா

யிருகப்பட்சியால் வருத்தமில்லாதநிலத்திலே யிருக்கவேண்டுமென்ப
து யாதொருவியாதாவது தழைநீர் விறகுதருப்பைமுதலானவை கிடை
யாமல்வருத்தாது கிடைக்கிறநிலத்திலென்றுஞ்சொல்லலாம்.) (௰)

ஒக்கும்வகையாற்குசைபரப்பி யதன்மேலுழையின்றோல்படுத்துத்
தக்கபுடைவையதன்மேலே விரித்துத்தானங்கதிலிருந்து
மிக்கமனையறவொடுக்கி வேறுசெய்யும்வினைகளுடன்
றொக்கபுலன்கடமையாக்கி யுணர்வுதூய்தாவதன்பொருட்டால்.

(இ-ள்) உயரமும தாழ்வுமில்லாமல் ஒத்தபடியாலே தருப்பையை
ப்பரப்பி யதன்மேலே மானின்றோலேப்படுத்துச் சுத்தமாகத் தக்கபு
டைவையை இந்தக்கிருஷ்ணாசலத்தின்மேலே விரித்து அந்தப்புடை
வையின்மேலே தானங்கிருநது சேட்டைமிகுந்தமனதைச் சேட்டைய
றவொடுக்கி நிறமாக்கி ஞானத்தைவேறுபடுத்தப்பட்ட கருமங்களுட
னே கூடினவிஷயங்களையடக்கி அறிவு சுததமாகிற நிமித்தமாக
எ-று. * (அறிவுசுத்தமாவது, சித்தசுத்தி ஒக்கும வகையாவது மேடு
பள்ளமில்லாதபடி புடைவையென்ற பாடத்தைத் துகிலேயென்றோது
வாருமுளர.) (௰௧)

தலையுங்கழுத்துமுடம்புமிவை செவ்வேதளராதேயிருத்தி
நிலையிலிருநதுகண்களைத்தன் மூக்குநுனிமேலேநிறுத்தி
யலையுங்கடல்போற்காமமுமெய பயமுந்தன்னைவிட்டகல
உலையுமனமுள்ளடக்கியென்னை யுணர்ந்தேயிருக்குமதுயோகம்.

(இ-ள்) தலையுங் கழுத்தும் உடம்பும் இவைகளைச்செவ்வையாக அ
சையாமல் நிறுத்திப் பத்மாசனமுதலான ஆசனத்திலிருந்து தன்மூக்
கு நுனியின்மேலே கண்களைநிறுத்தி அலையாமலலையப்பட்ட கடலை
யொப்பான ஆசையுஞ்சரீரபயமும் விட்டுப்போக விஷயங்களிலே
திரியப்பட்ட மனதைத்திரியாமலுள்ளடக்கி என்னைமேலான பலனெ
ன்றறிந்திருக்கப்பட்டதுவே யோகம்-எ று, * (தலையாமென்றகவியும்
ஒக்குமென்றகவியும் தலையுங்கழுத்துமென்றகவியும் ஒருதொடர்.) ()

கொச்சகக்கலிப்பா.

எண்டிகழும்யோகத்தை யிப்பரிசாலெப்பொழுதுங்
கொண்டுபயில்பவர்கடைக்கா லென்னையேகூடுவா
ருண்டியினின்மிகவாவ ருண்டுறப்பார்மிக்குறங்கிக்
கண்டுயிலையறத்துறப்பா ரவர்க்கிதுகைவாராதால்.

(இ-ள்) உலகத்தார் மதித்துவிளங்கப்பட்ட யோகத்தை இந்தவிதத்
திலெல்லாநாளும் என்னிடத்திலே மனதைநிறுத்திக்கொண்டு பழ
குகிறவர்கள் முடிவுகாலத்தி லென்னையேசேருவார்களல்லாமல் மா
யையிலே கூடார்கள்-போசிப்பில் மிகுந்தவர்கள் அந்தப்போசிப்பை

விட்டவர்கள் மிகுந்து நித்திரிக்கிறவர்கள் நித்திரையைச்சுத்தமாகவிட்
டவர்கள் அந்தநாலுபேருக்கும் இந்தயோகங்கைவராது பசித்தபோது
அற்பபோசனமும், நித்திரைவந்தபோது அற்பநித்திரையுஞ்செய்து
யோகத்தைச்செய்தாற் கைவரும் என்று. * கைவருதலாவது பலித்தல்
என்னைக்கூடுவாரென்று பாடமோதில் இருவருக்குமிடம்வேறுபடும்,
அதேதென்னில் ஓரிடத்திலிருக்கிறவனை வேறொருவிடத்திலிருக்கிறவ
ன் வந்துகூடுவதாகுமதனாலே என்னைவந்து கூடுவாரென்றபாடமாகா
து அற்பபோசனமும் அற்பநித்திரையும் செய்கிறபோது யோகஞ்செ
ய்யக்கூடாததினாலேஅவ்விரண்டையும்விட்டுஎந்நேரமும் யோகமொ
ழியாமல் யோகஞ்செய்யலாமேஅதனாலறவிட்டவர்க்குங்கூடயோ
கம்பலியாததேதென்னில் பிராரத்தம்மூன்றுவிதம் அதாவது சுவேச்
சையா பிராரத்தமென்றும், அநிச்சையாபிராரத்தமென்றும், பரவிச்
சையா பிராரத்தமென்றுமாம் இவற்றில்சுவேச்சையா பிராரத்தமாவ
து தானிச்சித்துவருகிறது பரவிச்சையாபிராரத்தமாவது அன்னியரு
டையவிச்சையினாலே வருவது அநிச்சையா பிராரத்தமாவது சுபாவ
மாகவந்துகொண்டேயிருக்கிறது, இவற்றில் சுவேச்சையான காமக்கு
ரோதாதிகளைவிட்டுப் பரவிச்சையானவிருகபட்சி வருத்தாதவிடத்தி
லிருக்கச்சொன்னதினாலே சுவேச்சைபரவிச்சை இந்த இரண்டுந் தன்
னாலாகிறது இனித் தன்னாலாகாததான அநிச்சையாபிராரத்தமான பசி
நித்திரைமுதலானவைகள் சுபாவமாகவேவந்துகொண்டிருக்கிற தா
கையால அவைகளை பிறவியற்றாலல்லாமல் விடா அவைகளைச்சத்துபரி
சந்தடக்காவிட்டா லவையேயொழியாத்துன்பமா வுபசரித்தடக்கிக்
கொண்டே யோகஞ்சாதிக்கவேணுமென்றது இதனால் ஒருநாளை அறு
பதுநாழிகையுங்கழிவதி லவைகளையுபசரித்தடக்குகிற தொருநாழிகை
கழிவதுநன்று ஐம்பத்தொன்பது நாழிகையோகமேபோதுமென்றகு
றிப்பு, இதனாலே கொஞ்சப்பழிப்பைச்செய்து மேருவத்தனைகீர்த்திய
டைதல்நன்றெனவறிவது பழிப்பில்லாமற்கீர்த்திவாராது செலவில்லா
மல் ஆதாயம்வாராதுபோல வென்றறிவது.) (௰௬)

துயிலுமுணவுஞ்செய்தொழிலு மிகாமேகுறைந்துதோறுமே
பயிலுமவனேயோகத்தைத் தன்பாற்படுக்கும்பான்மையா
னயிலும்பொறிவிட்டவ்வறிவு தன்பாலடைக்குமப்பொழுது
துயிலுமியோகந்தனினின்று மென்றுங் கலைக்கூறலாம்.

(இ-ள்) நித்திரையும் போசனமுஞ் செய்கிற காரியங்களும் அதி
கமாகாமற் குறைந்து காணமற் சமனாகதனக்குத்தக்க நித்திரையும்
போசனமுங் காரியமுஞ் செய்யப்பட்டவனே தன்னிடத்தில் யோக
த்தை யொழியாம லிருக்கப்பட்ட சுபாவத்தையுடையவன் போசி
க்கிற விந்திரியத்தைவிட்டு நியமமான அந்தச்சித்தத்தைத் தன்னி

டமாகிய ஆத்மாவினிடத்தில் நிறுத்தியடக்கப்பட்ட அப்பொழுது சகல இச்சைகளிலும்விடப்பட்டு செய்யப்பட்ட யோகத்தில் முகன்மையாக நின்றுனென்றவனைச்சொல்லலாம் எ-று. * அறிவைச சித்தமென்பது அறிவுண்டாகின்றயிடமாகையாலசித்தமென்றது அறிவையே சொல்லலாகாதோவென்றால அறிவையடைக்கில ஆத்மாதோன்றுது ஆகையாலலேகிற சித்தத்தியலேயாம லடக்கியென்று சொன்னது ஆனால அறிவினால் ஆத்மா விளக்குகையால் அறிவென்றும்,ஆத்மாவென்றுமிரண்டாகிறதே அறிக்கபின்ப ஆத்மாவென்றுகலேகிறகையால் அப்போதறிவுகாரணமேகாரு ஈதினாலே யடங்குமென்று சொல்லலாகாதோவென்னிலறிவா ஙகுமாகில ஆத்மாவை யொன்றெனக் காண்பதெதுகண்டு ஆகையாலஅறிவெசொரூபமான ஆத்மாவைச் சைதந்நியமென்று சொல்லுவதலலாமலசேதனமென்று சொல்லக்கூடாது ஆதலால் அறிவுபிறக்கசித்தத்தை அடக்கியென்றுமை யெழுதினது-ஆங்கு அசை,) (௰௪)

கொச்சகக்கலிப்பா

இப்பரிசுபயில்கின்ற யோகிகாவில்லிடத்து
மெய்ப்பரிசுனமிலகாத விளக்குப்போலவிளங்குமா
லெப்பொழுதுங்கவனுணர்வவ்வுண்மையிலேசென்றிசையு
மப்பொழுதுபரமானந்தத்தினையேயடையும்

(இ-ள்) இந்தப்படிபழகுகிறயோகியினுடைய சரீர சுபாவமானது காற்றில்லாவிடத்து அசையாதவிளக்கப்போல்விளங்குமாகையால் அவ்விடத்தி லவனுடைய ஞானம அந்தஆத்மாவி லெப்போதுகூடிப்பொருந்துமோ அப்போதுஅந்தஞானமானதுபரமானந்தத்தையேயடையுமல்லாமல்விஷயானந்தத்தையடையாது-எ-று *(யோகி மெய்ப்பரிசுகாவில்லிடத்திலெனவும்உண்மையிலெப்பொழு தெனமாறுக* எப்பொழு தப்பொழு தென்றதனாலே யிச்சையுமென் றுகாரமவருவிக்க ஏகாரத்தேற்றுகாரம,ஆல் அசை,ஆனந்தமாவதுசுகம் தேவிகளின்மையாலேதேகியையுணமையென்றது,) (௰௫)

அறுசீரடி யாசிரியவிருத்தம்,

யாதொன்றிற்தப்புலனறியாவளவிலின்பமாயிருக்கும்
யாதொன்றினைச்சென்றடைந்தாகா பின்னையதனினிரண்டாகா
ரியாதொன்றினைபெற்றவரிதனின்மிக்கதொப்பதுவென்று
ரியாதொன்றறிந்தவறிவிற்கே யறிவாய்நிற்குமதினின்றார்

(இ-ள்) யாதொன்று இந்த விஷயங்களறியாத அளவானபுத்தியிலே சுகமாயிருக்குமோ யாதொன்றைச்சென்று கூடினவர்கள் பின்பு அதிலிரண்டாகாமல் ஒன்றுவர்களோ யாதொன்றைப் பெற்றவர்கள இதிலதிகமானதுஇதிலொப்பானது உண்டென்று சொலலார்களோ யாதொன்று இந்த அறிவுக்கே அறிவாய்நிற்குமோ அந்த யோகத்தில் நின்றவர்களோ-எ-று- * (புலனறியாவளவாது விஷயாதிதம்,) (௰௬)

கலிவிருத்தம்.

வஞ்சவேல்கொடு மார்பினெறியினு
மெஞ்சவேதழன் மூடியெரியினு
நஞ்சினூழ லாகலியினு
மஞ்சிடாரஃ தானந்தமாவதே

(இ-ள்) கொலைத்தொழிலைக்காட்டாம லுள்ளடக்கிக் கொண்டிருக்கிற வஞ்சனையுடைய வேலாயுதத்தைக்கொண்டு மார்பி லெறிந்தாலும எப்படியிழைப்போமென்றுமனதிளைக்க அக்கினிமூடிக்கொண்டெரிந்தாலும் விஷயத்தினாலே நிறைந்த அக்கினிவீசயபட்டநாகமானதுவருத்தினாலும் அவர்களுக்கு இது ஆனந்தமாவதேயல்லாமல் துக்கமாவதையடைந்து பயப்படார்கள்-எ-று. * (யாதொன்றெனக்கவியும்வஞ்சவேலென்றகவியும் ஒருதொடர்.) (லஎ)

யோகமாய புலன்களைப்போக்கறுத்
தாகமாமெய் யறிவிடையேயருந்த
வேகமாயமனத்தினை மெலமெலவே
யேகமாக விருத்திகலாதுநீ

(இ-ள்) போகமாகிய விஷையங்களை இந்திரியங்களிலேபுகுகிறபோக்கைநீக்கி அந்தவிஷைய போகங்களின் திக்கிலேபோகிற இந்திரியங்களைத்தொடருகிற வேகமாகிய மனதைப்பகையாமல் மெள்ளமெள்ள யோகமாக உள்ளாகிய மெய்யான ஆத்மாவிடத்தில் நீயிருத்தென்றவாறு. * (இதனைப்புலன்களைப் போகமாய் போக்கறுத்தந்த வேகமாய் மனத்தினையிகலாது மெல்லவேஏகமாக வாகமாமெய்ப்பறிவிடையே நீ இருந்தவென்ப பொருளுக்கேற்பமாருக அறிவிடையேயென்றதனு லிந்திரியவிஷையபோகங்கள் இருந்தாமல் ஆத்மாவிலே நிறுத்தென்பது மெல்லவேயென்றதனல் சீக்கிறமாக நிறுத்தில்தடுமாறிப்போம் அதனுல்மெல்லவேநிறுத்தென்பதுபோய் மாயப்போக்காவது விஷையங்களின்பின்னேஇந்திரியங்கள்போறபோக்கென்றது அதைவிஷையபோகங்களிருக்கிறதிக்கை இந்திரியங்களநாடிப்போகிற போக்கையென்றுஞ்சொல்லலாம், ஒன்றையொன்று கொண்டதாகையால் ஆத்மா மெய்யறிவென்றூர் ஆத்மாவைமெய்யாத்மாவென்பதேதென்னில் நித்தியமா யிருக்கையால் ஆனல் பொய்யாத்மாவுமுணவேவென்னில்அஞ்ஞானிகளுக்குத்தேகமிந்திரியங் காண முதலானவைகள் ஆத்மாவாக மயங்குகையாலும் அவைகளஅநாத்மாவாய்அழிகையாலும் பொய்யாத்மாவுமுண்டென்பது இகலாதென்றபாடத்தை யிகழாதென்று பாடமோதில் வெறுக்காதென்றுரைசொல்வது பகைத்தாலும் வெறுத்தாலும் மனதுவேறுபடுத் தன்வசப்பட்டடங்காது.) (லஅ)

ரங்கியையம்பொறி நின்றுமனத்தினை
ங்கிடாவகை நெஞ்சளிருத்தியே
நீங்கியாவையுஞ் சிந்தைசெய்யாமையாற்
பாங்கியாத்துவே பயில்வாயரோ

பஞ்சேந்திரியங்களில் நின்றும் மனதைசிப்பால் வாங்கிஆத்மாவை விடாதபடி நின்றும் ஆத்மாவில் மனதையிருத்தி மற்றப்பொல்லாங் கெலலாவற்றையும நினையாதது சுபாவமாகையால் வேறுபாவப்படாமல் அதுவே பழகுவா யருச்சி-ன-று. * (மனத்தினைவாங்கி யெனமாறுக அரோ அசை அதுவேயென்றதனுல் வேறுபாவனை பண்ணுமல அதுவே பாவிப்பாயென்ற தேற்றே காரம போகமாய றென்றகவியும்வாங்கி யைம்பொறி யென்றகவியும ஒருதொடா ) (௰௯)

தேறுநெஞ்சினனுய்த் தன்செயலல்லால்
வேறுகண்டறி யாபெயயறிவினு
லூறிசிந்தவுடம்புடன் வீடுபெற்
றேறுகின்றவ னேயின்பமெய்துவான்

(இ-ள்) இப்படி எங்கெங்க விதத்திறுலே தெளியவேணுமோ அந்தந்த விதத்திறுலேதெளியப்பட்ட மனதுடையவனுய் ஆதமாவினுடைய செயலல்லாமல் வேறுசெயல்கண்டறியாத சத்திகய ஞானத்திறுலே ஆனந்தவெள்ளமூறி இநதவுடம்புடனே மே மோக்ஷத்தைப்பெற்று ஏறுகிறவனே சுகத்தையடைவான்-ன-று * (ஊறுதல 'வது முன்னே ஆற்றறலாகவூறி வரவரப்பெருகிநிறைந்து தேங்கிவெள்ளமேற் கொண்டு முழுதுவதற்கு ஆரம்பம் ஊறுவது உடமபுடனேமோக்ஷம்பெறுதலாவது சீவன்முத்தி உடமபுவிட்டமோக்ஷமாவது விதேக முத்தி விதேகமுத்தியென்பதாவது சிரேஷ்டம்பெறுதல்.) (௨௰)

அறுசீரடி யாசிரியவிருத்தம

இழியாவிந்தயோகத்தை யென்றுந்தலைநின்றவனென்று
மழியாவின்பத்தினையின்பத் தாலேயடையுமதுநிற்க
வொழியாவெல்லாவுயிருந்தன் னுள்ளே காணுமவற்றுள்ளே
கழியாதெங்குந்தானின்ற பரிசுதெரியக்காணுமால்

(இ-ள்) இழிவில்லாத இந்தயோகத்தையென்றைக்குமு தன்மையாகநின்றவன் என்றைக்குமழியா தசுகசொரூபமான 'பிரமத்தையானந்தத்தாலே யடைவன் அதுநிற்கஒழிவில்லாதசகல ஆத்மாவையும் தன்னுக்குளளேகாண்பான்சகல ஆத்மாவுக்குள்ளும் நீஙகாமலெங்கும்பரிபூரணமாகத்தான்நின்றபடியுந் தெரியக்காண்பனென்றவாறு, * (தலைநி

ற்றலாவது யோகபேசிரேஷ்டமாக மற்றெல்லாமிழிவாக நிற்றபெ பதுஇழியாதெனவேவுயர்ந்தயோக மென்பது சகல ஆத்மாவினுக்குள் ளேதானுந் தனக்குள்ளே சகல ஆத்மாவுங்கண்டெங்கும் பரிபூரணமாகச்சமமாகவிருப்பனெனபது, (உக)

யாவனொருவனென்னையெல்லா வுயிர்களினிடையுமென்னிடையே
மேவுமெல்லாவுயிர்களையும்வேறாகாமைமெய்காணடான்
தேவர்பகைமுன்செகுத்தோனே யவன்யாதேனுஞ்செய்திடினு
மாவனவனுகின்றேனென்று நீயைதமையுறேல்

(இ-ள்)எவனாகிலுமொருவன் என்னை யெல்லாவுயிர்களிடத்திலும் என்னிடத்தி லெல்லாவுயிர்களையும் கூடாதபடிகாணாமல் கூடும்படி மெய்யாகக்காண்பவன்எவனோ அவனே தானாலுஞ்செயதாலுமந்தச் செயலாவதாகச் செய்தவனே தானாகிறவன் அதைமுன்னேதேவர்களு டையபகையான அசுரராட்சதர்களைக்கொன்றஅருச்சுனா நீயொன்றுஞ் சந்தேகப்படாதே-எ-று.*-வேறாகாமையாவதுசகலவுயிர்களும் வெவ் வேறுஎன்னைவேறாகக்காணாமல்எலலாவுயிர்களிலும் என்னையும்என் னிலெல்லா உயிர்களையுங்கூட மெய்யாகக் காண்கிறவனெவனோ அவ னென்னசெய்தாலும் நானசெய்ததேஅதெப்படியென்னில் அவனாகி நவன்நானாகையால் அவன்செய்ததும் நான்செய்ததே அதைநீசற்று கிலுஞ்சந்தேகப்படாதேயென்பது தேவர்பகைமுன்செகுத்தோனே என்றதனலிப்போ துன்பகையானமனிதர்களைக் கொல்பவனேயென் றதருத்தாபத்திலருவிக்கமுன்செயதவனே றதுகுறிப்பு) (உஉ)

இடரானதுதானின்பந்தானியாரேனுக்குமாயிடுகப்
படராநின்றவதுதானுமுறுவான்யோகியெனப்படுவான்
கடராநின்றவடிவேலோய் தெளிநீயென்றுதுழாயலங்க
லடராநின்றநெடுமுடியோனருளிச்செய்யவவனுரைப்பான்

(இ-ள்)யாருக்காகிலுந் துக்கந்தான் சுகந்தான் வந்ததானல்வராநி ன்ற அந்ததுக்க சுகங்களைத்தானு மடைகிறவன் யோகியென்றுலக ஞ்சொல்லப்படுவன பிரகாசித்து நிற்கிறநீணடவேலாயுதத்தை யுடை ய அருச்சுனஇந்தப்படிதெளியென்று திருத்துழாய்மாலே யணைந்து நின்ற நீணடகிரீடந்தரித்த ஸ்ரீகிருஷ்ணசுவாமி யருளிச்செய்யக்கேட் டு அருச்சுனன்சொல்லுவான்-எ-று. *(சகலஆத்மாக் களிலுந்தானுந் தன்னிற்சகல ஆத்மாவுமாய்சமமாயெங்கு நிறைந்து நின்றயோகிக்கு எந்த ஆத்மாவுக்குத் துக்கசுகம்வந்தாலுந்தானும் அதைச்சமமாகஅ

யோகியென்றுலகஞ் சொல்லுமாகையால் இந்தப்படி சீக்கிரமாக அநுசந்தானம்பண்ணி யுன்னுடையகலக்கத்தைத் தெளியென்று சொன்னது ) (௨௩)

எல்லாவுயிருமொன்றாகப் பார்ப்பதியோகமெனவுரைத்தாய்
மல்லார்தோளாயிதற்குநிலை காணேன்மனமாகின்றவிது
நில்லாவியற்கைத்தாயபுலன் கலங்குமிதனைநிலைநிறுத்த
ஒல்லாதெனவுங்காற்றடக்கற் கொக்குமெனவுமுணர்கின்றேன்

(இ-ள்) மற்போர்செய்யுந் தோளையுடையசுவாமி எல்லாவுயிரையு மொன்றாகப்பார்ப்பது யோகமென்று சொன்னீர் இதற்கு மனதுசஞ்சலசுபாவமானதினாலே நல்லநிலைகாணேன் இப்படிக்கொத்தமனசாகிற இது அசையாதநிலையில் நில்லாத சஞ்சலசுபாவத்தையுடையதாய்விஷயத்தைக்கலக்கும இதையசையாத நிலைநிறுத்தக்கூடாதென்றும இதைநிறுத்துகிறோம் என்கிறகாற்றைப்பிடித்தடக்கிறதற்கு ஒப்பாகுமென்றும் அறிகிறேன்-என்று. * காற்றுவமானம் காற்றலைவதே சுபாவமாகையால அதைபபிடித்து அலையாமலடக்கிறதற்குக் கூடாது போல அலைகிறமனதை அலையாமலடக்குவது கூடாதென்பது. (௨௪)

அறுசீரடி ஆசிரியவிருத்தம்,

இப்பரிசைவிசையன்கூற மாயவனியம்பல்செய்வா
னலைவகைப்புறனுநெஞ்சு மடக்குகையரிதானாலு
முய்வகையுரைத்தயோகமுநற்றவிதானுமோவா
வைவகைப்புலன்செயின்ப மனைத்தையும்வெறுத்தலானும்.

(இ-ள்) என்றிப்படி யருச்சுனன்சொல்ல ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொல்லுவார் அஞ்சுவிதமான விஷயபஞ்சகமும் மனதையடக்குதலரிதானாலும் பின்பூக்குமபடி சொன்ன யோகாப்பியாசத்தினாலும விடாதபஞ்சவிஷயபஞ்சங்கள் செய்கிறவெல்லாசுகத்தையும வெறுக்கிற வயிராக்கியத்தினாலும் என்று. (௨௫)

கலிவிருத்தம்.

வெய்யவைந்த மடங்கிநெறிமுற
கையிலைலையென் றெயதியாதலாற்
பையவேகரணம்பதினொன்றையுங்
கைகடந்தவர் யோகமுங்கைக்கொண்டார்.

(இ-ள்) இந்த அப்பியாசத்தினாலும் வயிராக்கியத்தினாலும் கொடுமையுள்ளமனது அலையாமலடங்கும இதற்கு அடங்காதென்ற சந்தேகமில்லை இதுநிச்சயமென்றேயறி அருச்சுனா ஆகையால் சீக்கிரப்படாமையால் மொள்ளமொள்ள பதினொருகரணத்தையுங் கைகடந்தவ

ர்களேயோகமும் ஞானமுங்கைகண்டவர்கள்-எ-று. * (அடங்குதலுக்கு வேறுலது அடங்காதது பதினறுகரணமாவது ஞானேந்திரியமைந்துங்கன்மேந்திரியமைந்தும் அந்தக்கரணம்நாலுங்கூடியது பதினறுகரணம்) (உகூ)

என்றுகூற விசையனியம்புவா
னின்றியோகத்தி லேநெடுநாளெலாம்
பொன்றுங்காலத் தயர்ந்துயிர்போயினுஞ்
சென்றுநற்கதி யேயன்றிச்சேருமோ.

(இ-ள்) இப்படியென்று ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொல்ல அருச்சுனனவன் சொல்லுவான் யோகத்திலே அனேகநாளெல்லாம்நின்று சாகிறகாலத்தில் மறந்து சீவன்போனுல் நல்லமோட்சத்திலேபோய்ச்சேருமோ அல்லாமல்பொல்லாதநரகத்திலேபோய்ச்சேருமோ-எ-று. (உஎ)

யோகமேவ விழைசுளொருவினன்
மோகமேவலின் யோகமுடிந்தில
னேகமோவிரு பாலும்விட்டானிற்ற
மேகமேயென வீழ்ந்துகழியுமோ.

(இ-ள்) யோகத்தையடையவேண்டிக் கருமங்களைவிட்டவன் மோகத்தின்சேவலான இச்சையினலே மனதுசஞ்சலப்பட்டு யோகமுடியவில்லாதவனுக்குக் கெதிமோட்சமோ நரகமோ மூடனும் ஞானியுமல்லாமல் இந்தஇரண்டும்விட உபையபிரஷ்டனு யொன்றிலுங்கூடாதவன் ஆகாசகமனமற்ற மேகத்தைப்போலக் கீழுவிழுந்தழிவானே மேலெழும்பியிருப்பான்-எ-று, (உஅ)

கலிவிருத்தம்.

மையலிதுவென் மனத்தினின் மற்றிந்த
வையமறுக்கவல் லாரில்லைநீயனறி
யுய்யவிதனை யுரைபென்னபோகத்தின்
மெய்யனிதனை விரியவுரைக்கின்ருன்,

(இ-ள்) என்மனதிலிதுசந்தேகம் இந்தச்சந்தேகத்தைத் தீர்க்கச்சர்வக்கியனுன நீயல்லாமல் வேறுவல்லவர்களில்லை நான்பிழைக்க இந்தச்சந்தேகத்தை விளங்கச்சொல்லுமென்று சொல்ல இந்தயோகத்தினில் சத்தியனுன ஸ்ரீகிருஷ்ணசுவாமி விளங்கச்சொல்லுவார்-எ-று. * (மற்று அசை,) (சகூ)

பொய்மையடையாப்புலனுடைமாந்தர்த
மிம்மையிடையு மறுமையுலகத்தும்
வெம்மையடைகிலர் மெய்ம்மைவிடாரென்னுஞ்
செம்மைதெளியவினஞ்செப்பிடுவேன்கேள்

(இ-ள்) மாயையடையாத அறிவுடைய யோகசஞ்சலமான மனிதர்களிந்தசென்மத்தினி த்தி லிச்சையானதை-மறுசென்மமான மரணநிலையிலே கொடுமையான நரகத்தையடையார-சத்தியமானமோட்சத்தைவிடாரென்று சொல்லப்பட்ட செவ்வையானது தெளிய இன்னுஞ்சொல்லுவேன்கேள் அருச்சுனு-எ-று. * (வெம்மையாவது இம்மைக்குவிருப்பமும் மறுமைக்குமரணமுமாகவிரண்டுபொருளகொண்டது

யோகமுடியா திடையேயிறந்தவன்
யாகவினைபலசெய் தாங்கிளையுத்திடுந்
சோகமிணுடெய்தித் துன்பந்துடராத
போகதுகர்ந்துபல் காலங்கள்போயபின்

(இ-ள்) யோகமுடியாத நடுவிலேயோகத்திலிச்சித்து யாககர்மங்கள்பலவாகச்செய்து செத்தவன் அந்தப்போகம்பொருந்தி யிருக்கப்பட்டமெலிவில்லாத லோகத்தையடைந்து துக்கந்துடராதபோகத்தை யநுபவித்துவெகுகாலங்கள்போனபிறகு-எ-று * யோகமுடியா திடையேயாக வினைபலசெய்திறந்தானுங்கெனமாறுக) (கூக)

சிறந்தவரசர் திருக்குத்தாருத
லறங்கருமியோகிக டங்குலத்தாகுதல்
பிறந்துபெறுவதெலாம்பெற்றுப்பின்னையும்
மறந்தவியோகமகிழ்வுடனெய்துவான்

(இ-ள்) சிவந்தராசர்களுடைய அழகியகுலத்திலாகுதல் தருமத்தைத்தரப்பட்ட யோகிகளின்குலத்திலாகுதல் பிறந்துபெறவேண்டியபோகமெல்லாம்பெற்றுப்பின்னையும்முன்சென்மத்திலேமறந்தயோகத்தைப் பின்சென்மத்திலே மகிழ்ச்சியுடனே யடைவன்-எ-று, * (யோகமுடியாதென்றகவியுஞ்சிறந்தவராரென்றகவியுமொருதொடர்.) (கூஉ)

கொண்டுபயிலுங் குணமிலனுமினு
முண்டுதெளிவென்றுணர்ந்தவியோகந்தான்
பண்டுபயின்றபயிற்சியன்னூர்களைத்
தண்டுதலின்றிமுன் றூனலலைப்படும்

(இ-ள்) யத்தினம்பணணிக்கொண்டு அப்பியாசம் பண்ணப்பட்டகுணமில்லாதவனுனாலும் தெளிவுண்டென்றறிந்த யோகமானது பூர்வம் அப்பியாசம்பண்ணின அப்பியாசிகளை நீங்குதலில்லாமல் அவர்கள் முன்னேதானே வந்துதலைப்படும்-எ-று * (வேறொருயத்தினத்திலும் வேறொருவராலும் வரவேணுமென்கிற பிரயோசன மில்லாமல் எளிதாகத்தானேவந்து மூன்னிற்குமென்றது.) (கூஙு)

அனையவியோகத்தை யாற்றுவனென்று
நினையிமவனு நெறிபிறழாமலே

வினைகள்பலசெய்து வேழ்விமுடித்தாற்
கனையுங்கதிர்மேற கதியையவன்பெறும்

(இ-ள்) அப்படிக்கொத்த யோகத்தைச்செய்வனென்று நினைக்கப்பட்டவனுஞ் சாஸ்திரமார்க்கந்தப்பாமற் கருமங்களைப் பலவாகச்செய்து யாகத்தைமுடித்தாற் சத்திக்கப்பட்ட சூரியனுக்குமேலான கதியையவன்பெறுவன் எ-று * நினையுமவனுமென்ற வும்மைசிறப்பும்மை' ஆதாவது நினைகிறவனுக்கு மேறகதிபெற்றார் செய்கிறவனுக்குஞ் செய்து நடுவிலேவிட்டவனுக்கும் பெறுவது சந்தேகமில்லையென்றசிறப்பும்மைகளையுங் கதிராவது நித்திரையாயடங்கின சீவன்களையெழுப்பிப்பேசுவிக்கிற சத்தத்தைக் கொடுக்கையாலே சத்திக்கபபட்ட சூரியனென்றது ) (கச)

நீடுமதினிலே நின்றிலனுயினு
மோடும்வகைபின் விடாதேயுமன்றவன்
பாடும்பவங்கள் பலகடந்தாயினும்
வீடும்பேரின்னமும் வேறுஞ்சிலகேளாய்

(இ-ள் பெரிய அந்தயோகத்திலசையாத நிலையாக நிற்கவில்லாதவனானு மிச்சைகளினுலே சஞ்சலப்பட்டோடப்பட்ட விதத்தினுலும் விடாமலந்தயோகத்திலேயுமன்றவன்சொல்லப்பட்டபிறவிகளனேகங் கடந்தாலு மந்தப்பிறவி முடிவிலேமேலுலகங்களைப்பெற்றுமுடிவுபிறப்பிலேமோட்சத்தையும் பெறுவன்இன்னம்வேறுவிதஞ்சிலசொல்லுகிறேன் கேட்பாய்-எ-று. * (ஆயினுமென்றவும்மையும் சிறப்பும்மை,

எல்லாத்தவமு மியற்றினோனினு
மெல்லாக்கலைகளுங்கற்றுணர்ந்தோனினுஞ்
சொலலாக்கருமமெல் லாஞ்செய்தவனினு
நல்லானியோகியே நீபகைநண்ணுவாய்

(இ-ள்) எல்லாத்தவங்களுஞ்செய்து நின்றவனிலும்வேதமுதலான நூலகளுங்கற்றுத் தெளிந்தவனிலும் நல்லவன் யோகியேயல்லாமல் வேறொருவனலல-ஆகையால் நீயுமந்த யோகத்தைச் செய்வாய் என்றவாறு.) (கரு)

கொச்சகக்கலிப்பா,

இருவகையவினையருக்கும் யோகியரெல்லார்களினு
மருவரியமனத்தையு மன்பையுமென்பாலேவைக்கு
மொருவனுமேயானுவக்கப் படுகின்றானெனவுரைத்தா
னருவெனவூருவெனமுன் பாராலுமறிவரியோன்

(இ-ள்) நல்வினை தீவினையென் றிரண்டுவிதமான கருமங்களை பறுக்கப்பட்ட யோகிகளெல்லார்களிலுங்கூட அரிதான மனத்தையும் அ

ன்மையுமென்னிடத்தில் வைக்கப்பட்ட ஒருயோகியுமே நான் சந்தோஷப்படத்தக்கவனல்லாமல் மனதையுமன்மையும் என்னிடத்திலவைக்காதமற்றயோகிகள் நான்சந்தோஷப்படுதற்குரிய நல்லவென்றுசொன்னார் அருவமெனவும் அல்லவுருவமென்னும் முன்புள்ளத்தைஆராலுமறிய அரிதான ஸ்ரீகிருஷ்ணசுவாமி-எ-று. (௩௭)

ஆவது-அப்பியாசயோகஅத்தியாயம்-முற்றிற்று.

—❖—

ஆக-அத்தியாயம்-௬-க்கு-கூடியசெய்யுள்-உ௪௩.

ஏழாவது

மாயாரூபஅத்தியாயம்.

—(*)—

அறுசீரடியாசிரிய விருத்தம்.

உய்யவன்பிறெடுமென்னையேயடைய யோகமேமயிலும்யோகிதா
னையமின்றியென்னையேயடைந்திடு மதையுநீயுமறிவாயென
வையமூண்மேறைநீர்மையுண்டிடையர் மாதருண்டிடமலர்ந்திடுஞ்
செய்யதன்பவளவாய்திறந்துதிரு மாதுகேள்வனிவைசெப்புவான்.

(இ-ள்) ஸ்ரீமகாலட்சுமிக்கு நாயகனை ஸ்ரீகிருஷ்ணசுவாமி முன்பூமியையுண்டு வேதகுணத்தையுண்டு இப்போது இடையருடையபெண்களுண்ணத்தக்கதாக மலரப்பட்ட சிவந்தகுளிர்ந்தபவளத்தையொப்பான திருவாயைத்திறந்து ஐயா பிழைக்கவேண்டிய பத்தியோடும் மெய்ஞ்ஞானத்தோடும் என்னையேசேரத்தக்கதாக யோகத்தைச்செய்யப்பட்டயோகிதான் சந்தேகமிலலாமல்வேறொருவரையடையாமல் என்னையடைவான் அதைநான் உனக்குச்சொல்ல நீயுமறிவாயென்றவாறு. * (மேலறியவேண்டுவேதில்லையென்பது குறிப்பு. (க)

மாயுமாயைமறையாதநெஞ்சினிடை மற்றெனுண்மையினுவாய்
மையா, லேயுமாறறிவறிந்துளோர்களறி யாததொனறுமிலையென்னினு, மாயுமானிடரனேகர்பாலொருவனென்னையாயமனம்வைத்துளார்,
னுயுமாதுடரனேகர்பாலொருவனேயறிந்துமுடிவானையா.

(இ-ள்) அழியப்பட்ட மாயையால் மறையாத மனதினிடத்தில் மற்ற என்னுடைய உண்மையை ஞானத்தினாலே யிசையும்படி ஞா

னத்தி லறிந்திருக்கிறபேர்க ளறியாதகொன்றுமில்லையென்றாலும் நா சமாகப்பட்ட மனிதரனேகரிடத்தி லொருவனென்னை ஆராயமனம் வைத்திருக்கிறவன் இப்படி ஆராயப்பட்ட மனிதரனேகரிடத்திலொருவனே என்னையறிந்து கவலையொழிவானல்லாமல் எல்லாரும்ஆராயவுமறியமாட்டார்களேயாவென்றவாறு. * (ஆராய்தலாவது ஞானத்தால் விசாரித்தல்.) (உ)

மண்ணுநீருமெரிதீயும்வாய்வுமவ வானீனுடுமனம்புத்தியு,மொண்ணுநீர்மைகளின்யானெனும்பதமு மென்றவெட்டுமிவையன்றியே,
பண்ணுநீர்மைகளின்மேலதாயுலகில் யாவையுங்கொடுபரித்துடற், கண்ணுநீடுயிருமாகியென்னுடைய மாயைநிற்பதுகைவேலினோய்.

(இ-ள்) பிருதுவியும், அப்பும், எரிகிறதேய்வும, வாய்வும், அந்தஆகாசமும், அதனுடனேமனதும், புத்தியுமதிக்கப்பட்ட குணங்களிலே நானென்றுசொல்லப்பட்ட ஆங்காரமும் இந்தவெட்டும உண்டாகிற காரணமான பிரகிருதி இது அபரப்பிரகிருதி இலலாமல் பண்ணப்பட்டகுணங்களிலே மேலானதாய்ச் சகலசெகதலையும் தாங்கிக்கொண்டு சுமந்து அபரப்பிரகிருதியான உடலிடமுந்தானிலிருக்கிற உயிரும் போலவாகி என்னுடைய பரமப்பிரகிருதியான மாயைதிவ்யசவையிற் வேலையுடைய அருச்சுனா-எ-று. (ஙு)

கண்ணினிற்றெரியலுற்றுணர்ந்தவிவ் விரண்டினாலும்வருகாரியம், பண்ணினிற்பனநடப்பவென்றபொருள் யாவுமற்றிவ்விருபான்மையே, விண்ணினிற்பதுலகாதலானுலகினுசவுற்பவமுநானவா, தெண்ணின்மற்றறிவதில்லையெப்பொருளு மென்னிலன்னியமதல்லவா.

(இ-ள்) கண்ணிலேதெரியப்பட்டறிந்த இப்பராபரப்பிரகிருதி இரண்டினாலும் பிறக்கப்பட்டகாரியத்தைப்பண்ணிநிற்பன நடப்பனவென்றபொருள்கள் சகலமுமுன்சொன்ன இந்த இரண்டு பிரகிருதிகளினுடைய சுபாவமேபெற்றுநிற்கிறது உலகம ஆதலால உலகததிலே செனனமரணமும் இவைகளைச்செய்கிறகாரணமும் நானேயென்னையல்லாமல் வேறேயுண்டோவென்று விசாரிக்கில் வேறில்லாததினாலேயுண்டென்றறிவதில்லை ஆகையாற்பிரகிருதியுமதனாலுண்டாகிற செகத்துமுதலானதும் எந்தப்பொருளுமென்னி லன்னியமல்லாமல் எல்லாம்நானே-எ-று. * (அபரப்பிரகிருதியாவது சடமானவுடம்புபராபிரகிருதியாவது அசேடமானசீவன் இல்லையென்றதனாலே பிரமமேநான் இதற்குமேலானது நிச்சயமாகவில்லையென்பது.) (ச)

வேதமாகிநிகழ்பானலாதுலகி லென்னில்வேறெனவிளங்கிடும்
பூதமானவையொறுக்கவேறுபொறை யாளரில்லையெதுபோலெனி
லோதுமாமணியனேகமூடுருவு கோவைநாலினுருபான்மைபோ
பேதமாயபொருடோறுநான்மருவி நின்றவாறுநனிபேசுவாம்.

(இ-ள்) சொல்லும்பொருளு மொன்றுபோலவும் பொருள்சொல்லுகின்றசொல் வேறுபொருள் வேறானவிரண்டு போலவும் இப்படி இரண்டாகப் பிரிக்கக்கூடாத ஒன்றாயும் இப்படி இருக்கிறவேதத்தையொப்பாகி உதகமென்றும நானென்றும் மிரண்டாய் உற்றதியும் போதொன்றாய் விளங்கப்பட்ட னல்லாமல் என்னில் வேறென்று சொல்லத்தக்கதாக உலகத்தில் விளங்கப்பட்ட பஞ்சபூதங்களையுந் தாங்கவேறே தாங்குவாரில்லை நானேதாங்குகிறவன் அதெப்படிப்போலவென்னில் சொல்லப்பட்ட அழகுள்ள ரத்தினங்களனேகம் ஊடுருவும்படி கோவைபபட்ட நூலிலிருக்கிறபடி போல நானே செகத்துக்கு ஆதாரம் இப்படி அளவற்ற பேதமாகிய பதார்த்தங்கள் தோறும் நான்கலந்து நின்றபடியை மிகுதியாகச்சொல்லுவேனௗ-று. (௬)

கொச்சகக்கலிப்பா.

திரியுமிருசுடரினிடை திகழொளிநானறி நமறைபி
னரியமுதலெழுத்துநா னடவர்பாலாண்மையுநான்
விரிபுனலிற்சுவையுநான் மேதினியில்வாசமுநா
னெரியில்வருவெம்மையுநா னாகாயத்தெழுமொலிநான்

(இ-ள்) ஆகாசத்திலே சஞ்சரிக்கப்பட்ட சூரியசந்திராளிடத்தில் விளங்கப்பட்ட பிரகாசம்நான்ஓத அரிய அழகியவேதத்தில் முதலெழுத்தான பிரணவம் நான்புருஷர்களிடத்தில் ஆண்மையும்நான் விரிவான சலத்திலுருசியும் நான் பிருதிவியிற்கெந்தமும்நான் அக்கினியில்வரப்பட்ட உஷ்ணமுமநான் ஆகாசத்திலெழும்புகிறசத்தமும்நான் எ-று

ஆன்றவறிவுடையோர் பாலறிவுநா னடங்கினர்பால்
வான்றவநான்வளநன்மை பூண்டவர்பால்வான்புகழ்நான்
தோன்றுமிகுதிறலோர்பாற் றாமமுறுத்தோள்வலிநா
னான்றுபொருளனைத்திறுக்கு முயிராகியுள்ளேனான்

(இ-ள்) அமைந்த அறிவுடையோரிடத்தில் அறிவுநான் துறவிகளிடத்திற பெருமைபொருந்திய தவசுநான் வளமையான நன்மையைத்தரித்தவர்களிடத்தில் வளமையுள்ள கீர்த்தி நான் மிகுந்துகாணப்பட்ட பெலமுள்ளவர்களிடத்தி லசையப்படா புஜபெலம்நான் இப்படிபிரபஞ்சத்தில் நிறுத்தப்பட்ட சகலபதார்த்தங்களுக்கும் சீவனாயிருக்கின்றவன்நான்-எ-று. (௭)

மூன்றுகுணவகையாகி முடிகின்றபொருண்முழுதுந்
தோன்றுவதுமென்னிடையே யெனைத்தொடர்ந்தேகிற்பதுவி
மான்றவவற்றவற்றினிடை யான்றுன்றேனவற்றினைச்சூழ்ச்
சான்றெனநிற்குவனல்லா லவைசார்ந்துவாழேனல்

(இ-ள்) மூன்றுகுணபேதமாகி யறியப்பட்ட பதார்த்தங்களெல்லாம் உண்டாவதும் என்னிடத்திலே நிற்பதுவும் என்னைத்தொடர்ந்தே அல்லாமல் வேறிடத்துண்டாகவும் வேறொன்றுகினைத்துடரவும என்னையல்லாமல் வேறொன்றுமில்லாததினாலே கூடாது இப்படி என்னிடத்தி லுண்டாய் நிறைந்த அந்தந்தப்பதார்த்தங்களிடத்தில் நான்பிறவேன் அவைகளுக்குசசாட்சியென்றுநிற்பேனல்லாமல் அவைகளென்னைத்தொடர்ந்து வாழ்வதுபோலநான் அவைகளைக்கூடியிரேன்-எ-று *(சகலமும் என்னிடத்திலுண்டாகி என்னைக்கூடியிருக்கும்நான் அவைகளிற்பிறவேன் அவைகளிற்கூடேன் எல்லாவற்றிற்கும் நானேசாட்சியாய் நிற்பேனென்றது) (அ)

மைக்குணங்களெனு மவற்றின்மயமாகிமமத்துவுமா
யக்குணங்கண்மூன்றாலு மயக்கப்பட்டறிவிழந்து
தொக்குணங்குகின்ற வுயிரிவையெல்லாஞ்சுடர்வேலோ
யக்குணங்கள்கடந்தவெனை யறியுமோவறியாவால்

(இ-ள்)மூக்குணங்களென்று சொல்லப்பட்ட அந்தஅஞ்ஞானகுணமயமாகி அஞ்ஞானமனதுடையதுமாகி இந்ததாமதராசத சாத்மீகமென்ற குணங்கள் மூன்றினாலு மயக்கப்பட்டு அறிவுகெட்டுக்கூடிசரீரமறந்து கிடக்கிறசீவன் இந்தச்சீவனெல்லாம் அந்தக்குணங்களைக்கடந்தவென்னையறியுமோபிரகாசமுள்ளவேலையுடையஅருச்சுனா அறியாய் எ-று *(குணங்கடந்தவனாவதுகுணாதீதன் (கூ)

இவ்வகைகுணமூன்றினியற்கைத்தாமாராலுஞ்
செய்வகையதல்லாவென் மாயையினிற்றிகைப்பொழிந்திடுங்
குய்வகையதரிதெவர்க்கு மென்னையேயெப்பொழுது
மெய்வகையோடடைகின்றமனமிலரேல்வேல்வேந்தே

(இ-ள்) வேலையுடைய ராசாவே என்னைத்தானேஎந்நாளும் மெய்யன்போடு சரணமடைகிற மனதில்லாதவர்களாகில் இந்த விதமானமூக்குணத்தினுடைய சுபாவமானதால ஆராலுஞ்செய்யத் தக்கதல்லாதவென்மாயையினுடைய மயக்கமொழிந்து இப்படிதப்பிப்பிழைக்கின்றவிதம் எவர்களுக்கு மரிது எ-று *(என்னை யடைந்தவர்கள்மாயைக் கடப்பரென்ப தருத்தாபத்தி யெப்பொழுதுமென்றதனால் ஒருநாள் வேறுசெய்யினும்யோகப்பிரஷ்டனாவன் (ம)

ஊழாலேவருமந்த மாயையினாலேயுள்ளம்
மாழாகவரிவங்கேபறியுண்டுநெறியின்றோர்
வீழாததீவினையே வினையாகவிளைகின்ற
கீழானோரென்னையடையா ரடைவாருஞ்சிலருளர்கேள்

(இ-ள்)பூருவவினையாலேதொடர்ந்து வரப்பட்ட அந்தமாயையினாலேமனது மூடமாகஅங்கேஞானமானது மாயையினாலேபறியுண்டு அஞ்ஞானமார்க்கத்தில்நின்றபேர்கள்தொலையாதபாபமேகர்மமாகவினையப்பட்டழிமூரானபேர்கள் என்னையடையார் என்னையடைகின்றபேருஞ் சிலருண்டு சொல்லுகின்றேன் கேள்-எ-று. (மக)

கலிவிருத்தம்.

செல்லவிரும்பினர்செல்லடைந்தோ
ரல்லலிகழ்ந்தென்னை யன்புசெய்வோர்க
ளல்லதறிந்தமெஞ்ஞ னியினல்வரும்
வல்லதிதென்னைவணங்குதவத்தோர்

(இ-ள்) செல்ல இச்சித்தவர்கள்பிர்ம்மத்தைக் கூடுதலாக ஆத்மசொரூபமறியவேணுமென்று ஆரம்பித்தவர்கள் மாயையைவிட்டுப் பிரிந்துஎன்னையன்புசெய்கிறபத்தர்கள் நல்லதானசொரூபத்தையறிந்தசத்தியஞானியிந்நாலுபேருந்தங்களாலே செய்யவல்லமட்டும் என்னைவணங்கின தவத்தினர்-எ-று. (மஉ)

இன்னவர்தங்களிலென்னொடுவேறார்
உன்னலிலாமையின்ஞானியுயர்ந்தோ
னன்னவனல்லனெனக்கவனுக்கே
நன்னலம்வைப்பதுநானலத்தோய்

(இ-ள்)இந்நாலுபேர்களிலென்னோடுகூடின சித்தமுண்டானவனாகித்தான்வேறுநான்வேறாக நினைப்பதில்லாததினாலே ஞானியதிகன் அந்தஞானியெனக்கு நல்லவன்நானும் அவனுக்காக நல்லசுகத்தை வைப்பதல்லாமல வேறுள்ளவாகளுக்கு வைப்பதில்லைநண்டாய் நன்மையுள்ள அருச்சுனா-எ-று. (மங)

ஓதருப ஞானியென்னுண்மையினுள்ளே
ஏதலிலாமையின்யானென்லேபா
மாதலினலவனேசிலவாய
காதலினுயபவங்களிலெய்தா

(இ-ள் சொல்ல அறிதான ஞானியானவன் என்னுடைய உண்மையினுள்ளே கூடினவனாதலாலவனேநானென்றுசொல்லலாம அல்லாமல்நான்வேறு அவன்வேறல்ல ஆதலாலவனே கொஞ்சமானஆசையினுண்டாகிய பிறவியைக்கடந்து-எ-று, (மச)

விரியவுணர்ந்தவிழுப்பொருளெல்லா
முரியவனென்னை யல்லாதவொழுக்கம்

தெரியவறிந்தெனையேசெறிகிற்பா
னரியனவன்பெறு தற்கயிலையவலோய்,

(இ-ள்) விஸ்தாரமாக அறிந்தசிறப்புள்ள பொருள்களெல்லாமுரிமையுள்ளவென்னையல்லாமலிலலாத செயதியைத்தெரிய அறிந்தளெல்லாம் நானேயென்று என்னையேகூடுகிறவன ஆகையாற்கூர்மையுள்ள வேலையுடையஅருச்சுன, அப்படிக்கொத்தஞானிகிடைக்கிறதற்குஅரிதானவன-எ-று. * ஒதருஞானியென்றகவியும் விரியவுணர்ந்தவென்றகவியுமொருகொடா அரியனென்றதனல் இப்படிக்கொத்தஞானமெலலாருக்குமவராது எவனுகினுமொருவனுக்கு வருகிறதினுலே யவனைக் காண்கிறது அறிதென்றறிவது.) (௰௫)

மற்றவருந்தம் மனங்களில்வைத்த
பறறதிலேபரி யுண்டறிவெல்லா
முறறவைதநதிடு தெய்வதொழுக்கா
னறறவநின்றவை நண்ணுவர்நல்லோய்,

(இ-ள் இந்த ஞானியல்லாத மற்றவர்களுந் தங்களுடைய மனதுகளில்வைத்த இச்சையிலே ஞானமெல்லாம பறிகொடுத்துத் தங்களுடையமனதுகளிலெச்சித்தபோகஙகளைககொடுக்கிற அந்தந்ததேவதைகளுடைய ஒழுக்கத்தாலே நல்லதவசுகளில் நின்றுசெய்து அந்தயிச்சைகளை அந்தந்தத்தேவதைகளாலே அடைவாாகள் நல்லவனான அருச்சுன எ-று. * தெய்வவொழுக்கமாவது எந்தெந்தவிச்சைகளை யெந்தெந்தத்தெய்வஙகொடுக்குமோ அந்தந்தத்தெயவங்களுக்குப் பூசைவிதி யெந்தெநதப்படியே அந்தந்தப் பூசாவிதியென்றறிவது.) (௰௬)

யாவனொருத்த னியாதொருதெய்வ
மேவவருச்சனை யன்பின்விளைப்பா
னவலசலிப்பற மன்னவனுக்கே
காவலமுற்ற நளித்திடுவேனன்

(இ-ள் எவனுகிலுமொருத்தன் ஏதாகிலுமோர் தெய்வத்தையிச்சித்ததைக்கூடி வேணடியபத்தியினுலே யாராதனைபணணுவானே அவனுக்கு ஆவதான் சலிப்பற்று இச்சித்ததுபெருவன் அவனுக்கு நாக்கினுடையபலமும் அதிகமாகத் தோததிரமபண்ணப்பட்ட பத்தியைநிறைவேறநான்கொடுப்பேன்-எ-று. * (பத்தியைநான்கொடுப்பேனென்றதனுல அந்தத்தேவதைகளா தங்களாலேகொடுக்கத்தக்க பலனைக் கொடுப்பதல்லாமல் தங்கள்மேலே பத்திபுங்கொடுக்கமாட்டாது அந்தத்தெயவங்கள்மேலேபததியுங்கொடுத்து அந்தத் தெய்வரூபமாகப் பலனையுங்கொடுக்கிறவன் நானேயென்றது ) (௰௭)

அளித்தனனன்பொடுமத்தெய்வநாளுங்
களித்துவணங்கின காதலெல்லாமு

வெளிப்படமுற்ற விளைத்திடுவேனே
னொளிப்பரிதாமுரு மஞ்சவுடன்றேய்

(இ-ள்) ஒளிக்கஅரிதான இப்படியானது பயப்படச்சண்டைசெய்த அருச்சுனனேகேள் இப்படிநான்கொடுத்ததான[13] அந்தப்பத்தியுடனும் இச்சையுடனுங்கூட அந்தந்தத்தெய்வத்தைத் தினந்தினமும் மனதுசந்தோஷித்து வணங்கினவர்களினிச்சையையெல்லாம்[1] அந்தந்தத் தெய்வங்களுக்குள்ளேயிருந்து பெறும்படி குறையாமல் தெளிவாகவுண்டாக்குவேன் நான்-எ-று. * (இச்சைகளைவெளியாகவுண்டாக்குவனென்றதினாலே அந்தந்தத்தெய்வங்களுக்குள்ளே யிருந்துண்டாக்குவனென்ற கருத்தாபத்தி.) (௰௮)

சிந்தையிலத்தெய்வ மெய்த்தெய்வமென்றே
முந்தவருச்சனை யன்பின்முடிக்கு
மந்தமனத்தர் பெறும்பயன்வானா
ளந்தமுடைத்தத னிற்றமமையா.

(இ-ள்) ஐயா கேள் மனதிலே யிச்சைகளைக்கொடுக்கிற தெய்வத்தை யறியாத மெய்த்தெய்வமென்று நிச்சயித்து முதன்மையானபூசையை பத்தியினாலேமுடிக்கப்பட்ட அந்தமனதுடையவர்கள் பெறப்பட்டபலனும் ஆயுசம் நாசத்தையடைகிறது அந்தத்தெய்வமும் நாசமுடையது-எ-று * இதனாலே யென்னைப்பூசிக்கிறவர்கள் பெறும்பலனும்ஆயுசும் நாசமில்லாததென்றருத்தாபத்தி.) (௰௯)

கலிநிலைத்துறை

தானந்தமிலியுவமை தலைநின்றுதாவறிய
வானந்தவுருவமென வெனையென்றுமறிவதிலா
கோனந்தமகனரசர் குலமைந்தனிவணியலா
வானந்தமிலிலொருவ னிவனென்பரறிவிலிகேள்.

(இ-ள்) என்னை ஆதிதான் அந்தந்தான் உவமைதான் இல்லாதவனிவன் அறியாமல்நின்று ஆராலுங்கொடுக்க அரிதானஆனந்தசொரூபமென்று ஒன்றுமறிவதில்லாதவர்கள் இவன் இடையருக்கு ராசாவானநந்தகோபன்மகன் ராசவம்சத்திற்பிறந்தராசகுமாரன் இந்தப்பூமியிலிருக்கிற மனிதவியற்கையானவன்-நம்மிலொருவனென்பார் அறிவில்லாதமூடர்கள்-எ-று. * தாவரியவாவது தன்னைத்தானே யாருக்காகிலுங்கொடுப்பதல்லாமல் வேறொருவராலே தன்னையாருக்குங்கொடுக்க அரிதானவனென்றது ஆனந்தமாவது பரமசுகம் அறிவுள்ளவர்களென்னை ஆதியும் அந்தமும் உவமையுமல்லாத சுகசொரூபமென்றறிவார்களென்பதருத்தாபத்தி ) (௨௰)

மருவுறுபிரகிருதி யதிலுற்றமறைவன்மிக
வொருவருமறியுமவகை வெளிநிற்பதிலையுலகில்
வொருவுற்றபெருமயரின் மனமுற்றுவிழிமறைய
வருவுற்றவெனையுலக மறிகிற்றதிலையடைய

(இ-ள்) நான் என்னுடனேகூடின பிரகிருதியிலே கூடிக்காணப்படாமல் மிகவுமறைவேன் ஒருவருகாகிலு மறியும்படிவெளியாகநிற்பதில்லை யுலகத்திலே பயமுள்ளபெரியமாயையினதுமயக்கத்தில் மனதுகூடி அதினாலேகண்மறைய அதினாலே அருவமானவென்னையுலகமெல்லாம் அறியமாட்டாதிலலை-எ-று. * (பிரகிருதியாவது - யோகமாயை) (உக)

எழுசீரடி யாசிரியவிருத்தம்

போனவையினிமேற் புகுகின்றனவிப் பொழுதுபோகின்றனவனைத்துமு, யானறிந்திருப்பயாவையுமுணகி லென்னைமற்றியாவருமறியார, மானவெஞ்சிலைபாயவேண்டலவேண்டாமை தன்னிலேவருங்குணமயக்காற், றுனயர்ந்துருவாய்ச்சனித்திடும்பொழுதே தந்தமெய்யறிவுசார்ந்திடலால்.

(இ-ள்) சொல்லுநதொழிலாலே கொடுமையுஞ்செய்கதினாலே பெருமையுள்ளவில்லையுடைய அருச்சுனா போனகாரியத்தையும் இனிமேல்வருகிறதாகநின்றகாரியத்தையும் இப்பொழுது நடக்கிறகாரியத்தையும் எல்லாவற்றையும்நானறிந்து நாசமில்லமலிருப்பேன் உலகத்திலுள்ள யாவருமென்ற சரீரஜீவன்களும விருப்புவெறுப்பான ராகவேஷங்களினாலே யரப்பட்ட திரிகுணமயக்கத்தினாலேதானே மறந்து ரூபமாய் செற்பிக்கிறபோதே தங்கள தங்களுடைய சரீர அறிவான அஞ்ஞானம அடைந்ததினாலே திரிகாலங்களிலும் என்னையறியார்கள்-எ-று * (இதனைப்பொருளுக்கேற்பமாறுக. மற்றவென்றது-என்னை நான் அறிவதல்லாமல் மற்றயாவரும் யாவையும அறியமாட்டாரென்பது மெய்யறிவாவதுசரீரத்தையேதானெனவறிகிற அஞ்ஞானம்) (ட

வியக்கமேழுயன்றநல்வினைமாந்தர் விருமபலராகிமுன்செய்தபயக்கமேவியதீவினையெலாமறவேபற்றறப் பரிந்துமுன்போனூற், றுயக்கமேபுரியுஞ்சோகமேமுதலாந்துவந்துவக்குணங்களிற்றொடர்ந்த, மயக்கமேலரவொழுக்கமேநிலைநின் றென்னையேமனத்திடைவைப்பார்.

(இ-ள்) எல்லாருமதிசயிகக மேலாகச்செய்த புண்ணியத்தை மனிதர்கள இச்சியாதவர்களாகிப் பூருவத்திலேசெய்த அந்தப்புண்ணியம் பலனைக்கொடுக்க அவைகளாலேபூருவமே தொடாந்துவந்தபாவமெல்லாம் நாசமாகவே கருமபந்தமறப் பரிபக்குவமாகிபோனூப் றுன்பத்தையேசெய்யப்பட்ட சோகமுதலான தொந்தக்குணங்களினாலேதொடர்ந்து மோகத்தைக் கூடாதவர்களாகின்ற இடபத்தியானவொழுக்க

மே நிலைமையாகநின்று என்னையே மனதில்வைப்பார்கள்-எ-று-* (நல்வினையாலே தீவினையற்றுஒன்றுக்கொன்றீடாக இருவினைக்கட்டுமற்றுப் பரிபக்குவமாகிப்போனால் துன்பகாரணமான சோகமுதலாகத் தொந்தமாக அநாதியிலேதொடர்ந்தகுணமோகத்தைவிட்டு நிச்சய ஞானயத்தியையொழியாமல் நின்றென்னையேதங்கள்மனதில்வைப்பார்களென்பது ) (௨௩)

எறிவரும்பிணிமூப்பபிறப்பொடு] பிறப்பென்றிவை கெடுத்திடற்பொருட்டாகக், குறிவரும்பரிசுநினைந்துமற்றெனையே கூடுகின்மேவிநின்றவர்க,ளறிவரும்பிரமந்தன்னையுமதனையறிபுமெய்யறிவையுமறிவி. னெறிவிருங்கருமமனைத்தையுமறி வாரறிந்தபின்னிகழ்வதுங்கேளாய்.

(இ-ள) விலகிப்போய்விடஅரிதானவியாதிமூப்பிறப்புக் கழிக்கவுடனே பிறப்புமென்றறிந்த நாளையுங்கெடுக்கிறநிமித்தமாகஆத்மஞான சொரூபமான குறிவரும்படி நினைந்து என்னையேகூடுகிற முயற்சியையடைந்துநின்றவர்கள் அறியஅரிதானபிரமத்தையும்அந்தப்பிரமத்தையறியப்பட்ட சத்தியஞானத்தையும் அந்தஞானமார்க்கத்திலேவரப்பட்டசகல கருமத்தையும் அறிவார் அப்படியறிந்தபிறகு நடப்பதுங்கேட்பாய் அருச்சுனா-எ-று. (௨௪)

அறுசீரடியாசிரிவிருத்தம்

தேடும்பழையவதிபூத மதிதெய்வத்தோடதியெச்சங்
கூடும்பரிசுநின்றவெனையறிதாரிந்தப்புழுக்கூடு
வீடும்பொழுதுமெனைமெய்யேயறிவாரென்றூர்யாம்வெவ்வே
றூடும்பழையமாயக்கூத்தாட்டுகின்றவம்மாயன்

(இ-ள்) எல்லாரும் விசாரிக்கப்பட்டபழையதான அதிபூதத்து-னும், அதியெஞ்ஞத்துடனும், கூடும்படிநின்றவென்னை யறிகிறவர்கள அவர்களுடைய இந்தப்புழுவிருக்கிறகூடான தேகம் அழியும்போது என்னையே மெய்யாக அறிவார்களென்று சொன்னார்நாம்வேறுவேறாக ஆடப்பட்டபழையதானமாயக்கூத்தைபாட்டுகின்ற அந்தப்பரவாசுதேவன் எ-று. * (தேகமிருக்கையில் தானேசகலபூதங்களிலும், சகல தெய்வங்களிலும் சகலகருமங்களிலும் பரிபூரணமாகநின்றவென்னை இந்தப்படியறிகிறவர்கள்தேகமபோகின்ற போதும்என்னையேசத்தியமாகஅறிவார்களென்றது இப்படியறியாதவர்கள்சாகிறபோதும் மறந்துபிறவித்தொந்தப்படுவாரென்றதருத்தாபத்தி.) (௩௨)

எ வது-மாயாரூப அத்தியாயம் முற்றுப்பெற்றது.



ஆ அத்தியாயம்-எ-க்கு-கூடியசெய்யுள்-௨௨அ.

எட்டாவது.

# அட்சரயோக அத்தியாயம்.

—— (*) ——

கலி விருத்தம்,

அடையஞாலத்தை யார்த்தலிலார்ப்புறு
மிடையர்தாம்பிடை யார்ப்பவிருப்பதற்
குடையனாகமுன் ேறுினவேகொடங்
கிடையனுமவன் மீளவியம்புவான்

(இ-ள்) ஜெகத்தையெல்லாந் தனக்குள்ளே கட்டிஅந்த ஜெகத்திலே தான்கட்டுண்ணுமல் (இந்தஅவதாரத்தில) இடையருடையகயிறானது தன்னிடையைக்கட்ட அதனாலே கட்டுண்டிருக்கிற ஸ்ரீகிருஷ்ணசுவாமிக்குத் தன்னைச் சிஷுக்துவ முடையவனுகமுன்புசொன்னதையேசங்கையாகக்கொண்டுஅப்போது (பாண்டவர்களுடைய) மத்தியனுனஅருச்சுனன் திரும்பச்சொல்லுவான்-எ-று (க)

ஆயபிரமத்தோடாதியாகவமைகரும
மேயவதிபூதமதி தெய்வமதியெச்சங்
காயமதிலுள்ளபரி சுங்கெழுமுகாயம்
வீயலுறுபோதிலுனை மெய்தெளியுமாறும்

(இ ள்) நீர்சொன்னதாகிய பிரமத்துடனே ஆதியாக அமைந்தகருமம் இவைகளுடனே கூடின அதிபூதம் அதிதெய்வம் அதியெஞுமென்று சொல்லப்பட்ட இந்த ஆறும்தேகத்தி லிருக்கின்றவிதமும் இந்த ஆறுடனுஞ் சேர்ந்தனேகமானதேகம் நாசமடைகிறபோதில் உம்மை யுண்டாமையாகத் தெளியப்பட்ட வழியும் இந்தவேழும -எ-று, * (இந்தவேழையுங் கிரமமாகச்சொல்வது பிரமம் அதியாகம் கருமம் அதிபூதம் அதிதெய்வம் அதியெஞும் உம்மைத்தெளிவித்தல் ஆகவேழு இவைகட்டு எழுவகைவினுவென்று பெயர்மெய்யென்றும் உண்மையென்றும் சத்தியமென்றும் நித்தியமென்றும்பிரமத்தைச்சொல்லுவார்கள் இதனாலேபொய்யென்றும் இன்மையென்றும அசத்தியமென்றும் அநித்தியமென்றும்மாயையைச்சொல்லுவார்கள் உனைமெய்தெளிய மாறுவது உன்னையுண்மையாகத்தெளியும்படியென்றதுஇதனாலே இப்பொழுது உன்னைமாயாதேகியாய் மயங்கியதினாலேஅநித்தியகாலத்தில் உன்னைப்பிரமமாகத்தெளியும்படி யென்றது

விரியவுரைசெய்தருளவேண்டுமெனவிணவே
வரியரவிலேதுயிலு மாயனுமுரைப்பா
னரியதழிடாமையதனைத்திலுமுரைக்கிற்
பெரியதுமொழிந்தபிர மம்பிறவையுங்கேள

(இ-ள்) தெரியும்படிவிரிவாகத்திருவாய்மலர்ந்தருளிச் செய்யவேணுமென்று அருச்சுனன்சொல்லப்பொறியுள்ள ஆதிசேஷன் மேலேயோக நித்திரைசெய் தருளுகிற ஸ்ரீகிருஷ்ணசுவாமி திரும்பச் சொல்லுவார்சொல்லுமிடத்தில்லாக்கு மனங்களுககெட்டாதது அழியாததுநித்தியமானதுபெரியதுக்கும் பெரியதாய் எத்தனைசொல்லப்படுமோ அவைகளுக்கெல்லாம்பெரிது அதுமுன்னைச்சொன்னபிரமம் இனிபின்னைச்சொன்னமற்றஆறையுங்கேள் அருச்சுனா எ-று *(ஆயபிரமத்தென்றசுவியும்விரியவுரையென்றசுவியும்ஒருதொடாஉரைக்கிலரியதெனமாறுகமொழிந்தபிரமம் பிறவையுமென்றதனால் முன்னாக இனிப்பின்னைகவெனவந்ததுஇன்னமுமொழிந்தபிரம மென்றதனாற் பிரணவ அட்சரமாகசசொன்ன பிரமமென்றுஞ்சொல்லலாம்.) (௧)

அறுசீரடியாசிரியவிருத்தம்

அந்தக்கரணங்களினின்றவழிவத்தியாகமாகின்ற
இந்தப்பிறவிதனையாக்கு மியாகங்கருமமென்பதுதா
னந்தற்கமைந்தவுடம்புதனை நென்னென்கின்றவதிபூதம்
பந்தப்படுமிவ்வுடற்சமைந்தபுருடன்றெபலமெனப்படுவான்

(இ-ள்) அத்தியாகமாகின்றது அந்தக்கரணங்களிலேநின்ற அறிவுகருமமெனபது இந்தப்பிறவியையுண்டாகின்றயாகமானசிறுட்டி அதிபூதமாகின்ற அழிகிறதற்குஅமைந்தஉடமபைச்சொல்லுகிறது ஆயகாரமும அதிதெய்வமாகின்ற கட்டுப்பட்ட இந்தவுடம்புக் கமைந்தபுருடன் எ-று,(அததியாகமாகிறது அத்தியாதமகமென்னப்படும். (௨)

எஞ்சுதலையிலதியெச்ச மாகின்றதுதானிறக்குங்கா
லெஞ்சுகவருநெறிகளெல்லாமடைந்துநினையப்படுவதுதா
னஞ்சுபுலனுமபொறியைந்து மடக்கியறிவென்பாலதாய்த்
துஞ்சுமவர்களெனையடைவதெவ்வாறென்னிசொலக்கேள்.

(உ-ள்) குறைவில்லாதஅதியெஞ்ஞமாகின்றதுமனதைக்கிரசிக்கிறவிந்திரியவிஷயாதிவழிகளையெல்லாம் அடைத்துதான்சாகின்றபோது என்னுண்மையைநினைக்கபடுவதுபஞ்சேந்திரியத்தையும்பஞ்சவிஷயத்தையும்அடக்கி அறிவைஎன்னிடத்தில்வைத்துச்சாகின்றவர்களென்னையடைவதெப்படியென்றால்சொல்லக்கேள் அருச்சுனா-எ-று (௩

இந்தவுடலம்விடும்பொழுதிலியாவனியாதென்றினைநினைந்தா
னந்தவதனையந்தப்பாவனையாலடையுமாதலினால்
எந்தனியல்லையப்பொழுது மிதயத்திடைகொண்டென்பாலஞ்
சிந்தையொடுவாளமர்தொடங்கி லதனாலென்னையேசேருதியால்

(இ-ள்) எவனாகிலுமொருத்தனிந்தத்தேகம் விடுகிறபோது எதையாகிலுமொன்றைஎந்தப்பாவனையாகநினைத்தானோ அவன் அதைஇந்தப்பாவனையாலடைவான் ஆகையாலேஎன்னுண்மையான சுபாவத்தையெந்நாளுமுன்னிருதயத்திலிடத்தில்வைத்துக்கொண்டு என்னிடமாகவைக்கப்பட்ட மனதுடனே கீர்த்திப்பிரகாசமுள்ள சண்டையைத்தொடங்கிச்செய்தால் நானுனக்குள்ளும்நீயெனக்குள்ளுமானதினாலேஎன்னையேநிச்சயமாகச்சேருவாய்-எ-று. * (என்னையே யென்றதனாற்சந்தேகமில்லையென்றது ) (௬)

நல்லகருமயோகத்து ஞானயோகமதுதனிலுஞ்
செல்லுமன்னைமிகச்செலுத்திப் பிறிதொன்றினையுஞ்சேராதான்
சொல்லவரியகதிரவன்மண்டலம்போற்றோன்றுந்தொல்தேனை
மல்லதடையானவனிபற்கை யடையும்பரிசையறையக்கேள்

(இ-ள்) நல்லகருமயோகத்திலும்ஞானயோகத்திலும் என்னைச்சேரத்தக்கதாகமனதைமிகவுஞ்சேர்த்துவேறொன்றையுஞ்சேராதவன் இவ்வளவென்றுசொல்லஅரிதானஅளவற்றசூரியமண்டலம் போலவிளங்கப்பட்டபழையவனான என்னையடைவானல்லாமல்வேறொன்றையுஞ்சேரான் அவன் சுபாவத்தை யடையும்படியைச் சொல்லக்கேள் அருச்சுனா-எ-று. (எ)

எல்லாப்பொருளுமறிவானை யெல்லாப்பொருட்குபழையானை
எல்லாரையுந்தன்னிலைநிறுத்து வானையிறப்பச்செறிவானை
எல்லாப்பயனுமீவானை யார்க்குநினைத்தற்கரியானை
எல்லாவிடத்தும்பொய்யிருடீர்த் திலச்சுகதிர்போலெழுவானை

(இ-ள்) எல்லாப்பொருளையுமறிந்த சருவக்கியனை யெல்லாப்பொருளையுண்டாக்குகிறசிருஷ்டியினாலே யெல்லாப்பொருளுக்குப்பழையவனை யெல்லாரையுந்தன்னிலையில் நிறுத்துவதான திதிசெய்கிறவனை யெல்லாரையுஞ்சாகச்செய்து தான்சாகாமற்சங்காரஞ்செய்த கனவானை எல்லாப்பிரயோசனத்தையுங்கொடுக்கிற திரோபாவஞ்செய்கிறவனையாருக்கும் நினைக்கிறதற்கெட்டாதவனை எல்லாவிடத்திலு மிருக்கிற பொய்யானயிருளைப்போக்கிப் பிரகாசிக்கிற ஞானசொரூபமாகவெழுந்து அனுக்கிரகஞ் செய்கிறவனை-எ-று. * இதனாற் பிரமத்தவிரமற்றப் பொருள்களெல்லாம் அறிவில்லாததென்றும் புதிதே

ன்றும் ஆதாரமென்றும் அநித்தியமென்றும் அசுவதந்திரமென்று அட
ங்கினவமென்றும் மாயாமயமென்றும் அறிவது இசனுளசிருஷ்டி. திதி
சங்காரம்திரோபவம் அனுக்கிரகம் என்றபஞ்சகிருத்தியமுங்காண்க,)

மருவற்குரியவன்புடையான்மயங் காவியோகமனத்தாலே
புருவத்திடையேதன்னுடைய புரைதீருயிரைப்புகநிறுத்தி
யுருவத்தினைவிட்டிடிலிந்த யோகத்தாலேயவனோடும்
பொருவப்பரியப்பொருண்மேலேயின்னமைபுகலவன்பொருளேலோய்

(இ-ள்)இப்படிக்கொத்தவென்னைச்சேருகிறதற்குரிக்கானபத்தியை யுடையவன்வேறொன்றிலும்மயங்காதயோகத்திடச் சித்தத்தினாலேசு த்திசெய்து குற்றந்தீர்ந்தகணபிராணவாயுவைப்புருவ நடுவேசேரநிறு த்தித்தேகத்தைவிட்டால் இந்தயோகத்தாலே அந்தப்பிரமமானவென் னோடுங் கூடப்படுவான் இந்தப்பொருளின்மேலேஇன்னமுஞ்சொல வேன்கேள் சனனடைபண்ணுகிறவேலையுடைய அருச்சுனா-எ-று *(எல லாப் பொருளுமென்ற கவியும்மருவற் குரிய வென்ற கவியுமொரு தொடர்.) (௯)

கொச்சகக் கலிப்பா.

யாதொன்றைமறைதெரிந்தோ ரழியாதென்றெடுத்துரைப்பா
ரியாதொன்றைபவாவறுந்தயோகிகடாமெய்திடுவா
ரியாதொன்றைபறவுணர்ந்தோர் காமமுதலியவிழ்ப்பா
ரியாதொன்றைப்பரமபொருளைச் சுருக்கமாயியம்புவன்கேள்

(இ-ள்)வேதந்தெரிந்தவர்கள்எதையழியாதென்று தூக்கிச்சொல்வா ர்களோ ஆசையைக்கெடுத்தயோகிகள்எதைஅடைவார்களோ காமக்கு ரோதலோபமோகமதமாச்சரியங்களையழித்தவர்கள்எதையடையவே ண்டுமென்று தெரிந்தார்களோ அந்தவொன்றானபரம் பொருளைச்சுரு க்கமாய்ச்சொல்லுகிறேன்கேள் அருச்சுனா-எ-று, *(எதையென்றதுஎ ந்தச்சொரூபத்தை. (௰)

கலிவிருத்தம்.

அஞ்சுபுலன்வழி யடைத்தயலுறாமே
னெஞ்சுதனையிதயகம லத்தினினிறுத்தி
எஞ்சுதலிலுயர்வளியை யுச்சியினிலேற்றி
யுஞ்சுபுகுநெறியெனவி யோகமொடிருந்தே

(இ-ள்) பஞ்சவிஷயங்களையும் அன்னியமானவைகளிலே சேராமல் அந்தந்தவிஷயங்களை அந்தந்தவிடமானவிந்திரியங்களிலே தானேய டைத்துமனதைஇருதயகமலத்தில்நிறுத்தியிளைப்பில்லாதபிராணவா யுவைபிரமரந்திரமானவுச்சியிலேற்றிக்கருமானுபவத்துக்குத் தப்பிப்

பிரமத்திலேபுகுதப்பட்டமார்க்கமிது வென்று யோகத்துடனிறுத்து. எ-று, *( அயலென்றதனாலேவொருவிஷயத்தை மற்றோரிந்திரியத்திலடைத்தாலும் வியாபாரப்படுமாதலால் விஷயங்களாகட்டும்மற்றோரிந்திரியங்களாகட்டு மிவைகளன்னியமாகையால் அன்னியததிலடைத்து வியாபாரப்படுத்திக்கொள்ளாமல் அந்தவிஷயங்களை அந்தந்ததானத்திலேதானே அடைத்தலென்றார் இப்படியடைககவியாபாரமானகருமங்கெட்டுமனோசலன் மடங்கியோகங்கைகதருமென்பது )  (௰௧)

ஓதலியற்கையின்றோமெனுமெழுத்தை
வாய்தனிலுரைக்கமனமாவதுதனித்தே
யாவருமெனைத்தெரிய வாவியினைவிட்டா
னேதலினியற்கையினை யேயடைவன்மிக்கோய்

(இ-ள்) ஓதலில்லாதசுபாவமான மௌனத்துடனே ஓமென்கிறயேகாக்ஷரத்தை வாயிலேயுச்சரிக்க மனதானது வேறொருவியாபாரக்கூட்டமில்லாமல் ஏத்திடமனதாகி அந்தமந்திராத்மாவாகப் பெரியவர்கள்விசாரிக்கப்பட்ட வென்னைததெளியத்தக்கதாகச் சிவனைவிட்டவன் தாழ்விலலாத மேலானசுபாவதேகியையேயடைவன் எல்லாரிலும்அதிகமானஅருச்சுனா எ-று * இயற்கையென்பது பிரமமசெயற்கையாவது மூர்த்தியாகியசகலமும் அஞ்சுபுலன்களென்றகவியும் ஓலினென்றகவியுமொருதொடர்.)  (௰௨)

இயபரிசிலெப்பொழுது மென்னைநினைகிற்பார்க்
கப்படியொராண்டொராறுதிங்களளவுள்ளே
கைபபடுவன்யானெனியலகைப்படவிருந்தோர்
பொய்ப்பிறவியானவை மறுக்தடைதல்பூணார்

(இ-ள்) இப்படியோகத்திலெங்காளுமென்னை நினைக்கிறவர்களுக்கு அப்படியே ஒருவருஷத்துக்குள்ளேயாகிலும் ஆறுமாதத்துக்குள்ளேயாகிலும் நான் அவன்கையிலகப்படுவேன் இப்படி என்சுபாவமானதுகையிலகப்படவிருந்தவர்கள் பொய்ப்பிறவியானசென்மத்தை யினிமேலடைகிறகருமத்தைத்தரியார்கள்-எ-று * மறுத்தென்றதனால் இப்போதுள்ள தேகமேயல்லாமலிதுமறுத்து வேறுதேகமில்லையென்பது இப்பொழுதுளதேகமும் பிராரத்தந்தொலையுமட்டுமேயிருக்குமேலலாமல்மேலிராது ஆகாமியமேறுதபடியினாலே யினிமேல்பிறவியில்லையென்பது பொய்யாவதுஅஸ்தம் பூணாரென்றதனால் என்னியல்புகைப்படவிராதவர்கள் பொய்ப்பிறவிபூணுவார்களென்றும் கைப்படுவனென்றதனால் இப்படி நினையாதவர்களுக்கு நான்கைப்படேனென்றதருத்தாபத்தி வரும் இதனால்நான் அகப்பட்டால் பிறவிவிடும் நான் அகப்படாவிட்டால் பிறவி விடாதென்று நிச்சயமறிவது,)  (௰௩)

(அறுசீரடி யாசிரியவிருத்தம்.)

செய்யார்முன்சார்ந்தவினைதீர்ந்தபோதே திசைமுகனுடைந்தா ருந்திரும்பிமீள்வார், மெய்யாகவென்னையடையுமவரேகண்டாய் மீளாத நெறியடைந்தார்வேறுகூறில், ஐயகேள்சதுர்யுகமீ ரஞ்ஞூற்றிற்கோர் பகலா மாணடொருநூறவர்க்குமுள்ள, தெய்யாதவவருக்கோர்பகலிற் றோன்றியிராவிறக்குந் தன்மைத்தாலியோனியெல்லாம்

(இ-ள்) சகலலோகங்களுக்கு மேலானபிரமலோகத்தி லடைந்தவர் களும முன்செய்து அதனால்வந்த புண்ணியமனுபவித்துத் தீர்ந்தபோ தே இந்தலோகத்துக்குத் திரும்பவருவார்கள் மெய்யாகஎன்னையடை ந்தவர்களை கண்டாயருச்சுனா, திரும்பி இந்தலோகத்துக்குவராத தே ஸையடைந்தவர்கள் ஆனால் பிரமலோகமுதலான லோகங்களிலே சேர்ந்தவர்களுந் திரும்பார்களென்று வேறுசொல்லில் ஐயா அதையு ஞ்சொல்லுகிறேன்கேளிங்கே சதுர்யுகமாயிரமானால் அங்கேயொருப கலாம். இந்தபடியிங்கே நூறுவருஷமாய் சுப்பிரமாணம்போல அந் தப்பிர்மாவுக்கும் அந்தக்கணக்குப்படிக்கு நூறுவயசுளளது யாராலு மறியாத அந்தப்பிரமாவுக்கு ஒருபகலிலே சகலயோனிகளும்பிறந்து அந்த யிராத்திரியிலே யிருக்கிற சுபாவத்தையுடையயது-எ-று. *.(ச துர்யுக மீரைஞ்ஞூறொருபகலென்றதனால் இரவுமீரைஞ்ஞூறு சதுர்யு கமென்றும், இந்த இரண்டுங்கூடினது ஒருநாள் இந்தநாள் முப்பது கூடினதுமாதம், இந்தமாதம் பன்னிரண்டுகூடினது வருஷம். இந்தவ ருஷம் நூறுகூடினது பிர்மாவுடைய ஆயசு, இந்தப்பிர்மாவினுடைய ஒருபகலிற் சகலசீவனும், பிறந்து அந்தராத்திரியிலடங்குகலினாலே இந்தப்படி பிர்மாவுக்கு நூறுவருடமென்றகாலஞ் சரியானற்பிர்மாதி லோகங்களெல்லாம் நாசமடையும் அதனாலே பிரமலோகத்தைச்சேர் ந்தபேருந் திரும்புவாரென்றது ) (மச)

நெறியில்வருவியக்தமோ டவ்வியத்தங்கூடாததிலமையென்று பொறியறியுமாக்கையினி லழியாதபுனலென்றும்புனிதமென்று மறிவரியவுருவென்று மழியாதபொருளென்று மடைந்தோர்பின்னைப் பிறிவரியகெதியென்றுபெரியோர்கள்பேசுவதென்பெற்றிகண்டாய்.

(இ-ள்) பிரம்மாதிலோகங்கள் அநித்தியமென்று அதற்குள்சுபா வத்தைச்சொன்னீரே உம்முடைய நித்தியசுபாவமெப்படியென்றால் சொல்லுகிறேன்கேள் அருச்சுனா பிரகிருதிவழியில்வரப்பட்ட வியத் தத்துடனே அவ்வியத்தம் இந்தவிரண்டுங்கூடாத நிலமையென்றும்

இந்திரியங்கள்காசமாகப்பட்ட தேகத்திலிருக்கிற கெடாதஞானமென்றும் சுத்தமென்றும் யாருமறியவரிதான சொரூபமென்றும் கெடாத வஸ்துவென்றும் அதனையடைந்தவர்கள் பிறகு பிரியவரிதான கெதியென்றும், பெரியோர்கள்சொல்லுவது என்னுடைய சுபாவமேகண்டாய் அருச்சுன என்றவாறு. 0 (இதனாலே யென்னையடைந்தவர்கள திரும்பார்களென்றது.) (௰௫)

பரபொருளும்யாதொருவனுள்ளடங்கிற்றெங்குமாம்சிற்கின்றான்யா
னபபரமப்பொருளாகியுள்ளவென்னையன்பினாலடைவதையா
விப்பரிசுவருஙகாலத்திறந்தார்களபிறவாதார்பிறப்பரொன்னி
லப்பரிசுவருஙகாலத்தினையறியவுனக்கின்றேனதனைக்கேளாய்.

(இ-ள்) எவனொருவனுளளே எந்தப்பூதங்க ளடங்கினவோ எங்குந்தானாகநிற்கிறவனுரோ அந்தப்பரமபொருளாக விருக்கிறவென்னைப் பத்தியினாலே யடையத்தக்கது ஐயா இந்தசுபாவம் வருங்காலத்தில் மரணமானவர்கள் திரும்பிப்பிறவார்கள-பிறப்பாரென்னில் அந்தச்சுபாவம வருகிறகாலத்தையுனக்கு அறியச்சொலலுகிறேன அதைக்கேட்பாய் அருச்சுன-எ-று. (௰௬)

அங்கியொளி பகலவெண்மை யாங்காலத்தேவதையா மவைகளோடு, தங்கியறுதிங்களுடையுத்தராயனஞ்சார்வார்மறித்துஞ்சாரார் களுள்புகைகறுப்பென்னுங் காலத்தேவதையடைந்து பிறகுங்கண்டா, யெங்கமறுதிங்களுடைத்தெட்சணாயனத்திறந்தயோகியென்பாம.

(இ-ள) அக்கினிப்பிரகாசம்பகல்சுக்கிலபக்ஷம் இவைகள் அதிதேவதையாகப்பட்ட அவைகளுடனேகூடித்தைமாதமுதல ஆனிமாதமட்டும் ஆறுமாதத்தையுடையஉத்தராயணத்தையடைந்த யோகிகளபிரமத்தையடைவார் - திரும்பவுமிந்தச் சகத்திலேவாரார்கள் இராத்திரிபுகைஅமரபட்சமிந்தஅதிதேவதையையடைந்து எங்கும் ஆடிமாதமுதல்மார்கழிமாதமட்டும் ஆறுமாதத்தையுடைய தெக்ஷணாயனத்திலேமரணமானயோகியென்றும பேருடையவன திரும்பவுமிநதச்சகத்திலே பிறப்பான்கண்டாய் அருச்சுன-எ-று. (௰எ)

ஏதமாண்டின்றியிவ் விரண்டுமோயும்யோகிதான்
வேதமோதிவேழ்விதான மெய்தவங்கள்செய்தரு
ளேதுவாயதற்பதங்க ளெய்திமெய்துவா
ஞகலானியோகமேசெய் யென்றுமாயனோதினன்

(இ-ள்) குற்றமானதில்லாமல் இந்தஉத்தராயனம்தெக்ஷணாயனமெ ன்கிறவிரண்டும்விசாரிக்கப்பட்ட யோகியானவன் வேதங்களையோதி யாகக்களைப்பண்ணித் தானங்களைக்கொடுத்துச் சத்தியமான தவசுக ளைச்செய்திருக்கின்றவன் அடைகின்றபடிக்கு நல்லபதவிகளையடை ந்து பிறகுமோக்ஷத்தையுமடைவான் ஆகையால் அருச்சுனா நீயோக த்தையேசெய்யென்று ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொன்னார் எ-று. (உஅ)

அ-வது-அக்ஷரயோக அத்தியாயம்,

முற்றுப் பெற்றது.

ஆக அத்தியாயம்-அ-க்கு கூடியசெய்யுள்-உசஇ

(*)

இந்தஅத்தியாயத்திக்குக் கிரந்தத்திலே அக்ஷரப்பிரமயோக

மென்றும் சத்தப்பிரஞ்ஞாதார யோகமென்றும்பெயர்,

தமிழில் எழுவகைவினாவென்றுபெயர்,

*

கூ

ஒன்பதாவது.

# மாயாவிகார அத்தியாயம்.

கலிவிருத்தம்,

நார்வன்றுயர்களையும்பத மீதன்றுகொல்லெனவே
யார்வஞ்செய்துவிசையன்கொளு மாசங்கையையறியக்
கார்வந்தெனவவன் மூன்புற களிகொண்டெழுவெளியே
தேர்வம்பரிகுசைகொண்டெழு பாகன்திருமொழிவான்

(இ-ள்) இப்படிசொன்னதைக்கேட்டு அருச்சுனன் அன்புசெய்து மனதை அரம்போல அறுக்கப்பட்ட வலுமையான துக்கத்தை வே ரோடே பிடுங்கப்பட்ட பதவியிதல்லவோ-ஆமோவென்று சந்தேக மாகக்கொள்ளப்பட்ட பெரியசங்கையை அந்த அருச்சுனனுடைய மனதுமகிழ்ச்சிகொண்டெழும்ப வெளியிலே அவனுடைய தேரிலே

கட்டிய கொடியவேகமுள்ள குதிரைச்சவுக்கைத் திருக்கையிலே பிடித்துக்கொண்டெழும்பி நீருண்டமேகம்வந்ததுபோல அவனமுன்னே வாதிருக்கின்ற சாரதியான ஸ்ரீகிருஷ்ணசுவாமி யறிந்து திருவாய் மலர்ந்தருளிச்செய்வார்-எ று- () (வெளியேயென்றதனால் சகலபதார்த்தங்களுக்குமுள்ளே யிருக்கிறவர்வெளியிலேவந்து கணகாணவிருந்து சொலலுவார்.) (க)

அறையும்பொருள்களின்மூன் பனுபலமொன்றியவதனை
மறையும்பொருள்களின்மூந்துறமறையும்பொருளினைமே
லிறையுந்துயரதுவின்றிமுன் னிலையகின்றதையசைவோ
டுறையுந்துகளறின்றதை மொழிகின்றனனுணர்நீ

(இ-ள்) சொல்லப்பட்ட காட்சிப்பொருள்களிலே எல்லாவற்றிற்கு மூந்தின அனுபவமாகக் கலந்ததைக்காணாமல் மறையப்பட்ட பொருள்களி லெல்லாவற்றிற்கு முன்னாகமறையப்பட்டபொருள் இந்தப் பொருளை யறிந்ததற்குமேற் குஞ்சமாகிலுந் துக்கமில்லாமல் சந்தேகமிலலாமல் வெறுப்பில்லாமல முன்னாகப் பொருந்தினதைச் சரத்தோடே யசரமாக விருக்கபபட்ட சராசரமான குற்றங்களற நின்றதைஇப்படிக்கொத்த ஞானத்தைச் சொல்லுகிறேன நீயறி எ-று () (அசைவோடுறையுந்துகளென்றதை அசைவோடே கூடியிருக்கப்பட்ட அணுவாமென்பாருமுளர் அதுகூடாது சனனத்தோடே யிருக்கப்பட்டகுற்றமறச்சலியாமல் நின்ற ஞானமென்னலாம்- சலித்தலாவதுநிலைவிட்டசைதல் (உ)

அழிவொன்றலததமனென்றிய தரிதன்றியததன்மேல்
வழிவந்தவெய்யறிவின்பில ரெனையெங்கனுமருவா
ரழிதந்திசெனனங்கொடு மரணங்கொடுமிகனே
யுழிதந்திகபரமொன்றிய வுருவங்களினுழல்வார்

(இ-ள்) கெடாதது கருமங்கலந்தது என்னையறிய வரிதல்லாதது இப்படிக்கொத்த ஞானமானதின்மேல் நல்லகதியாகவந்த மெய்ஞ்ஞானவிசுவாசமில்லாதவர்கள் எந்தலோகத்திலுமென்னைக்கூடாமல் இழிவுதரப்பட்ட பிறவிகொண்டும் மரணங்கொண்டும் இங்கேதானே சுழன்றுசுழன்று இந்தலோகத்திலும் மேலோகத்திலும கூடிவரப்பட்ட தேகங்களிலே யுழல்வார்கள்- எ-று.* (விசுவாசமுள்ளவர்களிப்படியுழலாமல் என்னைக் கூடுவார்களென்ற கருத்தாபத்தி.) (ஙட)

அறுசீரடி யாசிரிய விருத்தம்

யாருமறியப்படாமையே யெனக்குவடிவாயுடையவியா
ரூருமூலநக்கலையடையாப் புரப்பிறிற்பனுதலிறை
சாருமூலகிற்சராசரங்க ளென்னையேபவற்றிலனாஞ்சாரேன்
சேருமாறு நின்றூற்போற் றெளியாதார்க்குத்திகழுமால்

(இ-ள்) யாராலுமறியப்படாததுவே யெனக்குச்சொரூபமாகவுடையனான் எல்லாருமவுலகங்களையடையநிறைப்பரப்பிநிறபேன் ஆகையாலேவுலகங்களிலுள்ள சராசரங்களெல்லாமென்னையே யாதினமாக விருக்கும்அந்தச்சராசரங்களிலுதினமாகநான்கூடேன்தெளியாதருடருக்குநான் அந்தச்சராசரங்களிலேகூட்டும்படிநின்றாற்போல விளங்கும்-எ-று, () (தெளிந்தஞானிக்கு நான்கூடேனென்று விளங்குமென்ப தருத்தாபத்தி) (௪)

முன்னேயொன்றுங்கலவாதி யானிற்பன்முழுதுமாய்நின்ற
வன்னோர்மையினுலகமென்றே டாகங்கலவாதாதலினு
லென்னையென்ப சிற்கை யெனைப்பாராபிந்தச்சகமெல்லா
மன்னேயென்றன்மாயைபெறு மாங்காரமுநான்றருவன்சாண்

(இ-ள்) எல்லாவற்றிற்குமுன்னே நானொன்றுங்கலவாமல் நிற்பேன் நான்சகலமுமாய்நின்ற அந்த நுண்மையினாலே எனதேட்டயுலகமெல்லாஞ்சொரூபங்களாவது ஆதலால்என்சுபாவத்தைப்பாராய் அருச்சுனாஎப்போதுஎன்மாயையுணடோ அப்போதே யிங்கவுலகத்தையெல்லாம் மாயையுண்டாக்கும் இப்படி என்னிலுண்டானதுமாயையானகையால் ஆங்காரமும் நானுண்டாக்கினது கண்டாய்-எ-று, (௫)

கலிவிருத்தம்.

என்னுருவிற்புணராதே யென்னைவிடத்தோன்றுதே
மன்னுயிர்களென்னையெங்குஞ் சார்ந்துவருமலகைகேட்கி
னுன்னுமிடமெங்குநிறைந் தொளிர்கின்றவானெங்கு
துன்னுமியந்செறிகாற்றின் றோற்றம்போல்சுடர்வேலாய்

(இ-ள்) என்னுடைய சொரூபத்திலே பொருந்தாதும் என்னைவிடவுண்டாமலும்நின்மையான சகலசீவன்களும்எங்குமென்னையேசார்ந்துவரும் அதுவரப்பட்டவகையைக்கேட்கிற்பிறகாசிக்கிறவேலாயுதத்தையுடைய அருச்சுனா சொல்லுகின்றேன்கேள் நினைக்கப்பட்டவிடமெங்குநிறைந்து பிரகாசிக்கின்ற ஆகாயமெங்கும் நெருங்கினசுபாவங்களமுமுள்ள காற்றினுடைய தோற்றம்போல்-எ-று () (வாயுவானது ஆகாசத்திலுண்டாய் அதிலேகூடாமல் அதுள்ளமட்டுந்தானுள்ளதாய் அதினுடைய விஸ்தாரமட்டும் நிறைந்ததாய் அதைவிடவேறிடமில்லாததா யிருக்கிறதுபோலச் சகலசீவனும்என்னிலுண்டாய்என்னிலேகூடாமல் நானுள்ளமட்டும் தானுமுள்ளதாய்என்னுடையவிஸ்தாரமட்டும் நிறைந்ததாய் அதைவிடவேறிடமில்லாததா யிருக்குமென்றதுவிரிவு.) (௬)

ஈண்டுபொருளிவையனைத்து மிறக்குநாளென்னிடையே
மாண்டுபுகும்பிறக்குநாள் மற்றவைதள்வரன்முறையே
மீண்டுபுரப்படுமெல்லா மாதலினுன்மெய்ப்பார்க்கில்
யாண்டுமுயர்படைத்துக்காத் தழிக்கின்றேனியானேசாண்

(இ-ள்) இவ்விடத்திற் சொல்லப்பட்ட பூதங்களிவைசகலமும் நாசமாகிறநாளில நாசமாகி என்னிடத்திலேபுகுந்தடங்கும் இவைதவிரப் பிறக்கிறநாளில அவைகளொடுங்கின வரன்முறைப்படியே எல்லாந்திரும்பிப் புறப்படும ஆகையாலே சத்தியமாகவிசாரிக்கில் எந்தவிடங்களிலும் சகலசீவனையும் சிருஷ்டித்துச்சங்கரிக்கிறவன்நானேயல்லாமல்வேறில்லைகாணென்றவாறு (வரன்முறையாவது பிருதிவு அப்புவிலடங்கி அப்பு தேயுவிலடங்கி தேயுவாயுவிலடங்கிவாயு ஆகாயத்திலடங்கி ஆகாயமாயையிலடங்கி மாயையென்னிலடங்கின வரன்முறையே என்னில் மாயையுண்டாய் மாயையிலாகாசாதிப் பஞ்சபூதமொன்றிலொன்றுண்டாவது) (எ)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

விலக்கலனையாய்பலங்களுடன்வேண்டல்வேண்டாமையைவிட்டுச்
சலங்கொளவினைகளவைசெய்வேனதனாலென்னையவைசாரா
வலண்டுதானேநூற்கநூலாற்கண்டுலந்தாற்போல்
பலங்கனினைவாரவற்றாலேகட்டுண்டாங்கேபடருழப்பார்

(இ-ள்) மலையொப்பான அருச்சுனா, பிரயோசனங்களுடனே விருப்பு வெறுப்பைவிட்டு அழிக்கப்படாத வைரங்கொண்ட சிருஷ்டியாதி கருமங்களைச்செய்யவேண்டிப் பிரயோசனத்தில் விருப்புவெருப்பில்லாததினாலே அந்தச்சிருஷ்டியாதிகருமங்கள் என்னைச்சேராவாம் உலண்டுஎன்றுபெயரையுடைய கொம்புப்புழுவானதுதானே நூலையுண்டாக்கியந்தநூலாலே எந்தக்காலத்திலும எந்தவுபாதிக்கும் அழியாதகூடுகட்டவேணுமென்றுதன்னையுளளாக்கிககட்டித்தான அந்தக்கூட்டுக்குள்ளே கட்டுண்டுவெளியிலேவர வழியில்லாமல அந்தக்கூட்டுக்குள்ளே செத்தாற்போலப் பிரயோசனத்தை யிச்சையாகநினைத்துக்கருமங்களைச்செய்தவர்கள், அந்தக்கருமபலத்தாலே கட்டுண்டு அந்தக்கருமத்திலே தானேதுக்கப்பட்டுழலுவார்கள்-எ-று, (அ)

கலிவிருத்தம்.

ஊர்வனநிற்பவாகவுலகையுண்டாக்குமென்னை
யோர்வுறவறியாதேயோர்மகனெனவிகழ்நிற்பா
வேரெனநெஞ்சத்தாசைவினைகளைமிடையச்செய்வா
ராரெனிலவர்கடாமுமரக்கரோடசுரரானார்

(இ-ள்) ஊர்வதாகிய-சரமும், நிற்பனவாகியஅசரமும்,இந்தச்சராசரரூபமாகச் சகத்தையுண்டாக்கப்பட்டவென்னை மனதிற்கிசையும்படியாக சகலத்துக்குங் காத்தனென்றறியாமலே ஒருமனிதனென்று அவமானம் பண்ணுவார்கள் மனதிலே வேர்விழுந்ததுபோல எழும்பின ஆசையினாலே கருமங்களை மிகுந்துசெய்வார்கள் அவர்களாரென்னில் ராக்ஷதருடனே அசுரரும் ஒப்பானவர்கள்-எ-று. (கூ)

அறிவினாலென்னையேயாக வறிந்துகொண்டமையியாலே
பொறிவழியடைத்தெப்போது மென்னையேபோற்றிசெய்து
நெறியினால்வழுத்திவாயா லென்னையேநினைந்துநெஞ்சாற்
செறிதருமவரேகண்டாய் தேவரிறறெரியப்பட்டார்

(இ-ள்) அறிவினாலேயென்னையேகர்த்தனாக அறிந்துகொண்டுஅடங்கின சுபாவத்தினாலே யிந்திரியங்களபோகிற விஷய வழியையடைந்து எப்போதும் என்னையே ஆசைபண்ணிப் பத்திமார்க்கத்தினாலேவாயினாலே கீர்த்தனம்பண்ணி வேறொருவனையும் வேறொன்றையும் நினையாத மனதினாலே யென்னையேநினைந்து கொண்டிருக்கிறகனமானவர்களேகண்டாயருச்சுனா தேவர்களைப்போலே தெரியப்பட்டவர்கள்-எ-று 0 (மனதொன்றைநினைந்துவாக்கு வேறொன்றைசொல்லித்தேகம் மூன்லிரண்டு மல்லாதனதைச் செயகின்றது தேசசுபாவமாகையால் என்னையேயறிந்து என்னையே போற்றிசெய்து என்னையே வழுத்தி என்னையேநினைந்துஎன்றுந் திடப்படுவதற்காக என்னையேயென்றுந்திரிகரணத்துக்கும புத்திதிடப்படச் சொன்னார்தேவரீர் தெரியப்பட்டாரென்றதனால் தேவர்களைப்போலத் தெரியப்பட்டார்களென்பது இதனால் முன்பாட்டில் அரக்கரோடசுரராறைதற்கும் அவர்களைப்போலானவர்களென்பது தேவரசுரர்களைச் சொன்னதேதுகவெனில் தன்னை அறிந்ததற்கும் அறியாததற்குந் திஷ்டாந்திரஞ்சொன்னது இந்த திஷ்டாந்திரஞ் சகலசீவனுக்குஞ் சரியாகக்காட்டினது செறிதருமவர்களாவது கனமானவர்கள கனமானவர்களாவதுமகாத்மாக்கள்-செறிவுகனமானகையால்கசறிதிருமவர்களை மகாத்மாக்களென்றது மகாத்மாக்களென்பது வட்சொல்-கனவான்களென்பது தமிழ்.) (௰)

காலத்தானும்பொருளிடங்களானுங் கணித்தற்கரியவென்னை
ஞாலத்தார்கள்புகலரியஞானயோகங்களினாலே
கோலத்தால்வேறாகவுமெய்க் குறியாலொன்றாகவுங்கொண்டு
சாலத்தாழ்வாரவருடைய தன்மையினையான்சாற்றுவன்கேள்

(இ-ள்) காலத்தினாலும் பஞ்சபூதவிஷயங்களினாலும் ளவிடுதற்கரிதான என்னையுலகத்தி லுள்ளவர்களினாலே மாயாபதார்த்த பேதருப அடையாளங்களினாலே வேறுவேறான அனேகமாகவுஞ் சத்தியமான அடையாளத்தினாலே யொன்றாகவும் திடம்பண்ணிக்கொண்டுமெத்தவும் பூசைபண்ணி வணங்குவார்கள் அவர்கள் சுபாவத்தை நான்சொல்லுகிறேன்கேள் அருச்சுனா-எ-று * என்னை யனேகமாகவுமொன்றாகவுந் திடம்பண்ணிக்கொண்டு ஞானயோகத்தாலே பூசைபண்ணுகிறவர்களுடைய சுபாவத்தைச்[illegible]சொல்லுகிறேனென்று பொழிப்புரைசொல்வது.) (௰௧)

கலிவிருத்தம்.

வேதமொழிகேழ்விவிதி வேள்விபிதிரர்க்கே
ஈதலுறுவேள்வி யெரிநெய்சருவிவர்றாற்

காதல்புரிவோர்கள்புரி காரியமதெலலா
நாமுதலாயபொருளாயவையுநானே.

(இ-ள் வேதவாக்கியப்படி செய்கிறயாகம் இனத்தினஞ்செய்யவிதி த்த ஓமம் பிதுர்களுக்குக்கொடுக்கிற பிண்டதருப்பணயாகம் அக்கினி கெபபிண்டம இவைகளாலே ஆசையுடையவர்கள் செய்கிற காரியங் களெல்லாம் நானே சத்தமுதலாகிய விஷயப்பொருளாகியதும் நா னே-எ-று. * (சத்தமுதலாவது, சத்த பரிச ரூப ரச கெந்தம் (மஉ)

ஆயிவுலகங்களை யளிகதொளிவளர்க்குந்
தாயெனுடுதந்தையவர் தந்தைதலைகண்ணுன்
போயினைவினைப்பய னளித்தல்புரிவேனே
னேயுமறைநான்கினுட னேமெனுமெழுத்தியான்,

(இ-ள) விசாரிக்கில் உலகங்களைப்பெற்றுப் பிரகாசிக்க வளர்க்கப்ப ட்டதாயும் அவனுடனே தகப்பனும் அவர்களிருவருடைய தகப்பனு கிய பாட்டன்மாரும் அந்த இரண்டுபாட்டன் பாட்டன்மாருடையதக ப்பனமாராகிய முப்பாட்டன்மாரும் இப்படிப் பரம்பரையாகப் போக ப்பட்ட முதலகளும்நானே முன்செய்துமறந்துபோன கருமபலனை ம றவாமற்கொடுக்கிறதைச் செய்கிறவனும் நானே இசைபபபட்டநாலு வேதங்களும் நானே அந்தவேதங்களுடனே ஓமென்ற பிறணவயெழு த்தும்நானே எ-று. (மக)

கலிவிருத்தம்.

எல்லார்க்குங்கதியுநா னிருவினைப்பாசகனுநா
னெல்லார்கருக்கலைவனு னெப்பொருட்குஞ்சான்றுநா
னெல்லார்க முறைவிடநா னியார்க்குமிடர்தீர்ப்போனு
னெல்லார்க்குநலமோனு னெப்பொருட்கும்விததுநான்.

(இ-ள) எல்லாருக்கு மடைகிறகதியும்நானே புண்ணியபாவத்தை நடத்துகிறவனுமநானே எல்லாருக்கும்கர்த்தனும்நானே எல்லார்க்கு ந்துகக்கிரகிறவனும்நானே யெல்லாருக்கும் நல்லவனும்நானே எல் லாப்பொருளுக்கும் விதையும்நானே-எ-று. (மச)

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

தாங்கியபூமியெல்லா மிரவியின்றலத்தினின்று
வாங்குகி றமேனுமீண்டு மழைகளாய்க்கொடுக்கின்றேனு
மீங்குமெய்யுணரினுனே யாதலாவியதொன்றேனு
மாங்கருச்சனைசெய்கின்ற வென்னையேயரிச்சிக்கின்றார்.

(இ-ள்) பூமிதாங்கியநீரையெல்லாஞ் சூரியனிடத்தில்நின்று வாங் குகிறவனும் திரும்பி மழைகளாக்கொடுக்கிறவனும் மிப்பேர்துமெய்ப்

யாகவிசாரிக்கில் யானேயெல்லாமாகையால் என்னவாகிலும் ஒன்றை அங்கே பூசைபண்ணுகிறவர்கள என்னையே அருச்சனை பண்ணுகிறார் கள் என்றவாறு. (௰௫)

ஞானமாயொன்றாய்நின்ற வென்னையோநானுவாகப்
போனதிவினையின்மாந்தர் வேழ்வியாற்பூசித்ததால்
வானமாமுலகமேறி வாழ்ந்துமண்ணிடையேவீழ்ந்திட்
டூனமாமாசையாலே யிறப்பதுபிறப்பதாவார்.

(இ-ள்) ஞானமாகி யொன்றாகிச் சலியாமல்நின்ற வென்னைத்தானே ஈனமான ஆசையினாலே அஞ்ஞானசொரூபமாய்ப் பலவாகச்சலனமுற நாள தேவர்களாகப்பாவித்து அந்தக் தேவபோகத்துக்கு இச்சைபட்டு அந்தந்தக் தேவதாபிரீதியாகச்செய்த யாகங்களினாலும் பூசைகளினாலும் பாவங்களைப்போக்கின மனிதர் தேவலோகத்திலேறிப் புண்ணியந்தீருமட்டும் திவ்வியபோகத்தை யனுபவித்துப் பிறகுமண்ணிடமாகவிழுந்து சாகிறதும் பிறக்கிறதுமாகத் தேவலோகத்துக்கும் பூலோகததுக்கும் போக்குவருத்தாய் திரிவார்கள்-எ-று. () (ஞானமாயொன்றாய் நின்றவென்னையே ஊனமா மிச்சையாலே நானுவாகவேழ்வியாற் பூசித்தாற்போன தீவினையின்மாந்தர் வானமாமுலகமேறிவாழ்ந்து மண்ணிடையே வீழ்ந்திட, பிறப்பது பிறப்பதாவரெனமாறுக நானுவாகவென்றவிடத்திற் செய்தவன்வருவிக்க) (௰௬)

மின்னையேயனையவேலா மேவுவார்வேண்டிற்றெல்லாம்
பின்னையேயென்னுதன்றே யளிக்கவர்க்காப்பன்வானோர்
மன்னையேமுதலாந்தெய்வம் வணங்குகின்றாருமற்றென்
றன்னையேவணங்குகின்றார் தாமறியாதசேகாண்.

(இ-ள்) மின்னையொப்பாகபிரகாசிக்கும் வேலையுடைய அருச்சுனா அன்னியசிந்தையில்லாமல் என்னைக்கூடுகின்றவர்களுக்கு வேண்டியதெல்லாம் பிறகுகொடுக்கிறேனென்னாமல் அப்போதேகொடுத்து அவர்களைக காத்துக்கொள்ளுவேன் தேவர்களுக்கிராசாவான இந்திரனை முதலானதெய்வங்களை வணங்குகின்றவர்களுக்கும் நான் அந்தந்தத தேவரூபமானதினாலே என்னையே வணங்குகின்றார்கள அது அவர்கள் என்னை அறியாமற்செய்ததல்லால் அறிந்துசெய்த தல்லகண்டாய்-எ-று. (௰௭)

தேவரையடைந்தார்தேவ ராவர்கள்பிதிரர்தம்மை
மேவரவடைந்தாரந்தப் பிதிரராய்விளங்காநிற்ப
ரீவரவர்களியாவர்பாலா ரவர்களேயாவரொன்று
லாவவென்னடைந்தாரியானே யாவதற்கையமுண்டோ

(இ-ள்) தேவர்களையடைந்தவர்கள் தேவர்களாவார்கள்-பிதிர்களை மனதுபொருந்தி வரும்படியடைந்தவர்கள, அந்தப்பிதிர்களாய் விளங்கிநிற்பார்கள் யாராலும் யாரிடமாக அடைந்தார்களோ அவர்களேயாவ

சென்றால் என்னையடைந்தவர்கள் நானேயாகிறதற்கு ஆ ஆ சந்தேகமு ண்டோ இல்லை-எ-று. () (ஆ ஆ வென்றது இழிவானவரானேயடைந்த வர்களுமவர்களே யாவராகில் மேலானவென்னையடைந்தவர்கள் நானு கிறதற்குச் சந்தேகமுண்டோ ஆ ஆ இதுவென்னஆச்சரியம்நான்தே வர்களிலு மின்னேனென்று காட்டின் ஆச்சரியக்குறிப்பு) (மஅ)

போதிலைகனிகாய்நீரே பெற்றவைகொண்டுபோற்றிக்
காதலாற்றூயவன்யாற் றந்தவைகளித்துக்கொள்வே
னுதலாலீவனேற்ப வுண்பமற்றவைகளேகொண்
டதலாமெனக்காய்தந்தா லென்னையேயெய்தலாமால்.

(இ-ள்) பத்தியினாலே சுத்தமான அன்புடையவர்கள் பூ இலை பழ ங்காய் சலம் இவைகளிலே கிடைத்தவைக்கொண்டு என்னைப் பூசைப ண்ணிக்கொடுத்தவையே மிகுந்த சந்தோஷமாக அங்கீகரிப்பேன் ஆ கையால் கொடுக்கின்றது விரதம்நோக்கிறது போசிக்கிறது மற்றுமுள் ளவைக்கொண்டு இவையெல்லாம் எனக்காகக்கொடுத்தாலென்னையே யடையலாம் அன்னியகெதிவாராது-எ-று (மகூ)

எப்பொருடனக்குமியானேத் திருத்தலாலெனக்கியாரு
மொப்பவரினியரின்னா தாரொவ்வொருவரில்லை
இப்படியறியுமன்பர் பக்கலேயானுநிற்ப
னப்படியவருமென்பா லங்ஙனேயமர்ந்துநிற்பார்

(இ-ள்) எந்தப்பொருள்களுக்கும் நான் சும்மா யிருக்கிறதினாலே எ னக்கு ஒப்பானவர்களும் பிரியமானவர்களும் விரோதமானவர்களும் யாரொருவருமில்லை இப்படியறியப்பட்ட அன்பரிடத்திலேநானும்நிற் பேன் அந்த அன்பர்களும அப்படியே என்னிடத்தில அமர்ந்து அங் கே நிற்பார்கள வேறுபடார்கள்-எ-று, (உய)

ஊனையேமுதலாவென்பா லூக்கியவுணர்வோர்நாளு
நானையேவிட்டுத்தீமை புரியினுமவர்களல்லோ
ரேனையேயுயத்தாயென்றுங் கேடிலாவின்பமல்லா
தானையேயொருகேடில்லை யவர்களுக்கெங்குமென்றும்.

(இ-ள்) உண்பதுவேமுதலாக உள்ளவெல்லாமென்னிடமாக செலு த்தின அறிவுடையவர்கள தினந்தினமும் லச்சையைவிட்டுப் பொல் லாங்குசெய்தாலும் அவர்கள நல்லவர்களே எக்காலமுங்கெடாதநிலை யுடைய மகிமையும் அழகுமுள்ள தோளையுடைய அருச்சுனா அவர்க ளுக்கு என்றைக்குங் கேடில்லாத சுகமேயல்லாமல் ஆணைப்படிக்கு எ ங்கேயாகிலும் என்றைக்காகிலும் ஒருகேடுமில்லை எ-று. () (எனக்கு ச்செலுத்தாதமூடருக்கு என்றைக்கும் எங்கும் ஆணைப்படிக்குக் கே டுண்டென்பது அருத்தாபத்தி, (உக)

வணிகருமற்றைவேளாண் மாந்தருமகளிர்தாமும்
பணிவொடுமென்னைப்பேணிற் பற்றறுத்திடுவரொன்று
மணிமுடியரசர்மேன்மை யந்தணரடைவராகிற்
றணிவரும்பிறவிதிரச சாற்றவேணடுவதுமுண்டோ

(இ-ள்) மற்ற வைசியருஞ் சூத்திரரும் பெண்டுகளும் இவர்கள்வ ணக்கத்துடனும் அன்புடனும் என்னையாசரித்தாற் கருமபந்தத்தை யறுத்து மேலானகதியை யடைவார்களென்றால் அழகிய கிரீடந்தரி த்த ராசாக்கள் எல்லாருக்குமேலான சாதியுடைய பிராமணர்கள்இவ ர்கள்என்னை யடைவராகில் அவர்களுக்கு யாகாதி மகாதானாதி விர தாதி முதலான புணணியங்களினாலே அரிதானபிறவி தீருகின்றதற் குச் சொல்லவேண்டுவது முண்டோ இல்லை நிச்சயமாகப் பிறவிதீ ரும்-எ-று. (உ௨)

மின்னையேயனையவாள்வி னிற்றனிவிருப்பிரேடு
மென்னையேவணங்கியெ ன்று மென்னையேயிசைவாயாகி
லென்னையேயடைதியிதென் றியம்பினனிலங்குவாட்கட்
பின்னையேமுறுவலோடும் பேய்முலையுண்டபெம்மான்

(இ-ள்) ஆகையாலருச்சுன மின்னைபொப்பான அநித்திய வாழ் விலே யதாநிலையென்று நின்ற நீ இதைமறந்து என்னிடத்தில் ஆசை யுடனும் பத்தியுடனும் என்றைக்குமென்னையே பூசைபண்ணி வண ங்கி என்னையே பரமகதியென்று உன்மனதுக்கு இசைந் திருந்தாயா னால்என்னையேயடைவாய் இதுநிச்சயமென்றுசொன்னார் பிரகாசிக் கின்ற வாளையொப்பான கண்களையுடைய மகாலட்சுமிதேவியின் நா யகனான அழகிய புன்சிரிப்புடனுங்கூடப் பூதகியென்னும் பெயரை யுடைய பேயினுடைய முலையையுண்ட கருத்தனான ஸ்ரீகிருஷ்ண சுவாமி-எ-று. (உ௩)



௯ வது மாயாவிகார அத்தியாயம்.

முற்றுப்பெற்றது,

ஆக அத்தியாயம்-௯-க்கு கூடியசெய்யுள்-உ௬அ.

(*)

உ

பத்தாவது.

# விபூதிவிஸ்தாரயோக அத்தியாயம்.

(*)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அரியவெனதுநிலைமையைமுன் பலவேசொன்னேனதுகேட்டே
யுரியமன்னிற்களிகூர வொவ்வாநின்றவுனக்கதனை
விரியமொழிவன்கேளென்றுவேதத்தலையின்விற்றிருக்குங்
கரியமுகிறன் செவ்வாயாற் காதல்கூறக்கட்டுரைப்பான்

(இ-ள்) யாராகிலும் அறிய அரிதான என்னுடைய சத்தியமான உண்மையை முன்பு பிரமாணமாய்ச்சொன்னேன் அந்தப்பிரமாணத்தைக்கேட்டே யுனக்குரித்தான மனதிலே களிப்புச்சிறப்பாகச் சந்தோஷப்படாநின்ற உனக்கு அந்தப் பிரமாணத்தைப் பிரத்தியட்சமாக விஸ்தாரமாகச்சொல்லுகிறேன் கேள் அருச்சுனாவென்றுவேதச்சிரசிலே யிறுமாந்திருக்கப்பட்ட கரியமேகத்தை யொப்பான திருமேனியையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமி தம்முடைய சிவந்ததிருவாயினாலே அருச்சுனனுக்கு அன்புமிகுதியாகச்சொல்லுவார்-எ-று. (க)

தேவரொடுமுனிவரர்கள் சித்தர்வித்தியாதரர்கள்
யாவர்களுமறியாவென் பெருமையைமுன்பழமையினாற்
சாவதும்பிறப்புமில்லாவென்னையறியத்தகுவாரேற்
பாவவினையறவிட்டுப் பரகதியதடைகிற்பார்

(இ-ள்) தேவர்கள் அவர்களுடனே மகாமுனிகள் சித்தர் வித்தியாதரர் இவர்கள்முதல் எல்லாரும் என்னுடைய பெருமையை யறியார்கள் அது அவர்களுக்கெல்லாம் நான் ஆதியாய் அநாதியானதினாலே யாருமறியார்கள் செனனமரணமு மில்லாத வென்னை யின்னனென்றறியத்தக்கவர்களாகி லவர்கள் பாவகருமங்களை யறத்தக்கதாக விட்டுப் பரகதியையடைய மாட்டுவார்கள்-எ-று. (உ)

புத்திபொறைதவஞானம் புகழ்பழிதீர்கொலைதெளிவு
சத்தியநற்சமைதைவரி தவிர்தானஞ்சாவுபிறப்
பத்திகொடுங்குறைவின்ப மிடரஞ்சலஞ்சாமை
பித்தனையுந்தோன்றுவதென் னிடைநின்றேயெனத்தெளிவாய்

(இ-ள்) புத்தி பொருமை தவசு ஞானம் கீர்த்தி அபகீர்த்திசொல்லு கிறதற்கரிய தெளிவு சத்தியம் நல்ல சமைதி இந்திரிய நிக்கிரகமுத லான விரதம் தானஞ் சாவு பிறப்பு ஆசை கொடுமை நிறைவு சுகந் துக்கம் பயப்படுதல் பயப்படாமை இத்தனையு மென்னிடத்தில் நின்றேயுண்டான வொன்றுதெளிவா-எ-று. (வேறொருவிட முண்டென்று மயங்காதேயென்ற கருத்தாபத்தி.) (௫)

கலிவிருத்தம்.

இனைத்துவிதித்த தத்தெழுவோரும்
அனைத்தைபுரிமப நடப்பனவாக
அனைத்துமனுக்கள்பன் னால்வருமற்றென்
நினைப்பிலுதித்தன ரென்பதுபோவாய்

(இ-ள்) அதுதவிரச் சகலத்தையும் நிற்கிறது நடக்கிறதாகிய சராசரங்களை மனதிலே கூட்டங்கூட்டமாகச் சிருஷ்டித்த தவசையுடைய சத்தரிஷிகளும் இவைகளையரசாண்டபதினாலுமனுக்களும் என்னுடைய நினைப்பிலே பிறந்தார்களென்று உன்மனதிலே திடமாகச்சமமதிப்பா யருச்சுனு-எ-று, (௬)

இப்பரிசென்னை யறிந்ததர்தன்பால்
வைப்பாகள்சிந்தையை மன்னுயிரோடு
மப்பரிசேயறி வாரையுமங்கே
யுயப்பருரைப்பார்க ளிப்பருவப்பார்,

(இ-ள்) இந்தப்படி சகலதுக்கங் காரணமாகச் சகலமு மென்னிடத்தில் நானேவர்த்திக்கிறதாக என்னை நன்றாயறிந்தவர்கள் தங்களுடைய சிவனோடுங்கூட மனதையென்னிடத்தில்வைப்பார்களஎல்லோரும் பேசுவார்கள் ஆனந்தமடைவார்கள் சந்தோஷிப்பார்கள்-எ-று, (௭)

நிரந்தரமிப்பரி சென்னைநினைப்பார்க்
கரந்தைகெடுத்தென யாயுமனத்தைப்
புரந்துகொடுத்தவர் தேர்பொருளாயே
வரங்களுமுற்ற வளித்தவரத்தால்,

(இ-ள்) இந்தப்படி நிரந்தரம் என்னை நினைக்கிறவர்களுக்குத் துன்பத்தைப்போக்கிக் காத்து என்னைவிசாரிக்கிற மனதைக்கொடுத்து அந்தமனதாலே விசாரிக்கிற வஸ்துவாகிய பிரசன்னமாய்வந்து முன் கொடுத்தது மல்லாமற் பின்பு வரங்களுங்குறையாமற் கொடுத்து அந்த வரத்தினாலே எ-று, (௮)

ஸ்தாரவதுளக்தவஸ்து விதையானாலும் அந்தவிதை அந்தவஸ்துவா கமுளைக்கிறதல்லாமல் ஒருவஸ்துவினுடைய விதை வேறொருவஸ்து வாகமுளையாதுஒருவஸ்துவிதைஅனேகம் வஸ்துவாகமுளையாது அந்தந்தவிதையந்தந்தவஸ்துவாக வருகிற தாகையால நீஅனேகபேத வஸ்துவாக முளைக்கிற ஒரேவிதையென்றது எல்லாபொருளுக்கும் ஈசனுவதுசகலதத்துவகளுக்குஞ் சுவாமியென்றது.) (௬௬)

கொச்சகக்கலிப்பா,

மெய்வகையிவ்வுலகிடைநீவேறுவேறாய்நிற்ப
தெய்வகையெவ்வுருச்சார்ந்தெனவேதுமறிகிலே
னவ்வகையேயொருபொருளுமொழியாமலடியேனுக்
குய்வகையாசெறியாகவுரைத்தருளெப்பொருமைபயான்

(இ-ள்) இந்தப் பிரபஞ்சத்தினிடத்தில மெய்யாக வேறுவேறான பேதமாகநீ நிற்கிறதெந்தவிதம் எந்தரூபமடைந்தது என்றுநானொன்றுமறியேன் நீயெந்தரூபமானுயோ எந்தெந்தப்பேதவஸ்துவாக நின்றாயோ அந்தப்படியேஒருவஸ்துவும்விடாமல அடியேனுக்குப் பிழைக்கிறவிதமான மார்க்கமாகத் திருவாய்மலர்ந்தருள வேணுமென்று சொல்லுவான்-எ-று, (௬௭)

கலிவிருத்தம்,

பருகாவின்றேர்க்குனதுதிருவாக்காகின்றபாலமுத
மொருகாலமுமார்க்கின்றதிலேயின்னமடியேற்குரையென்ன
வருகாலஞ்செல்காலநிகழ்காலமென்றமூன்றமறிற
பெருகாகுறையாதவனுகும்பெருமாயனுரன்பேசுவான்

(இ-ள்) இந்தப் பாட்டைப் பருகாநின்றோராக குனதுவாக்காய்பால முதமொருகாலுமார்க்கின்றதில்லையா உரையென்ன வருகாலஞ்செல் காலங்கழிகாலமென்று மிவற்றிறபெருகாதசிறுகாத பெருமாயன்பே சுவனெனபது பாடமோதுவாருளர் என்றது உமமுடையதிருவாக்கி னுலருளிச்செய்கின்ற திருவார்த்தையாகிய பாலமிர்தத்தைக் காதிரண்டாகிய வாயினலே குடிக்கிற எனக்கு ஒருகாலமுங்குறைாதுதிருத்தியாகியதில்லை யாகையால இன்னமும் அடியேனுக்கு அருளிச்செய்யுமென்றுசொல்லஇனிமேல் வருககாலமிப்போது நடக்கிறகாலம்முன்போனகாலமென்று சொல்லப்பட்ட இந்தமூன்று காலத்திலுமபெருகாதசிறுகாத சமமானவிருக்கின்ற பெருமையுள்ள ஸ்ரீகிருஷ்ண சுவாமிசொல்லுவார்-எ-று () (பாட்டிரண்டுபேதமானாலும் உரையொன்றேயல்லாமற் பேதமில்லை ) (௬௮)

கலிவிருத்தம்.

இறந்தவெவ்விபூதிக்கோரெல்லையின்மையிற்
பிறந்தனமுடிவுறப்பேசவொன்றுமே

வறந்தரும்மனத்தினய்வற்றிலேசில
சிறந்தன கூறுவனென்றுசெப்புவான்

(இ-ள்) சொல்லும்பொருளுமிறந்த என்னுடைய ஐசுவரியத்துக்கும் ஒருபிரமாணமில்லாத படியினாலே என்னிடத்திலுண்டானஐசுவரியத்தை முடியுமட்டுஞ் சொல்லக்கூடுமோ கூடாது ஆகையாலே கருமததானுண்டான மனதையுடைய அருச்சுனா அந்த ஐசுவரியத்தினாலேசிலஐசுவரியஞ் சிறப்பாயிருக்கிறதை சொல்லுவேன் கேளென்றுசொல்லுவார்-எ-று * (கூடாதாவது, கேட்கின்றவனுக்கு காலகொஞசமானதினாலே இந்தக்காலத்துக்குள்ளே சொல்லிமுடியாதென்பது (௰௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஓதிற்பெருகும் பூதங்கட்கெல்லாமிதயத்துள்ளவனான
பேதித்தவிப்பொருட்கெல்லாமிறப்புநிலைகேடாவேனு
னாதித்தியரில்விஷ்ணுநான்மருத்தேவர்களில்மரீசிநான்
சோதிக்கதிரிரவியனுசுவென்றுசொல்லப்படுவேனான்

(இ-ள்) என்னுடைய ஐசுவரியத்தைச் சொல்லில் அளவற்ற அச்சுப்பேதங்களாகப் பெருகப்பட்ட சகலபூதசீவராசிகளுக்கெல்லாமிருதயத்திலிருக்கின்றவன் நான் அனேகபேதமாகப்பட்டஇந்தச்சீவன்களுக்கெல்லாம் பிறப்பும் நிலைமையும் நாசமுமாகின்றவனான ஆதித்தரில்விஷ்ணுநான் வாய்வுதேவரில்மரீசுநான் பிரகாசமுள்ள சோதிகளிற் சூரியனென்றுசொல்லப்பட்டவனான்-எ-று. (௰௩)

கலிநிலைத்துறை

சந்திரனுனை மீனிற்சாமமானுமறையி
னிந்திரனுன்தேவர்களிந்திரியங்களின்மனநா
னேந்திரமாமுருவுகளிற்சேதனநானுருத்திரரின்
மந்திரிமாஞ்சங்கரனனிபக்கரில்லேவைச்சிரவனான்

(இ-ள்) நக்ஷத்திரங்களிற் சந்திரனை நாலுவேதங்களிற் சாமவேதம்நான் தேவர்களிலிந்திரனன் இந்திரியங்களில்மனதுநான் பிறந்திருந்துசுழலும் பட்டருபங்களில் அறிவுநான் ருத்திரரில் மந்திரியான சங்கரனுள் இயக்கரிறகுபேரனுன்-எ-று. (௰௪)

மலைகளின்மாமேருநான் வசுக்களிற்பாவகனுன்போர்த்
தலைவர்களிலறுமுகனுன் சலநிலையிற்சாகரனு
னிலையமிலாயாகத்திற் செய்யாகயாவேனு
னில்லுடையவெனுமவற்றி லிமவானுப்பிற்பேன்.

(இ-ள்) மலைகளில் மஹாமேருநான் - வசுக்களிலே பாவகவசுநான்-சேனாபதிகளிற் சுப்பிரமணியனான்-தண்ணீர்நிற்கிறவிடங்களிற் சமுத்திரம்நான் - அழிவில்லாத யாகத்திற்செய் யாகமாகின்றவனான்-நிலையாய்நிற்கிற தாபரங்களிலும் பந்தமாகநிற்கின்றவனான்-எ-று. (௰௫)

பெருமுனியிற்பிருகுநான் புரோகிதரிற்பீதகனான்
மருவியவாக்கந்தோன்நான் மரங்களிலச்சுவந்தநான்
பொருவரியநாரதனான் புத்தேண்மாமுனிவரிற்
றிருவியல்கந்திருவர்களிற் சித்திரத்தேரவனுநான்.

(இ-ள்) மஹாரிஷிகளிற் பிருகுமுனிநான்-புரோகிதரிற் பிரகஸ்பதிநான் சகலத்திலுங்கலந்த வசனங்களில் ஓம் நான்-மரங்களில் அரசுநான்-தேவமஹாரிஷிகளில் ஒப்பில்லாத நாரதமுனிநான் -அழகிசைந் தகந்தருவர்களிற் சித்திரரதனான்-எ-று. (௰௬)

சித்தர்களிற்கபிலமுனி திரைகடலிலேசெனித்த
வுத்தமமாங்குதிரையினை யானென்றேயுணர்கணடா
யத்தமுடைவிலங்குகளின் யானையிராவதமாவேன்
வித்தகமானிடப்பிறப்பில் வேல்வேந்தராவேனான்.

(இ-ள்) சித்தர்களில் கபிலமுனிநான்-குதிரைகளில் அலையையுடையதிருப்பாற்கடலிலே பிறந்த உத்தமமான உச்சைசிரவமென்று பெயரையுடைய குதிரைநானென்றே யறியகண்டாயருச்சுனா, கையையுடைய மிருகமானயானைகளில் அயிராவதமாகின்றவனான், திறமையுள்ள மனிதப்பிறப்பிலே வேலையுடையராசாவாகிறவனான்-எ-று. ()

கலிவிருத்தம்.

படைகளில்வச்சிரம் பாம்பில்வாசுகி
கடைதருமனந்த னாகர்தங்களிற்
கொடையயில்சுரபிகோ குலத்திற்கூறிய
வடைவொடுமிவையெலாம் யானென்றேயறி

(இ-ள்) ஆயுதங்களில் வச்சிரம்நான், பாம்பில் வாசுகிநான், நாகங்களிலே கடைகப்பட்ட ஆதிசேஷன் நான், பசுக்களிற் கொடுக்கின்ற கொடைபொருந்திய காமதேனுநான், என்றேயறியருச்சுனா-எ-று. () (கூறியவடைவோடும் இவையெலலாம் யானென்றவற்றிற்கு உரையே யுள்ளேகாண்க.) (௰௮)

வருணனுமியமனு மலைவிலாளியும்
பெருமைசெய்யசுரரிற் பிரகலாதனு
மிருமையிலெண்ணுவா ரெண்ணும்யானெனச்
செருமலிதோளினாய் தெளியத்தேறுவாய்

(இ-ள்) ஜலவாசிகளில் வருணனும், தெண்டிக்கிறவர்களி லியமனும், கொல்லுகிறவர்களில மகாமேருவைவில்லாகவுடைய சிவனும், உலகத்தார பெருமைசெய்யப்பட்ட அசுரர்களில் பிரகலாதனும, இம்மை மறுமை இரண்டிலும் எண்ணுகின்றவர்களுடைய இலக்கமும் நானென்று தெளியத்தக்கதாக நன்றாகத்தேறுவாய சண்டைமிகுந்து செய்யப்பட்ட தோளையுடைய அருச்சுனா-எ-று. (௧௯)

பொராவருகருடன்யான் புள்ளினமாக்களில்
விராவருமடங்கலுன் வாயுவேகனா
னிராமனுமெறிபடை வீரர்தங்களிற்
கராவுநான்மீன்களி லாற்றிற்கங்கைநான்.

(இ-ள்) பட்சிகளில் ஒப்பில்லாத கருடன் நான், மிருகங்களிற்கிட்டப்போகக்கூடாத சிங்கம்நான், வேகத்தில் வாயுவேகமநான் வீசப்பட்ட ஆயுதவீரர்களில் ஸ்ரீராமன்நான், மீன்களில முதலைநான், நதிகளிலே கங்காநதிநான் எ-று. (௨௰)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

மிக்கசொற்றொகையனைத்துநா னரியவிச்சையிற்பிரமவிச்சைநா
னச்சரங்களிலகாரநா னழிவில்காலநானதுவுமன்றியே
கக்கதொந்தவசபாசநா னிருவினைப்பயன்கட்ருவோனுநா (நான்
றுககமன்னுயிர்களைக் கொல்வோனு மவையுறபவஞ்செய்திடுவோனு

(இ-ள்) மிகுந்தசொல்லுடைய தொகையெல்லாம்நான், வித்தையிற் பிரமவித்தைநான், அட்சரங்களில அகரமநான, காலங்களில அழிவில்லாதகாலமான அட்சயகாலமநான், அதுவுமல்லாமல் மயக்கங்களிலே தந்துமான தொந்தமுள்ள வசப்பட்ட பாசம்நான், புண்ணியபாபத்தினுடைய பலன்களைத்தருகின்றவனும்நான், நிலைமையான சீவன்களை நிலைமைகெடக்கொல்லுகிறவனும அந்தச்சீவர்களைப் பிறக்கச்செய்கிறவனுமநான்-எ-று. (௨௧)

பெண்களிற்புகழ்திருச் சொன்மேதைபொறை திண்மையேசுமறமென்னவே, யெண்பகுத்தவெழுவோரு நானிதுவாறில்வந்த விளவேனிலியா, னண்பனற்பெரியசாமபனுவரிய சாமயேழினுநலத்தின் மண்களிற்பெரியதிங்களிற்புகழ நின்றமார்கழியுமறறுநான்.

(இ-ள்) பெண்களிலேகீர்த்தி லட்சுமி, வாக்கு தெளிவு பொறுமை திடசித்தம எல்லாருஞசொல்லப்பட்ட தருமம் இப்படியென்று எண்ணப்பட்ட வகுப்புள்ள ஏழுபேரும் நான், ஆறிருதுவில்வந்தவசந்தருதுநான், சாமவேதத்திலுள்ள ஏழு உபநிஷதத்திலே சாந்தோக்கியஉபநிஷதநான், பூமியில் பெருமையுள்ள மாதங்களிலே நன்மையினாலே மார்கழிமாதமும மற்றமாதங்களும் நான் ஏ-று. (௨௨)

கலிவிருத்தம்,

கல்லாருந்தோளினய் கலிகளிற்காயத்திரிநான்
றொல்லாயங்களிற்சூது துணிவோர்பாற்றுணிவுநான்
வெல்லவார்பால்வென்றிநான் மிகுதிறலோர்பாற்றிறனு
நல்லான்பாலன்மைநான் ஞானிகள் பான்ஞானமுநான்

(இ-ள்) மலையையொப்பான தோளையுடைய அருச்சுன கலிகளிலே காயத்திரிநான் பழைய ஆதாயங்களிற் சூதுநான் துணிபிறவர்களிடத்திலே துணிவுநான் செயிக்கின்றவர்களிடத்திலே செயமநான். மிகுந்த திறமையுடையவர்களிடத்தில் திறமைநான் நல்லவர்களிடத்தில்நன்மைநான் ஞானிகளிடத்தில ஞானம்நான்-எ-று. ()

கண்ணனானியாதவரிற் கவிகளில்லைத்துவசனன்
றண்ணளிசேர்பாண்டவரிற் றனஞ்சயனுகின்றேனுன்
வணவவர்கோமுனிவரரில் வேதவியாசனுநானே
யெண்ணரியமறைவுகளி லியம்பரவையாவேனுன்

(இ-ள்) யாதவர்களில் ஸ்ரீகிருஷ்ணனும்நான் கவிகளிலேசுக்கிரன்.குளிர்ந்த தயவுசேர்ந்த (பாண்டவாகளில்) அருச்சுனனுகிறவனுன்;தேவரிஷிகளில் வேதவியாசனும்நான், எண்ணஅரிதான அளவற்றரகசியங்களிலே மௌனமாகின்றவனும்நான்-எ-று, (உச)

அறுசீரடி யாசிரியவிருத்தம்,

இரும்புவமனைத்திறுக்கும் வித்துநா னென்னைப்போக்கி லியாதுமில்லை, திருந்திறுமென்பெருமைக்கும்வரம்புரைக்கமுடியாமை வகுத்துச்சொன்னேன், பெருந்திருவையடையன மெயப்பெருமுயற்றியனவென்றுபேசுமிந்த, வரும்பொருள்க ளனைத்துமென் றொளினல் வருவனவென்றறிகநீயும்

(இ-ள்) பெரியபிரபஞ்சத்து ளெல்லாவற்றுக்கும் பீஜம்நான்,என்னைத்தவிர ஒன்றுமில்லை என்னுடையபெருமைக்கு எல்லைசொல்ல வருந்தித் தவசுயோகஞ்சாதித்தாலு முடியாததைத் தொகையாகக்கூட்டிச்சொன்னேன்(பெரியசிறப்பையுடைய நிச்சயமான பெரியமுயற்சியையுடையது) என்று சொல்லப்பட்ட இந்த அரியபொருளக ளெல்லாம் என்னுடைய பிரகாசத்தினலே பிறந்தனவென்று நீயறியக்கடவை என்றவாறு. * (நீயுமென்றது என்னைப்போலேநீயுமறியென்பது.) (உரு)

பலவினியுரைத்தேனிந்தப் பல்லுயிரனைத்துமெல்லா
வுலகுமுமொடுக்கிநிற்ப தென்னிலோரிடத்திறுள்ளே
கலைவலாயிவரோடென்றுன்கஞ்சனுருயிர்போய்ததஞ்ச
வலைகடல்வளராதேபோந் தாயர்பால்வளர்ந்தபெம்மான்

(இ-ள்) இப்படிப் பலநாளுஞ்சொல்லி என்னபிரயோசனமிந்தப்ப லசீவன்களுஞ் சகலப்ரபஞ்சமு மிந்தஅண்டைக்குவந்து நிற்கிறவர்களுடனே என்னிலுள்ளே யொருமிடத்திலொடுங்கியிருப்பது. சாஸ்திரவலைபமுள்ள அருச்சுனா, வென்று சொன்னார் கஞ்சனுடையசீவன் போய் அவன்சாகவேணடி ஆலையையுதைய திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருளாமற் பூமியிலேபோயிடையரிடத்தில் வளர்ந்தருளிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி என்றவாறு. * (இவரோடிங்குப்பல்லுயிரெனமாறுக.) (உக)



௰ வது விபூதிவிஸ்தாரயோக அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

ஆக அத்தியாயம் ௰க்கு கூடியசெய்யுள் உகூச.



உ

பதினோராவது.

## விசுவரூப அத்தியாயம்.



அறுசீரடியாசிரியவிருத்தம்.

சுருளார்கின்றதுழாய்முடியாய் சொல்லுமனமுந்தொடர்வரியா
யுருளார்சகடமிறவுதைத்தா யுயிர்கட்கெல்லாமுள்ளாயிரோ
யிருளார்பதத்தேகிந்துழைக்கு வென்பாலிரங்கிநீயிசைத்த
வருளாரமுதென்சேவிகளா லாரப்பருகியறவொழிந்தேன்

(இ-ள) அருச்சுனன் சொல்லுவது சுழியாகக்கொண்டை யிலமாங்கிருந்த திருத்துழாய்மாலே முடியையுடையவரோ சொல்லுமனதுந்தொடாஎட்டாதவரோ உருளமைந்தசகடாசுரனைச் சாகஉதைத்தவரோ சகல சீவன்களுக்கெல்லா முள்ளாகவிருக்கிற சீவனே அஞ்ஞானமென்னுமிருளையுடையபிறவியிலே கிடந்து உழைத்துக்கொள்ளப்பட்ட என்னிடத்திற் கிருபைசெய்தருளிநீர் உபதேசித்த கிருபைநிறைந்த அமுர்தத்தை என்னுடைய காதுகளாகிய வாய்நிறையக்குடித்துக்கிலேசந்தீர்ந்தேன்-என று. (க)

தெரியவகைநீயேயெங்கு மாகிநின்றதிருக்கோல்
மரியாமெய்யேயடியேற்குக் காணலாமோவெனவன்பாற்
பரியாநிறைந்தசிந்தையொடு பார்த்தன்வினவப்பழமறைதேர்
சூரியானவனுக்கப்படியே காட்டவேண்டிக்கட்டுரைப்பான்

(இ-ள்) கிடைத்தற்கரிதானசுவாமி யாருக்குந்தெரியாதபடி எங்கும் பரிபூரணமாகி நீயேநின்ற திருக்கோலத்தை மெய்யாக அடியேன்பார்க்கலாமாவென்று அன்பினாலேயுருக்கப்பட்ட மனதுடனே அருச்சுனன்கேட்க அவனுக்கு அந்தப்படியே காட்டவேண்டி பழையவேதங்கள் தேடப்பட்ட பிரபஞ்சசாக்ஷியான ஸ்ரீகிருஷ்ணசுவாமி சொல்லுவாரென்றவாறு. (உ)

கலிவிருத்தம்.

எண்ணினியற்கைய தென்னினிறைந்தது
பண்ணியொருத்த படைத்தரியாதது
விண்ணினியற்கை சுருங்கவிரிந்தது
கண்ணினளப்பரி தாயதுகாணாய்

(இ-ள்) இலக்கத்தினுடைய சுபாவத்தினாலே எண்ணிலக்கண மிறந்து அப்பாற்பட்டது ஒருத்தர்பண்ணிப்படைக்கரியாதது பிருதிவி அப்பு தேயு வாயு வென்னு நாலுபூதங்களையுமடக்கின ஆகாயத்தினுடைய சுபாவமானவிஸ்தாரமானதுகொஞ்சமாய்ச் சுருங்கத் தக்கதாக விஸ்தாரமானது கண்ணாலே பார்த்து அளவிட அரிதானது இப்படிக்கொத்ததிவ்வியசொரூபத்தைப்பார்ப்பாய் எ-று. (ஙு)

மருத்துவர்சூரிய ரட்டவசுக்க
ளுருத்திரரென்னிடையேயுளரியாரு
மருத்திசெய்யற்புத மாயவனேகங்
கருத்துறவென்னிடை யேயுளகாணாய்

(இ-ள்) அசுவனிதேவர்கள் சூரிய ரஷ்டவசுக்களுருத்திரரிவர்கள்முதலானசரசீவன்கள் என்னிடத்திலிருக்கிறார்களெல்லாருமனதுடனிருந்தஅன்புசெய்யப்பட்ட ஆச்சரியமான அனேகமாகிய அசரசீவன்களை என்னிடத்திலே யிருக்கின்றன கண்டாயருச்சுனா-எ-று, (சு)

என்றருளிச்செய்தவன் கணிரண்டு
நன்றறிகிறகென ஞானமளித்திட
டன்றவனுக் கருள்செய்வகையாயே
நின்றவருக் கறியாவகைநின்றான்

(இ-ள்) இப்படிச் சராசரங்களும் என்னிடத்திலே யிருக்கின்றனவையென அருளிச்செய்த அந்த அருச்சுனனுடைய கண்களிரண்டுமகன்றாகப்பார்த்தரியமாட்டாதென்றும ஞானக்கண்களைக்கொடுத்து அப்போது அந்த அருச்சுனனுக்கு அருளிச்செய்தபடியே சொரூபமாக அரு

ச்சுனனல்லாமல்நின்ற(பாண்டவர்) கௌரவரா யிருக்கிறவர்களுக்குமரிய தபடிக்கு நின்றார்-எ-று * (அன்றருளிச்செய் வகைஎன்றது ஞ் ஸசாஸ்திரபுராணங்களிலுள் முன்சொன்னதிவ்வியரூபங்களுருபமல்லாமல்அப்போதுசொன்ன பிரமசொரூபமாகி நின்றாரெனப துஇன்னமுமனேகவிதங்களில அன்றருளிச்செய்த விதப்படி என்றுமாம்,) (௫)

கலிவிருத்தம்.

பரிந்தினிதுரைப்பதென வப்படிவமேலாய்
விரிந்துலகமெங்கணும விளங்கொளியினால
யெறிந்தனதிசைப்புறம் தின்னவெனவேதுந்
தெரிந்திலர்கள்வானவாக டானவர்திகைததார்

(இ-ள்) கேளுந்திருதராட்டிர மஹாராசாவேஅந்தவிசுவரூபத்தைப்பரித்து நன்றாகச்சொல்லுவதென்ன உலகமெங்கு மவருடை சொரூபமேயாய்ப்பிறந்தது அந்தச்சொரூபம் விளங்கபபட்ட சோதியினாலேபபதத்திக்குமிகுந்துபிரகாசித்தது அந்தப்பிரகாசத்தைப்பார்க்கமாட்டாமற்றேவர்களானவர்கள் திகைத்து அந்தச்சோதியானது இன்னதென்று ஒன்றுந்தெரியாமல வெளிச்சப்பட்டு நின்றார்கள்-எ-று. * (தேவர்கள திகைத்துந்திக்குகளைசசோதி கம்மிக்கொண்டதுஞ் சஞ்சயனுக்குத் தெரிந்தது வியாசமகமுனிவரத்தினாலேயும் அருச்சுனனுக்குத்தெரிந்தது ஸ்ரீகிருஷ்ணசுவாமிகொடுத்த திவ்வியதிருஷ்டியினாலு மென்றது அருத்தாபத்தி.) (௬)

கலி விருத்தம்.

அங்குமால்கொள்கோல மிங்களந்துகூறலாகுமே
கொங்குணமாலையாடை சாந்துகொண்டகோலமேவியே
யெங்குமாகியெல்லையின்றி யெண்ணில்கோடிபல்கதிர்
மங்குல்வானில்வந்துதித்த தொக்குமற்றகன்களே

(இ-ள்) கேளுந் திருதராட்டிரமகாராசவே அந்தகுருபூமியிலே ஸ்ரீகிருஷ்ணசுவாமிகொண்ட விசுவரூபத்தையிங்கேயளவிட்டுச் சொல்லலாகுமோ ஆகாது பூந்தாதுக்களநிறைந்த திவ்வியமாலை பீதம்பரம்திவ்வியசந்தனமிவைகள தரித்துகொண்ட சொரூபத்தைக்கூடி எங்குந்தானாகி இமமட்டென்று மட்டிலலாமல் அளவிலலாத கோடி அனேகசூரியர்கள் மேகங்கள் சஞ்சரிக்கப்பட்டஆகாயத்தில்வந்துஉதையமானதை யொப்பான சோதியுள்ளதாகும் அநதச்சொருபத்தி னிடத்தில்-எ-று, (௭)

கலிவிருத்தம்.

எய்வகையதாள்களொடுதோள்களுமனேகஞ்
காய்பெறவணிந்தவணிதானுமுனமேனகம்
வாய்களுமனேகமொளிர்வான்முகமனேக
மாயுதமனேகமெழுமற்புதமனேகம

(இ-ள்) அந்த விஸ்வரூபத்திலிடத்திலிசைந்தபடி அனேகந்திருவடிகள் அதனுடனே தோள்களுமனேகம் சாயைபெற முன்னே தரித்த திவ்வியாபரணங்களுமனேகம திருவாய்களுமனேகம் பிரகாசிக்கப்பட்ட திருமுகமனேகம் ஆயுதமனேகம் எழும்புகிற ஆச்சரியமனேகம்-எ-று. (அ)

அவ்வகையாமாயனமர்கோலமகனுள்ளே
யெவ்வகையவாய பொருள்யாவுமெதிர்காணு
வுய்வகையனுயினனெனுவுவகைகூறச்
செய்வதரியாவிசைய னிவ்வகைசெய்தானல்.

(இ-ள்) ஸ்ரீகிருஷ்ணசுவாமியார்ந்த சொரூபமப்படிக்கொத்தநூகேளுந் திருகராட்டிரமகாராசாவே அந்தச்சொரூபத்துக்குள்ளே எங்கிதங்களாகியசகலபொருள்களும எதிராகக்கண்டு தப்பிப்பிழைக்கின்றவிதத்தை யுடையவனுனென்று சந்தோஷமிகுதியாக அதனாலே செய்வதொன்றுமறியாத அருச்சுன னிந்தபடிசெய்தான்-எ-று (கூ)

தொழும்புகழுமெய்மயிர் துளக்குமுயிர்சோரு
மெழும்புவனமெழுவ னன்றிமெதிர்காணுன்
விழுங்கயலுமானென விரும்புமெய்மயங்கா
அழும்பரியுமென்செய்தன னென்றறியலாமால்.

(இ-ள்) தெண்டனிடுவான் தோத்திரம்பண்ணுவான் சரீரத்துமயிர்புளகமாகி நடுங்குவான் ஜீவன்சோருவான் எழும்புவான் சகலபிரபஞ்சமும் அந்தக்கிருஷ்ணசுவாமியையல்லாமல் வேறொன்றையுமெதிராகக்காணுன் அந்தசொரூபக்கை விழுகைப்படுகின்றவ னென்னத்தக்கதாக ஆசைப்படுவான் சரீரந்தெரியாமல்மயங்கி அழுவான் இரங்குவான் இவைகளி லென்னசெய்தானென்றறியாமல எல்லாஞ்செய்தான்-எ-று. (௰)

அஞ்சிமெய்நடுங்க மிகவன்பனுமனத்தே
நெஞ்சுமறிவுங்குழைய நின்றுதொழுநேரே
யுஞ்சுகரைகண்டனெனுவுவகைகூறும்
வெஞ்சுடர்கொலென்றனன் வெயர்க்கும்வெயமெய்தான்.

(இ-ள் பயந்து வெயர்வையடைந்த அருச்சுனன் இந்தசொரூபத்துக்குப் பயந்து சரீரம்நடுங்கி மிகுந்த அன்பைமனதிலே யடைவான் இருதயமும அறிவுங்குழைந்துருக எதிரே நின்றுகைகூப்புவான் பிறவிக்கடலுக்குத் தப்பிப்பிழைத்துக் கரைகண்டேனென்று சந்தோஷமிகுதியாவான் உஷ்ணமுள்ள சோதியோவென்றான் சரீரம் வியர்வையுண்டாகும்-எ-று. (௰௧)

மண்ணுறவணங்கு மயிர்க்குச்செனநிலாக்குங்
கண்ணுமனமுங்கரைய நின்றுகைமுழத்தே

யெண்ணுமுலகங்களை யுமியாவரையுமேனுட்
பண்ணுமவன்முன்புசில நின்றுபகர்வுற்றான்.

(இ-ள்) தன்னுடையசரீரம் பூமியிலே படதெண்டனிடுவான் மயி ர்க்குச்செறிந்து நிறையாகநிற்பப் புளகிப்பான் கரையாதகண்ணுங்கரை ந்து ஆனந்தக்கண்ணீரோடககரையாத மனதுங்கரைந்துருகநின்று கைகூப்பியெண்ணப்பட்ட சகலபிரபஞ்சத்தையுஞ் சகலசீவராசிகளை யும பூர்வகாலத்திலே சிருஷ்டிக்கப்பட்ட அந்த ஸ்ரீ கிருஷ்ணசுவாமி முன்னேநின்று சிலவசனஞ்சொல்லுவான்-எ-று, (௰உ)

அறுசீரடி யாசிரியவிருத்தம்,

தேவரும்வணங்குந்தேவ னின் திருக்கோலத்துள்ளே
யாவருமெல்லைகாணுப் பொருளெலலாமிசையக்கண்டேன்
மூவரின்முதற்புத்தேளை முனிவரரோடுங்கண்டேன்,
மேவருநாகங்கண்டேன் விண்ணவர்குழாமுங்கண்டேன்,

(இ-ள்) மனிதர்வணங்கப்பட்ட தேவர்களும் உம்முடைய அழகிய சொரூபத்துக்குள்ளே எல்லாரும் எல்லைகாணுத பொருள்களெல்லாம் இசையக்கண்டேன் திரிமூர்த்திகளில் முதலானதெய்வத்தை மகாமு னிகளுடனுங்கண்டேன்சேர அரிதானபாதாளத்துப்பாம்புகளைக்கண் டேன் தேவலோகத்துத் தேவர்களுடையகூட்டங்களையுங் கண்டேன் என்றவாறு, (௰௩)

கண்களும்வயிறுந்தோளு முகங்களுங்கருதிநோக்கி
லெண்யலவுடையவாயு வுருவுகளனேகங்கண்டேன்
றண்கதிர்முடியுந்தண்டுஞ் சக்கரப்படையுமேந்தி
யொண்கதிரனலோடொன்று யளையநின்னுருவினுள்ளே,

(இ-ள்) குளிர்ந்த பிரகாசமுடைய கிரீடமுந் தெண்டாயுதமுஞ்சக் கராயுதமுந்தாங்கி அழகிய சூரியர் அக்கினிகளுடனே யொன்றுயக்க லங்கலதை யொப்பான உம்முடைய சொரூபத்திலுள்ளே கண்களும் வயிறுகளும் தோள்களும் முகங்களும் விசாரித்துப்பார்க்கிலிலககம் அநேகமுண்டானதாகிய ரூபங்களனேகங்கண்டேன்-எ-று. (௰௪)

கலிவிருத்தம்.

இந்தவுருவெந்தவுருவென்றறிகிலேனு
மந்தமறயேனவுமாதியுமனைத்து
கந்தலறியாததனையான்மறையுநாடித்
தந்தபொருளாயதனைமாயைதருசார்வை

(இ-ள்) இந்தச்சொரூபத்தை யெந்தச்சொரூப - மென்றறியமாட் டேன்ஆதியும் கடைவு மந்தமு மெல்லாமறியேன்நாசத்தையறியாததை நாலுவேதமுமதேடி தரப்பட்ட வேதார்த்தப்பொருளாகியதை மாயை யைத்தரப்பட்ட சார்பானதை-எ-று, (௰௫)

என்றுமுனதாயதை யியற்றருமமெல்லா
நின்றுபிறழாவகை நிறுத்துநெறிவாழ்வைச்
சென்றுகுறையாததனை யென்பழையசேர்வை
கன்றுதொடராபரிசு நின்றனையெதிர்கண்டேன்.

(இ-ள்) என்றைக்குமிருக்கிறதாகியதை இயல்பானதருமமெல்லா ந்தப்பாதபடிக்குநின்று நிறுத்தப்பட்ட தருமமார்க்கமான செல்வத்தைக் காலஞ்சென்று குறைபாத நிறைவை இப்படிக்கொத்த சொரூபத்தை நான் சேவிக்கப்பட்ட வென்னுடைய பழைய சேர்வையைக் கன்றைத்தொடர்ந்த பசுவைப்போல நீயென்னைத் தொடருகின்றதை யுமமுடையமுன்னேகண்டேன்-எ-று, * (இந்தவுருவென்றபாட்டு ,மென்றுமுளதிதென்றபாட்டும் ஒருதொடர்பு.) (௱௬)

அலர்ந்தருநிறத்தொடு வருசுகதிரிரண்டே
யலர்ந்தெழவிழிப்பதை யடுங்கனநெருப்பை
மலர்ந்தெழுமுகத்தை மயங்கவுலகெங்கும்
கலந்துசுடருற்றதை வியந்தனெதிர்கண்டேன்

(இ-ள்) பாராக்கிரமத்தையுடைய திருமார்புடன்உலகத்தில் வரப்பட்ட சூரியர்-சந்திரர் பரந்தெழும்ப விழிக்கின்ற கண்களைச் சுடப்பட்ட உஷ்ணத்தையுடைய அக்கினியைப் பரந்தெழும்புகிற திருமுகத்தையுடையதை வெளிச்சப்பட்டுப் பிரபஞ்ச மெங்குந்தெரியாமல் மயக்கந்தது சோதியெரிகிறதை இப்படிக்கொத்த சொரூபத்தை எதிரேகண்டேன் அதிசயித்தேன்-எ-று * (திருமார்புடனே திருக்கண்ணைத் திருமுகத்துடனேசோதியைக்கண்டேனென்பது.) (௱௭)

நிலத்தினொடுவானுற நிமிர்ந்துதிசைநேர்போய்
விலக்கமறநீயுனது மேனியைவிரித்தா
லலக்கணடையாதவர்க ளாரடையவையா
கலக்கமுறுகின்றவுல கங்களிவைகாணாய்.

(இ-ள்) பூமியினுடனே ஆகாயமெங்கும் நிறைந்துதிக்குகளிலே செவ்வையாயப்போய் விலக்கப்பட யிடமில்லாமல் உம்முடையதிருமேனியை நீவிரித்தால் துன்பமடையாதவர்களார் ஐயா, எல்லாருந் துன்பமடைந்தவர்களே, அதினாலே திரிலோகங்களுங் கலக்கபடுகின்றது இதைப்பாரும்-எ-று, (௱௮)

வணங்கியிமையோர்களொடு மாதவர்வழுத்திக்
கணங்கொளவியந்துபுகழ் சித்தருகண்டே
துணங்கவுயிர்தானவர்கள கந்திருவருள்ளோ
ரிணங்கியினதென்றறிகி லாரையெதிர்கண்டேன்.

(இ-ள்) தேவர்களுடனே பெரிய தவமுனிகள் உம்மை வணங்க வேண்டித் தோத்திரம் பண்ணிக் கொண்டு கூட்டங்கூடி அதிசயித்

௰௩

துத் தோத்திரம்பண்ணுகிற சித்தர்கள் ஒன்றுந் தெரியாமல் மயங்கி பபெருமூச்சுவிடுகிற அசுரர்களா கந்தருவர்களா முதலாயுள்ளவர்கள் கூடி இன்னதென்றறியமாட்டாதவர்களே எதிரேகணமேடை-எ-று. ()

வாயுடையவிம்பிவாந ணம்பலவுரித்தாய்ப்
பேயினுடையாயபிறை போலெயிறுபேழ்வாய்
தானுடையவாய்ம ரமுகம்பலதழைக்கும்
யானுடையலாம்வகைய தன்றியுருவெந்தாய்

(இ-ள்) ஆகாயமெல்லாம் நெருங்கி நிறைந்து அனேகம்வாயைங்களை யுடையதாய்ப் பேயினுடைய சுபாவம்போல வாகியபிறையிரண்டொத்த கோரைப்பல்லுகளும் பெரிய ஆழமுள்ளவாய்களும் தனக்குடையதான அனேகவாய்களு மனேக மனதுகளும் அனேகமுகங்களும் அகோரமாக வளருகின்ற அந்தச்சொரூபம் நான்சேரலாம்படி யான தல்ல சுவாமி-எ-று. (௨௰)

அறுசீரடி யாசிரியவிருத்தம்,

தஞ்சமிவ்வுலகுக்கெல்லா மாயனின்றவைமைகண்டே
னஞ்சனென்றுமாய வுறவுறக்காணக்காண
நெஞ்சமுமடங்கிநிற்க நிலையிலேன் திசையுங்காணே
னஞ்சலென்றருளவேண்டு மகிலமுமாயவெந்தாய்.

(இ-ள்) சகலமுமாகிய சுவாமி இந்தப் பிரபஞ்சத்துக் கெல்லா மாதாரமாய் நின்ற சுபாவத்தைக்கண்டேன் பிழைத்தேனென்று மாயாதேகத்திலுள்ள மனதிலே கலக்கத்தக்கதாய் பார்க்கப்பார்க்க மனது நடுங்குகின்றது நிற்க நிலையில்லை ஓட ஒருதிக்கையுங்காணேன் ஆகையாலே பயப்படாதேயென்றருளிச்செய்யவேண்டும். (௨௧)

நூற்றுவர்தாமுந்தங்கள் சேனையுமவர்கட்காகி
யேற்றெதிராசர்தாமு மென்படைதானமுந்தன்
கூற்றுறழெயிறதிற்பட்டுக் குறையுடலாகின்றன்
காற்றுடன்தீயினன்ன முகங்களில்வீழக்கண்டேன்

(இ-ள்) கௌரவர்கள் நூறுபேரும் அவர்கள்சேனையும் அவர்கள் கட்சி யெதிராகநின்று எதிர்த்த ராஜாக்களும் எங்கள்சேனையு முன்முடைய யமனையொப்பான தந்தங்களிலேபட்டு நறுக்குண்டு குறையுடலாகிறதற்குக் காற்றிலிருக்கிற அக்கினியையொப்பான உமமுடைய முகங்களிலே விழக்கண்டேன்-எ-று. * (அவர்கட்காவேற் றெதிராசரென்று பாடமோதில் அவர்களுக்காக வெதிராக வெதிராகவெதிர்த்த அரசரென்பதும் என்படை யென்பதனுலெங்களைத்தவிர] வென்றதருத்தாபத்தி.) (௨௨)

ஓ நருநதிகளெல்லா மொண்கடத்தடைந்தாற்போலப்
போதரும்பொருள்களெல்லா முன்னுளேபுகுதக்கண்டேன்
றீதனில்விட்டிற்பாய்ந்தாற் போற்றிருமுகங்களுளளே
மாதவவுயிர்களெல்லாம் விழுந்துமாய்குதலுங்கண்டேன்.

(இ-ள்) இத்தனையென்றுசொல்ல அரிதான நதிகளெல்லாம் அழகிய கடலைக்கூட்டிறாற் போலப் போகப்பட்ட பொருள்களெல்லாம உமக்குள்ளே புகுதக்கண்டேன் நெருப்பில் விட்டிற்பூச்சி பாய்ந்தாற்போல உம்முடைய திருமுகங்களுக்குள்ளே சகல சீவன்களும்விழுந்து சாகிறதுங்கண்டேன் மாதவா சு பதி-எ-று (உக)

ஒளியினிலுலகமெல்லா மொழித்தவையூண்போதாமல்
வெளியினனீட்டி நீட்டிவெறுஞ்சுவைகொள்ளாநின்றாய்
தெளிகிலேனுன்னையுந்தன் செய்கையுந்தெரிக்கமாட்டே
னளியினாலடியேற்குன்னை யுள்ளவாறருளிச்செய்வாய்.

(இ-ள்) சோதியிலே சகல பிரபஞ்சத்தையும் விழுங்கியந்த பொசிப்புப்போதாமல் வெளியிலே நாக்குகளை நீட்டி நீட்டி வெறுஞ்சுவையை நக்கிக்கொண்டிருக்கிறா யுன்னை யின்னானென்று தெளியமாட்டேன் உன்செய்கையையு மின்னதென்று தெரிந்துகொள்ளமாட்டேன் இப்படிக்கொத்த அடியேனுக்குக்கிருபையினாலேயுன்னையுள்ளபடி யருளிச்செய்வாய்-எ-று. (உ௨)

என்றடிவணங்கிக்கேட்க யாவுமாயெல்லையின்றி
நின்றவனுரைப்பானும்மை யொழியநின்றவரையெல்லாங்
கொன்றுயிர்பருகலுற்றேன் கடையுகங்குறுகலுற்ற
வன்றுலகடையமாய்க்கு மவனியானறிநீயையா

(இ-ள்) என்று திருவடிகளில் வணங்கிக்கேட்க எல்லாமாகி எல்லையிலாமல்நின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமி சொல்லுவார் ஐயா உங்களைத்தவிர நின்றவர்களையெல்லாங் கொன்று சீவனைக்குடிக்கிற காரியத்தை யிப்போதுசெய்கிறேன் இது நான்பண்ணுகிறகாரியம் உகாந்தமுடிகிற அன்றைக்குச் சகல பிரபஞ்சத்தையுங் கொல்லுகிற கால சோரூபன் நான் என்னை யின்னானென்றும் நான் செய்கிறகாரியமின்னதென்றுஞ் சொல்லவேண்டுமென்று கேட்டையே அந்தவிரண்டுஞ் சொன்னேன அதை நீயறி அருச்சுனா-எ-று * (அன்றுஎன்றதனால் இன்றென்றதருத்தாபத்தி இப்போதுசெய்கிற காரியத்திலும்மைத்தவிரவென்றதனால் உங்களைந்துபேரையுந் தவிர மற்றைப்பேரையென்றும் அருத்தாபத்தி வரும்.) (உ௩)

கொச்சகக்கலிப்பா,

இறந்தாரோயெனக்கருதிக் கிவர்களெலாமென்னாலே
யுறந்தானுமதுநீயெயாங்கவரைக்கொன்றுயார்

சிறந்தாரவ்வரசினையுஞ் செகத்தினில்வாழ்திருவினையும்
பிறந்தார்கள்பெறுதபெரும் புகழினையும்பேணென்றார்.

(இ-ள்) இங்கேநின்றவிவர்களெல்லாரையும்நீகொல்லாவிட்டாலும் என்னாலே செத்தவர்களென்றே நினை, தருமமுமதுதான், நீயே அவர்களைக்கொன்றாயாகில் சிறந்தராஜாக்களுடைய அந்த அரசையும் பிரபஞ்சத்தில் வாழப்பட்ட செல்வத்தையும் பிறந்தவர்கள் பெறாகிய பெரிய கீர்த்தியையும்ஆதரியென்றார்-எ-று, * (இறந்தாரெனவென்ற ஏகாரத்தினாலே நீகொல்லாவிட்டால் சாகாம லிருந்தவர்களென்று நினையாதே என்னாலே செத்தவர்களென்றே நினையென்றல்தேற்றேகாரம், நான் கொனறதனாற் பிரயோசன மென்னவென்றுகேட்கில் நீ கொன்றாற்சகல அரசும் சகலசெல்வமும்கீர்த்தியுமுனக்கேவருமென்பது,) (உ௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்,

இவ்வகைமொழியக்கேட்ட விசையனென்செய்தானென்னிற்
கைதலமிசையலாகக் கட்டுரைகுளரக்கண்ணீர்
பையவேமார்பிற்சோரப் பயத்தொடும்பரிவினோடும்
மைவரையெடுத்தவள்ளல் பெருமையைவழுத்தலுற்றான்,

(இ-ள்) இந்தப்படி ஸ்ரீகிருஷ்ணசுவாமி சொல்லக்கேட்ட அருச்சுனன் என்னசெய்தானென்றுகேட்கிற் கேளாய் திருதராட்டிரமகாராஜாவேயென்று சஞ்சயன் சொல்லுகிறான், அருச்சுனன் கைகளைத்தலைமேலே கூப்பிக்கொண்டவனாக வார்த்தைகுளரக் கண்ணீர் மெள்ளமார்பிலே யுதிரப் பயத்துடனும் பக்தியுடனும் மேகஞ்சூழ்ந்த கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்த ஸ்ரீகிருஷ்ணசுவாமியினுடைய பெருமையைத் தோத்திரம்பண்ண வத்தியோகப்பட்டான்-எ-று, (உ௭)

கலிவிருத்தம்

சாயாவிமையோர் சனகாதிகடாபதரானோர்
சேயாயணியாயுனைவேரறியார்தெளியாதா
மாயாமனனேமதுசூதனனேதிருமாலே
யாயாவரசே யன்வேரறியேனடியேனே,

(இ-ள்) சாயாமலிருக்கிற தேவர்களுக்குஞ் சனகாதியர்களுக்கும் முனிவர்களுக்கும் தூரமானவனென்றும் சமீபமானவனென்றும்- உம்மை வேறொருவர்க ளறியார்களென்றும் மாயாமனமுடையவனே யென்றும் மதுசூதனனேயென்றும் திருமாலேயென்றும்] ஆயனேயென்றும், அரசனேயென்றும் உம்மையல்லாமல் வேறொரு தெய்வத்தைப்பறியேன் அடியேனென்று தோத்திரஞ்செய்தானருச்சுனன்-எ-று, (உ௮)

ஏகாவழகேயிசழாவுறவேயெனதாழிப்
பாகாவிமையோர்பருகாவமுதேபழையோ
திகானிலநீருளவேறெனையுந்தெரிகல்லா
வாகாயமுமேயுனே வேறறியேனடியேனே.

(இ-ள்) ஏகமானவனே அழகனே இகழப்பட்டாவுருவே எனக்குத்து ணையானவனே பாகனே தேவர்பருகாத அமிர்தமே பழைமையானவனே ஐம்பூதனே உன்னையறியாமல் வேறொன்றையுமறியேனென்றுஞ் சொன்னானருச்சுனன்-எ-று. (உகூ)

சாதிவினையாழியிலேவிழுநாடமியேனைப்
போதிதழியாநெறியன்றருளுடையுனையாளா
சோதியருவேயுருவேசுருதித்தொகைகூறு
மாதிமுடிவேயுனேவேறறியேனடியேனே.

(இ-ள்) தீவினையென்கிற சமுத்திரத்தில்விழுந்து இறக்கின்ற அடியேனை அழியாதமார்க்கமாய்இப்பொழுதுநின்றுஇரட்சித்தென்னையாளாயென்றும் சோதியே அருவேயுருவேசுருதியினுடையதொகைசொல்லுகிறவனே ஆதிமுடிவே உம்மையல்லாமலடியேனுக்குவேறேயொன்றுமில்லையென்று சொன்னான் அருச்சுனன் எ-று, (கூ0)

இருவேறுயிரோயெனவேறுலகாமெயாவுந்
தருவேமுதலேயவைபோயழிநாடமியேனே
யருவேயுருவேயுயிரேயெனமற்றவைசேரா
வுருவேயுறவேயுனேவேறறியேனடியேனே.

(இ-ள்) இருவகையுயிரான உலகையெல்லா முண்டாக்கினகற்பகத் தருவிற்குவேர்முதலானவனேயென்றும் உலகத்தை யழிக்கிற நாளைக்கு உச்சாகமானவனேயென்றும் அருவை யுருவை யுயிரச்சேராத உருவேயென்றும் உறவேயென்றும் உன்னையல்லால்வேறொருவரையறியே னடியேனென்றுஞ் சொன்னான் அருச்சுனன். (௩க)

மயலேவடிவாய்தருமாயையினான்மறையாவு
மியலேயிசையேயெழின்மாசுவைபோலினியானே
செயலேவுரையேமனமேயெனமற்றவைசேரா
வயலேயறிவேயுனேவேறறியேனடியேனே.

(இ-ள்) மயக்கமே வடிவாகத்தரு மாயையினாலே மறையாவு மானவனே, இலக்கணமானவனே இசையானவனே ழகானவனே-மகத்தாகிய சட்சுவைபோலும் இனிமையானவனே செயலானவனே உரையா

னவனே மனமானவனே அயலானவனே அறிவானவனே உன்னையல்லாமல் வேறொன்றும் அறியேனென்றான் அருச்சுனன்-எ-று. (கஉ)

ஒருநாகங்கடாவொருநாகமளாவுயரோதங்
கரநான்முலாலமுதாயெழவேகடைவோனே
வரநான்முகனேமறைதேடரியேமழுமான்சே
ரானைமகனேயுனைவேறறியேனடியேனே

(இ-ள்.) திருப்பாற்கடலிலே மேருவை நாட்டி ஒரு நாகமேலாகவும் ஒருநாகங்கீழாகவும் நாணைப்பூட்டி உயர்ந்த பேரைக்கூட்டிக் கமலம் போன்ற கையினாலே அமிர்தமுண்டாகவேண்டுமென்று இழுத்துக் கடைந்தவரே யென்றும் வரந்தருகிற பிரமாவே யென்றும் வேதந்தேடுகிற விஷ்ணுவேயென்றும் மழுவையும் மானையுந் தரித்த அரனானவனேயென்றும் உன்னையல்லாமல் வேறொன்றையு மறியேனென்று சொன்னான் அருச்சுனன்-எ-று. (கங)

அறுசீரடியாசிரியவிருத்தம

ஞானமுதலிந்திரியமனைத்தினுக்குநாயகனே
யூனவினைதனையறுப்பாயுன்னுடையபுகழ்கேட்கில்
வானவருமுனிவருமனங்களித்துமகிழவெய்தத்
தானவருமரக்கர்களுஞ்சாதுயரப்படுவர்களால்

(இ-ள்.) ஞானமுதலான விந்திரிய மெல்லாவற்றிற்குங் கர்த்தனே குற்றமுள்ள தீவினையானபயத்தையறுக்கிறவனே உன்னுடைய கீர்த்தியைக் கேட்கிறவர்களுக்கும் மனககளிப்புண்டாய்ச் சந்தோஷத்தையடைய அசுரருமராக்ஷதரும் மரணதுக்கப்படுவார்கள்-எ-று. (கங)

கையும்பதமுந்திருவாயுங்கண்ணுஞ்செய்யகருமுகிலே
யையும்பொருளுமறிவரியாயனந்தாயேயந்தமிலாய்
மெய்யும்பொய்யுமில்லாதாயெல்லாமாகிவிரிந்தாயே
யுய்யும்பரிசுநினைந்தவர்களுன்னைவணங்காதவருளரோ

(இ-ள்) திருக்கைகளுந் திருவடிகளுந் திருவாயுந் திருக்கண்களுஞ்சிவந்த நிறத்தையுடைய நீலமேகம்போலுந் திருமேனியையுடையவரே ஆத்மதத்துவ மிருப்பதுநாலுஞ் சீவாத்துமா வொன்றுமாக விருபத்தைந்து பொருளும் அரியவரியவனே பிரமாவின்தாயே முடிவிலாத அனந்தனே மெய்யும் பொய்யு மில்லாதவனே மெய்யும் பொய்யுமான வெல்லாந் தானுகிப் பரந்தவனே பிழைக்கிறவிதத்தை நினைந்தவர்கள் உன்னை வணங்காதவர்களுண்டோ எல்லாரும் வணங்குகிறவர்களே-எ-று. (கடு)

ஆதிதேவனுவாய் நீ யாக்கைக்கணைந்தவாருயிர்நீ
யாதுமறியப்படாமையுநீ யெல்லாங்கடைகாற்புகலிடநீ
யோதியுணர்வாருணர்வுநீ யுணர்வாலுணரப்படும்பொருணீ
நீதியமனுயழிப்பாநீ நீருங்காறறுமாவாய்நீ.

(இ-ள.) சகலதேவர்களுக்கு முந்தின தேவனுன ஆதிதேவனுனவன் நீ தேகங்களுக்கு அடைக்கலமாயுள்ளவன் நீ ஒன்றாலுமறியப்படாமையு மெல்லாவற்றையும் அறியப் பட்டவனும நீ முடிவுகாலத்தில எல்லா புகுமிடம நீ வேதங்களையோதி வேதாந்தத்தைத்தெளிகின்றவர்க ளிடத்துத் தெளிவும நீ அந்தத்தெளிவாலே தெளியப்பட்ட பொருளு நீ நீதியையுடையயமனும் கொலலுகிறவனும நீ தண்ணீருங் காற் றுமாகின்றவன் நீ எ-று. (கஎ)

ஏயும்பரிசினுலெல்லா மென்றுமபிறப்பித்திடுகின்ற
தாயும்பிதாவுமாவாய்நீ தாய்தாய்க்குந்தைதந்தையுநீ
யாவும்படியையல்லாத வையாவுன்னையடியேனென்
மாயும்பிறவித்துயர்தீர நூறுயிரங்கால்வணங்கினனே

(இ-ள) இசையும்படிக்கு இந்தப் பிரபஞ்சத்தையெல்லா மென்றைக்கும பிறப்பிக்கிறதாயுந் தகப்பனுமாகின்றவன் நீ தாயினுடையதாயான பாட்டியுந் தகப்பனுடைய தகப்பனை பாட்டனும் நீ விசாரித்துத்தேடியறியப்பட்ட சுபாவத்தையல்லாத விசாரித்துத்தேடியு மறியப்படாத சுபாவத்தையுடைய சுவாமி யென் பிறவித்துன்பந் தீரும்வண்ணம் அடியேன் உன்னை நூறுயிரந்தரம்வணங்கினேன். (கஅ)

என்பேரிடும்பைகெடும்வண்ண மின்னுந்தொழுதேனென் றாயு
முன்பேதொழுதேனுன்னுடைய பின்பேமுறையால்வணங்கினே
னன்பேயடியேனுரமுதே யகலாவித்தப்பெருமபிறவி
வன்பேகெடவுன்றனையெங்கு மறிந்துமறிந்துவணங்கினேன்

(இ-ள,) என்பெரிய துக்கங்கெடுகின்ற சித்தியாக இன்னம்வணங்கினேன் சுவாமி உன்னுடைய முன்னே வணங்கினேன் உன்னுடைய பின்னேமுறைமையாலே வணங்கினேன் என் அன்பே அடியேன் குடிக்கிற அமிர்தமே யென்னைவிட்டுநீங்காத இந்தப்பெரிய பிறவினுடைய வலுமை யறியவேண்டி யுன்னை யெங்கெங்குந் திருமபியுந் திருமபியும் வணங்கினேன-எ-று. (கஅ)

தேவதேவனின்னில்வேறு தேவரேதுதெய்வமேது
பாவமேதறங்களேது பற்றியாடிவீடியாது
சாவுதேதுவாழ்வதேது தனைத்துமாயதன்மைநீ
யாவதேதுமொன்றுதா னறிந்திலேனென்மாயனே

(இ-ள.) தேவதேவா உனக்குள்ளே யுன்னைத்தவிர வேறு தேவர்களேது தெய்வமேது பாவமேது புண்ணியமேது பாசபந்தமேது

மோட்சமேது சாவதேது வழ்வதேது இவைமுதலான சகலமுமா கிய சுபாவம் நீயாவது இதையேதாகிலும் ஒன்றாகிலும்முன்னேநான் அறிந்ததில்லை அதென்ன சுவாமியென்றான் எ-று. (௩௯)

நீதிவேதம்வானுளோர் நிலத்துளோர்நினைந்துநைந்
தோதியோதியுட்கசிந் துணர்ந்தவுன்னைமுன்னெலாஞ்
சாதிபேதமாகிவாழ் சராசரங்களுக்கெலா
மாதிமூலமென்றுநானறிந்திலேனென்மாயனே.

(இ-ள்) மேலுலகத்திலுள்ள தேவர்கள் பூமியிலுள்ள மனிதர்கள் தெய்வமாரசோவென்று நினைந்து மனதுநைந்து நீதியுள்ள வேதத் தையோதியோதி மனதுகசிந்து உருகி நீயென்று நிச்சயமாகத் தெளிந்தெளிந்த வுன்னையிந்த விசுவரூபங்காணுகை முன்னெல்லாம வெவ்வேறசாதி பேதமாகி வாழப்பட்ட சராசரங்களுக்கெல்லாம் மூல் திஸ்பீசமென்றுநானறிந்தேனில்லை அதென்னசுவாமி-எ-று. (ஆதிமூலமாவது முதற்பீசம்) (சுயி)

சாயைபோலும்வாழ்வுநாடு வீடுதந்தைதாயெனும்
பேயையேறிமாறியே பிறந்திறக்குமீதெலாந்
தூயையாகிபாதுமோர் தொடக்கிலாதுநின்றநின்
மாயையாவதென்றுநானறிந்திலேனென்மாயனே.

(இ-ள்) நிழலையொப்பான வாழ்வு நாடு வீடு தகப்பன் தாயென்று சொல்லப்பட்ட பேயை நிச்சயமென்று மேன்மேலும அதுவே முய ற்சியாகயேறி மாறிமாறிப் பிறந்துபிறந்து செத்துச்செத்துவருகின்றவி தங்களெல்லாம் பரிசுத்தமாகி ஒன்றாகிலும் ஒரு பற்றிலலாமல் நின்ற வுன்னுடைய மாயையாகின்றதென்று முன்னேநான் அறிந்தேனில்லை அதென்னசுவாமி எ-று, (சுக)

யாதவாவென்மைத்துனா வடாவசோதையின்னுயிர்க்
காதலாயகாலியாய கண்ணகண்ணவென்றுநா
னோதலாவதன்றியே யுரைத்ததிமையாவையு
மாதகாதவென்றுநானறிந்திலேனென்மாயனே-

(இ-ள்.) அடாயாதவா அடாவென்மைத்துனா அடா அசோதையி னுடைய இனிபசிவனே யொப்பான குமாரா அடா பசு மேய்க்கிற- வி டையா அடா கிருஷ்ணாவென்று சொல்ல லாகாத சொல்லைநான்சொ ன்ன பொல்லாங்கு சகலத்தையும் தாாத சொல்லென்று முன்னே நா ன் அறிந்தேனில்லை அதுவென்ன ஆச்சரியம்-எ-று. (சுஉ)

ஏறுமல்லுவென்றுகுன் றெடுத்தவண்ணமெனையே
கூறுமல்லநீரவும்பர் கூறுகின்றகொண்டாலே
வேறுமல்லவொன்றுமல்லை மெய்மைகூறுமப்பொரு
ளாறுமல்லவென்றுநானறிந்திலேனென்மாயனே

(இ-ள்) கோசலராஜாவினுடைய பெண்ணைக் கல்யாணம்பண்ணுகிற தற்காக ஏழுரிஷபதனையுமகஞ்சன்விட்ட மல்லனையுஞ் செயித்துஇந் திரன்வருஷிப்பித்த மழையைத்தடுத்துப் பசுக்களையு மிடையனையுங் காக்கவேண்டிக் கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்துத் தடுத்த தை நினைத்துச்சொல்லப்பட்ட துன்பநீரான தேவர்கள கொண்டா டப்பட்ட நிலமேகத்தையொப்பானசுவாமி நீவேறுவேறான அனேக முமல்ல ஒன்றுமல்ல சத்தியத்தைச்சொல்லப்பட்ட பொருள்மார்க்க முமல்லவென்று நான்முன்னறிந்தேனில்லை அதென்ன ஆச்சரியஞ் சுவாமி-எ-று. (௪௩)

கலிவிருத்தம்.

என்னுடையதோழனென வேகருதியானு
முன்னுடையமெய்மையினை பொன்றுமுணராதே
வன்மையினினின்மொழி மருக்கெதிருரைத்த
புன்மொழிகளானவை பொறுத்தருளவேண்டும்.

(இ-ள்) நானும் என்னுடைய தோழனென்றே யுன்னை நினைத்து உன்னுடைய சத்தியத்தை யொன்றுமறியாமல என்னுடைய வலு மையினாலே உன்வசனத்தைத்தடுத்து எதிர்வசனஞ் சொன்ன அற் பவசனங்களானவைகளைப்பொறுத்தருளவேண்டும் எ-று, (௪௪)

உண்ணல்விளையாடுதலுறங்குதல்சிரித்தல்
பண்ணவுறுபோதுகளினும்பழமையானு
மெண்ணலறியாமையினில் வந்தபிழையெல்லாங்
கண்ணகருணாகர பொருத்தருளுகண்டாய்.

(இ-ள்) ஸ்ரீகிருஷ்ணா, கிருபாசொரூபா, போசிக்கிறபோதும்வி ளையாடுகிறபோதும் நித்திரை பண்ணுகிறபோதும் சிரிக்கிறபோதும் இருவருக்குமுள்ள பாரம்பரிய உறவுபழமையினாலும், மைத்து னன் முறையினாலும் உன்னை சுவாமியென்றெண்ண அறியாமையி னாலே ஏறினபிழையெல்லாம் பொறுத்தருளவேண்டுங்கண்டாய். ()

எண்சீரடி யாசிரியவிருத்தம்.

உண்டானவுலகனைத்துமீன்றும்நீயே
யெவராலுமுன்னுண்மை யுணர்ந்துகூறிற்
கொண்டாடப்பரிவாய்நீ மேன்மைநல்கிக்
குருவாகிக்குற்றங்க டீர்க்கின்றாய்நீ
எண்டாலுமறையனைத்து மின்னின்மிக்கா
ரில்லையெனநின்றெடுத்து மெடுத்துக்காட்டக்

சக்கரமுந் தரித்துக்கொண்ட புதிய ஸ்ரீகிருஷ்ணசுருபத்தையே கொண்டருள்வாய் என்று. (௪௫)

என்றவனுரைத்திடலு மெவ்வுருவுமொன்றாய்
நின்றவனுரைத்தருளு வானிறையொளித்தாய்
மூன்றருமுரற்பொருளு மாய்முழுதுமாய
வென்றனுருவத்தினைமுன் னியாவரறிகிற்பார்.

(இ-ள்) என்று அருச்சுனன் சொல்லவும் எந்தருபமு மொன்றாகி நின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமி திருவாய மலர்ந்தருளுவார் நிறைந்தசோதியையுடையதாகமுனெனைலாவற்றையுந்தரபபட்ட முந்தின பொருளுமான ஆதிமூலமுமாகிஎல்லாம்நானுகியஎன்சொரூபத்தை இப்போது நீயறிந்தாற்போலமுன் யாரறியமாட்டுவார்கள்யாருமறியார்-எ-று. ()

வேதநெறியாமிரு வேள்விகளினாலும்
மாதவமையாலுமகா தானவகையாலுங்
காதலர்கள்காணமுடி யாவடிவுகண்டாய்
யேதமறியாதவெளி யோகவலியாலே.

(இ-ள்.) வேதமார்க்கமான வைதிகக் கிரமங்களினாலும்மிகுந்து செய்தயாகங்களினாலு மஹா தபசுகளி னாலும் ஏற்கிறவர்கள் மனதுசந்தோஷப்பட் கொடுத்ததானவிதங்களினாலும்இவைகளின்பிரயோசனத்தையிச்சித்த ஆசையுடையவர்களாலேகாணமுடியாதசொரூபத்தைப் பிரயோசனத்தைஇச்சிக்கிறதாகியகுற்றத்தையறியாதவென்மேலே வைத்த மனதுள்ள யோகமான ஆத்மயோகவலுமையினாலேநீகண்டாயருச்சுனா-எ-று. (௫0)

இப்பரிசுரைத்தருளி யிருகைகளையா
யப்பழையகோலமது வாயருளியங்கே
மெப்பயமகற்றிவிசை யர்க்கிலைகள்வேறே
யொப்பவரின்மிக்கவரிலாதவனுரைப்பான்

(இ-ள்) இந்தப்படி திருவாய்மலர்ந்தருளிநாலுகைகளையுடையதாகிப் பழையமனிதசொரூபமாயருளிச்செய்து அப்போது அருச்சுனனுக்குச் சரீரபயத்தைத் தீர்த்துத் தனக்குத்தானே ஒப்பல்லாமல்வேறேயொப்பானவரும், அதிகமானவரு மில்லாதஸ்ரீகிருஷ்ணசுவாமிஇவை சொல்லுவார்-எ-று. (௫௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கண்டவரில்லைநீமுன் கண்டவிக்கோலங்காண
அண்டருமறியாநின்ற காதலாலன்புகூருந்

சொல்லாவது என்றாலே யறியப்பட்டது இந்தப்பிரயாசமான பிரபத்தி ஷ்டையானது உலகத்திலெவராற்பட்டு உயிர்களால் ஆவதானால் அந்த வுயிர்களுடையபெருமையைப்பிரமாணமாக அளவறுக்கின்றவர்களாயார் யாருமில்லை ஐயா-எ-று. (பிரயாசமாவது காணப்பட்டதேசிக்குக் காணாத ஆத்மாவைத்தியானிக்கின்றது பிரயாசமென்க) (௪)

யாவர்களசிலர்களெல்லா வினையுமென்கணணேவிட்டிட்
டாவர்தம்மறிவென்பாலே யாக்கவாரவர்கடம்மைச்
சாவதுமுதலாயுள்ள துயர்களினின்றாந்தாங்கி
ஏவர்களென்னுங்காலஞ் சிறிதிலேயெடுக்கின்றேனான்

(இ-ள்) எவர்களோ சிலபேர்கள் எல்லாவறத்தையு மென்னிடத்திலே விட்டுவிட்டு அவர்கள் தங்களுடைய அறிவை யென்னிடத்திலேயாகப் பண்ணுவார்களோ அவர்களை எவர்களாலுமம சாகின்றது முதலாயுள்ள துக்கசமுத்திரத்திலே நின்றுந்தாங்கிச் சீக்கிரத்திலே யெடுக்கமாட்டுவேன்-எ-று. (௫)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மெய்யுறவுன்னையென்னிலேவைத்தா
லென்னில்வேறன்றியொன்றாதற
லையுறவில்லையதுமுடியாதே
லாயினுமதனையேபயில்வாய்
பொய்யுறவதுவும்புரிகிலாயெனிலுன்
வினைகளென்பொருட்டினாற்செய்வாய்
செய்யுமவ்வினைகளப்படிச்செயாயேல்
வினைப்பயன்றவிரவேசெய்வாய்.

(இ-ள்) மெய்யாக வென்னிடத்திலே யுன்னைவைத்தால் நீ நானென்றுவேறுபடாமல் என்னிலொன்றாவதற்குச்சந்தேகமில்லை யென்னிலுன்னை மெய்யாகவைக்கமுடியாயாகில் ஆனாலும் அப்படிவைக்கின்றதையே அப்பியாசம்பண்ணுவாய அந்தஅப்பியாசமும் பொய்யறச்செய்யமாட்டாயென்று உன்கருமங்களை எனக்காகச்செய்வாய் அப்படியெனக்காகச்செய்யப்பட்ட கருமங்களை அப்படிச்செய்யமாட்டாயாகின்ற கருமபலனையிச்சியாமற்செய்வாய்-எ-று.* (இதனால் ஆத்மஞானஞ்சித்திக்குமென்பது குறிப்பு.) (௬)

கலிவிருத்தம்.

அத்திஞான வினையினதனினு
மெத்தியான மிருமதன்மேலதாம்
வித்தினைய வினைப்பயன்விடுதல்
சித்தசாந்தி யதனினுஞ்சீரிதால்,

வைத்தனக்கு நன்மைதின்மைசெய்வார்களை மேலுஞ்செய்வது தயவு துணிவின்மையுமொருவிதமும் தெய்வத்தின்விதிக்கு ஒழிவில்லை ஆகையாலே தேகமெத்தனை வந்தாலும் அந்ததேகங்களுக்குள்ள சுகதுக்கங்களெத்தனைவந்தாலும் விதிப்படிக்கல்லாமல் விசாரத்தினலொழிவில்லையே அதனாலே நடந்ததெல்லாம்நடக்கட்டும் நடக்கிற தெல்லாந் தேகத்துக்கேயல்லாமல நமக்கொன்றுமில்லையேயென்கிற துணிவுமாம் அறிவாவது விஷயபயமறிவு,) (அ)

உலகமுந்தானும்வேறில்லாமையினா
லொருபொருட்குமஞ்சாதே
யலகிலாவுயிர்கட்கினியனாதலினா
லவைகளுந்தன்னையஞ்சாதே
புலவரானவர்கள்புகழவேநிகழ்வான்
பொறுமையுமயக்கமுங்களிப்பு
மிலகிடாதொருசித்தயோகியெனபவன்கா
ணியாரினுமெனக்குமேலினியான்

(இ-ள்) உலகமுந் தானும் வேறல்லாததினாலே ஒருபதார்த்தத்துக்கும இச்சியாமல உலகமெல்லாந்தானாகவும தானே உலகமாகவுமிருக்கிறதினாலே உலகத்துக்குப்பயப்படாமல் அளவில்லாதசீவன்களுக்கும் நல்லவனானதினாலே எந்தசீவன்களுந் தனக்குப்பயப்படாமல தேவர்களான மேலுலகத்தார்களுந் தோத்திரம்பண்ணத்தக்கதாக நடக்கிறவன் பொறுமையும் மயக்கமுஞ் செருக்குமுண்டாகாத மனதையுடைய யோகியென்கிறவன்கண்டா யருச்சுனா,எவர்களிலு மெனக்குப்பிரியம் எ-று. (௯)

ஒன்றினுமாசையின்றியிந்திரியங்க
டன்வழியொழுகிடாதொறுக்கி
நன்றியொடுதீங்கெலாமொத்து
நல்வினைதீவினைதுறந்து
பொன்றினுநோயுறமழிதல்செய்யாமற்
பூரித்தல்வாடுதலின்றி
யென்றுமுன்பிழைத்தபொருட்கிரங்காமல்
வரும்பொருட்கிச்சைசெய்யாதே.

(இ-ள்.) ஆத்மஞானமாகியபிரமத்தைத்தவிரவேறொன்றினு மாசையில்லாமல் பஞ்சேந்திரியங்களுடைய வழியேபோகாமல் அதைப்போக்கி நன்மையினுடனே பொல்லாங்கெல்லாஞ்சமமாகிப்புண்ணியபாவங்களைவிட்டுச் செத்தாலும் வருத்தப்படுத் தாழ்வுசெய்யாமல் நிறைதல் குறைதலில்லாமல் முன்புபோன பொருளுக்கு என்றைக்குந் துக்கப்படாமல் இனிமேல்வருகிற பொருளுக்கு இப்போதே ஆசைப்படாமல் எ-று. (௰)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இகழ்பவரநட்டாரென்ப தின்றியேயின்பதுன்பந்
திகழவமானமானஞ் சீதமோடுஷ்ணமின்றிமை
புகழ்பழியிவற்றிற்கூடே பொருந்திவாழிடமொன்றின்றி
நிகழ்தருமியோகிகண்டாய் மற்றெனக்குரியனீரான்

(இ-ள்.) சத்துரு மித்துருவென்பதில்லாமல் சுகதுக்கம் விளங்கா நின்ற அவமானம் மானம குளிர்மை அக்கினியின்சுடுதலான ஊஷ்ண க்கீர்த்தி பழி இவைகளிலே சமமாகியாருடனுங்கூடி ஏன்பமாகவிருக் கிற இடமொன்றில்லாமல் இந்தப்படி நடக்கிறயோகி கண்டாயருச்சு னு,எனக்கு உரித்தான சுபாவகுணவான்-எ-று * (ஒன்றினுமாசையி ன்றி யென்றதுவியும் இகழ்பவர்நட்டா ரென்றதுவுமொருதொடர்,அ தெப்படியென்னில் ஆத்மஞானத்தைத்தவிர மற்றொன்றிலு மாசை யில்லாமல் பஞ்சேந்திரியங்களின்வழியேபோகாமல் அந்தவழியைய அ டைத்து நல்லதுபொல்லாதெல்லாஞ்சமமாய புண்ணிய பாவங்களைவி ட்டு வருத்தமவந்தபோது தாழ்ந்த காரியத்தைச் செய்யாவிட்டாற நீ ராமல் கொள்ளுகிறதான சாவுவர்தாலுந் தாழ்வுசெய்யாமற் சுகம்வந்த போது சந்தோஷிக்கிறதுந் துக்கம்வந்தபோது கிலேசிக்கிறதுமில்லாம ல முன்போனபொருளுக்கென்றைக்குந்துக்கியாமல் இனிமேல்வரப்ப ட்ட பொருளுக்கு இப்போது வரவேணுமென்றுசைபடாமற் பகை க்காரர் சிநேகிதரென்கிறபேதமான ராகத்துவேஷமில்லாமல் சுகது க்கம்-அவமானம்-மானம் சீதளஊஷ்ணங் கீர்த்தி-பழி- இவைகளிலே சமமாகி ஒன்றுடனுங் கூடிவாழ்கின்றதானசங்கமில்லாமல் இப்படிந டக்கிறயோகிதான் கண்டாயருச்சுனு-எனக்குப்பிரியகுணவான்,* மற்ற வென்பது சகலசீவனும் என்றாலும்அவர்களைத்தவிர இப்படிக்கொ த்தவன் பிரியனென்றது,இதனாலே மற்ற சீவன்களெல்லாம் பிரியாப் பிரிய மல்லாதவர்க ளென்பதாயிற்று, ராகமாவது ஆசை துவேஷமா வது-கோபம் கூடிவாழ்கிறதாவதுமனைவியென்னைத்தவிரவேறொன் றைக் கூடுவதெல்லாஞ் சங்கமென்பது ஆகையால சங்கவாற்சிதம்ப ண்ணி நிர்ச்சங்கனாயிருக்கவேண்டுமென்றது,இனிவிரிக்கில்வெருவரம்

செயத்தகுவதுவுமாகிச் சேர்ந்தவர்க்கல்லறீர
வயத்தொடேபோவதான பொருளையானுரைத்தவண்ண
மியப்படவுணர்கிற்பாருக் கியான்மிகவினியனென்றான்
மயக்கறவொருவரானு மறவரிதாயமாயோன்

௰௭

(இ-ள்.) அப்பியாசஞ் செய்யத் தக்கது சேர்ந்தவர்களிடையதுக்கந் தீரத்தக்கதாகத்தப்பிப் பிழைக்கக்கொண்டுபோகிறதான ஆத்மஞானமான பத்தியை நான்சொன்னபடிஇந்தப்பத்தியேசுபாவமாகஉண்டாக அறியமாட்டுகிறவர்களுக்கு நான் மிகவும்பிரியனென்று சொன்னார் ஒருவராலும் மயக்கந்தீரஅறியப்படாதஸ்ரீகிருஷ்ணசுவாமி-எ-று. (௰௨)

௰௨-வது, பத்தியோக-அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

ஆ-அத்தியாயம் ௰௨-க்கு-கூடியசெய்யுள்-ஈ௫அ.

(*)

---

௨

பதின்மூன்றாவது

# பிரகிருதி புருடயோகஅத்தியாயம்,

---

கலிவிருத்தம்.

விடம்படுபெருமுடி யரங்கின்மிசையேறி
நடம்பயிலுநாயகன் மறித்துமிகுஞானன்
சடம்படுபிணிப்பிறவி யென்றிவைதரித்த
முடம்பொடுயிரானவை யுரைத்தருளுநற்றான்

(இ-ள்,) விஷமுண்டாகிய படமுள்ளசிரசாகிய நாடக சாலையிலேறி யாடுகின்ற கூத்தையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமிதிரும்பவும்மிகுந்தஞானமும், மிகுந்த அஞ்ஞானமு முண்டாகிய நோயையுடைய பிறவியென் கூசொல்லப்பட்ட இவைகளைத்தரிக்கப்பட்ட வுடம்புடனே ஆத்மாவானதை உபதேசித்தருளுவதானார்-எ-று. (க)

உடம்பெனவுரைப்பது மிருண்டமறைகளெல்லா
மிடம்படவிளம்பதெதிர் காணலுறுமீதார்
திடம்படவுமற்றிவை தெரிந்துணருமெய்யைக்
கடம்பமுமுயிர்ப்பொருளெனப்பகர்வர்கற்றோர்.

(இ-ள்) உடம்பென்று சொல்வது ஆத்மா பொசிக்கின்றவைகளுக் கெல்லாம் விசாலமுண்டாக விளையப்பண்ணுவது கண்முன்னேகாண ப்படும் இந்தச்சரீரம் ஆதலால் நிச்சயமாகவும் சந்தோஷமாகவும் இவைகளைத்தெரிந்து அறியப்பட்ட சத்தியத்தைஆதரிக்கப்பட்டஆத்மா வாகிய பொருளென்று ஆத்மசொரூபமறியத்தக்கபெரியோர்கள் சொல்லுவார்கள-எ-று. (௨)

மன்னவுடலியாவையினு மன்னியறிவாகி
யுன்னுமுயிர்நானிவை யிரண்டினையுமோர்காற்
றன்மையினிலியாதறியின் மற்றதனைஞான
மென்னவுணர்வாயிஃ தெனக்குமிசையாமால்.

(இ-ள்) இராஜாவே சகலசரீரங்களும் நிலைமையாகநின்று அறிவாகி நினைக்கப்பட்ட ஆத்மாவானது நான், இந்தச்சரீரம் ஆத்மாவென்றவிர ண்டையு மயங்காமற் றெளிந்தசுபாவத்தினாலே யறிவதுயாதொன்று ண்டோ, அதைஞானமென்றறிவாய் இந்தஞானம் எனக்குஞ்சம்மத மாம் எல்லாருக்கும் சம்மதமாம் எ-று. (௩)

மற்றிவுடறன்னின் வரவுங்குணனும்வந்தாங்
குற்றமைவிகாரமு முயிர்க்குறுதிதானு
நற்றவர்கள்வேறுபட வோதினர்களானுஞ்
சொற்றொகையினாலிவை சுருங்கமொழிவன்கேள்.

(இ-ள்) ஆத்மாவைத்தவிர மற்ற இந்தச்சரீரத்துடன் வரவுங்குண மூஞ் சரீரம்வந்த அவ்விடத்திலுண்டாயமைந்தவிகாரமு மிந்தச்சரீர த்தினாலே ஆத்மாவுக்குள்ள பிரயோசனமும் இவைகளெல்லாம் நல்ல தவமபண்ணினரிஷிகள வேறுவேறாகமுன்விரித்துச்சொன்னார்கள்இப் போதுநானும் இதைச்சொல்லினுடைய தொகையினாலே சுருங்கச் சொல்லுவேன்கேள் அருச்சுனா-எ-று. (௪)

எப்பொருளினும்பரவி யெங்குமுளவாகும்
அப்பெரியபூதமவை யைந்துமவையினு
மொப்பரியநானுமவை வந்துமுனுதிக்கும்
பொய்ப்பகையில்புத்திமகா னென்றபொருடானும்.

(இ-ள்) எந்தப்பொருள்களிலும் அதிகமாகப்பரவி எங்குமுண்டா யிருக்கப்பட்ட அந்தப் பூதமானவைகளைந்தும் அந்தப் பஞ்சபூதத்தை யுண்டாக்கப்பட்ட ஒப்பில்லாத அகங்காரமும் அந்தஅகங்காரம்வந்து முன்னே உண்டாக்கப்பட்ட பொய்ப்பகையில்லாமல் மெய்ப்பகையா யுள்ளபுத்தியும் அந்தப் புத்தி யுண்டாக்கப்பட்ட மகானென்றதத்துவ மூம்-எ-று. * (இவ்விடத்தில் நானென்றதகங்காரம் அகங்காரத்தில்ஆ காசாதிபூதமொன்றி லொன்றுண்டாகின்றது எப்பொருளினும் பெரு

மாம் இவ்விசுபரமென்பது இந்தவுபதேசமிருந்து சொல்லுமூலகமிதி னாலே அந்தப்பரலோகமென்றுவந்தது. (௮)

பெற்றணமனையொடு பெண்டிர்மக்கள்பா
லுற்றெழுமவாவுட னுடம்பின்றாய்மையு
மற்றனைவம்பொறிகளின் வாயின்வாழ்க்கையுந்
செற்றமுஞ்சிறியவர் குழுவுந்தீதலும

(இ-ள்) தானசஞ்சிதத்தினாலேபெற்ற வீட்டனே மனையாள்பிள்ளை இவர்களிடத்தில் வைத்தெழும்பப்பட்ட ஆசையுடனே சரீரசுத்தமு மற்ற அனேகபொறிகளினாலும் பஞ்சேந்திரியங்களினாலும் வருகின்ற விஷையங்களை யனுபவிக்கிறதுங் கோபமுடைய கூட்ட முமிவைகளெ ல்லாம் விடுதலும்-எ-று * (இதனால்மனசுக்ரமம பெரிய ர்களினு டைய வுறவும் வேண்டுமென்ற கருத்தாபத்தி) (௯)

ஒருபெரும்பொருளையே யளத்துவைத்தலு
மிருவினைகெட்டவ ரிடங்களெய்தலுங்
குருவினைவழிபடு குணமுங்குற்றமென்
றருவினையுள்ளவா றுணருமுண்மையும்.

(இ-ள்) ஒப்பில்லாத பெரிய ஆத்மாவையே மனதில்வைக்கிறதும் பு ண்ணியபாவங்களைக்கடக்கின்ற பெரியவர்களிடத்திலே சேருகின்றது ங் குருவை பூசைபண்ணுகின்றகுணமுந் தேகத்தைக் குற்றமென்றுஉ ள்ளபடியறிகின்றவுண்மையும்வேண்டும் எ-று * (பொருளையேயளத் துவைத்தலென்ற வேக ரத்தாலேவேறொன்றையுந் நினையாதேயென் றது பெரியவர்களைச்சேருதலாலே ஞானாசாரியருமகுருவே தெய்வமா கையால்பூசிக்கவேண்டுமென்றது தேகத்துக்குக் குற்றமாவது சென னமரணம பாலியவ்வன கவுமாரவியாத்தியம் வியாதி துக்கமிவைமு தலானவைகள். (௰)

முன்றிகழ்பிறப்பொடு மூப்பிறப்பினும்
சென்றிடையிடும்பையைச் சிந்தைசெய்தையு
மென்றிவையனைத்துமற் றிவற்றினுமினிச்
சென்றடைபொருளினை தெரிந்துகேளென

(இ-ள்) முன்னேவிளங்கப்பட்ட பிறப்புடனே மூப்புச்சாவினாலே வந்தடைகின்றதுக்கத்தை நினைக்கின்றதுமென்று சொல்லப்பட்ட இ வைசகலமும நீங்கினவிதுஞானம் இந்தஞானத்தினாலேஇனி மேற் போய்ச்சேருகின்ற ஆத்மாவைச்சொல்லுகின்றேம் தெரிந்துகேள்- எ-று. * (ஞானமுமென்றகவியும் பெற்றணவென்றகவியும் ஒருபெரு மென்றகவியும் முன்றிகழென்றகவியும் ஒருதொடர்) (௰௧)

ஆதியந்தமிலதழி யாதுநின்றபெருமையை
சோதிலுண்டதிலேபெறு மூலமின்றியொழிவது

நீதியின்கணகிலமு மாகியெங்குநிறைதலி
னோதருங்கைதலைசெவி கால்களெங்குமுடையது

(இ-ள்) முதலு முடிவுமில்லாதது அழியாமல் நித்தியமாகச்சலியாமல் நின்றபெருமையையுடையது சொல்லுமிடத்தில் என்றுமுள்ளது இல்லையென்கிறகுற்றமில்லாமற் தீர்வதுசியமிக்குமிடத்தில் எல்லாமாகி யெங்கும்நிறைதலினாலே சொல்ல அரிதாகியகைகள் தலைகள் காதுகள் கால்களிவைகளை எங்குமுடையது-எ-று. (௰௨)

அறுசீரடிஆசிரியவிருத்தம்.

காணுப்புலன்களைனைத்திற்குங் கண்ணுய்நின்றுகாட்டுவது
பேணும்புலன்கடனக்கொன்று மில்லாதியென்றபெற்றியது
பூணும்பற்றுந்தனக்கின்றி யெல்லாந்தானேபொறுக்கின்ற
தாணும்பெண்ணுமலிகுணமு மன்றியேநின்றுகியது

(இ-ள்) காணப்பட்டகண்களெல்லாவற்றிற்குங் கண்ணாகநின்று காட்டுவதுமதிக்கப்பட்ட விந்திரியங்ளொன்றுந் தனக்கில்லாதது எல்லாம்வல்லசுபாவமுடையது சுமக்கிறபிடிப்புத் தனக்கில்லாமல் எல்லாவற்றையுந்தானேசுமக்கிறது தான் ஆணும்பெண்ணும அலியு மில்லாமலே நின்று அந்தமூன்றுமான-எ-று. * (காணப்பட்டவிந்திரியங்களென்றுமாம் அதெப்படியென்னில் அந்தந்தவிஷயத்தை அந்தந்த விந்திரியங்களால் அறியதேகாட்சியாதலால்,) (௰௩)

கலிவிருத்தம்

பூதமைந்தினகத்தினோடு புறத்தினும்பொலிகின்றதிங்
கேதமின்றிநடப்பசிற்பன வாயிருப்பதினின்னதென்
றோதருமபடிநுண்ணித கிய தொன்றதாகியிருந்துமெய்ப்
பேதம்வந்ததுபோலநின்று பிணங்கவும்படுகின்றதே

(இ-ள்) பஞ்சபூதங்களினுடைய வுள்ளிலும் புறத்திலும் பொலியப்பட்டது இவ்விடத்திலேகுற்றமில்லாமல நடக்கிறதுநிற்கிறதாயிருப்பதான சராசரங்களில் இன்னதென்று சொல்லக்கூடாதபடி நுண்ணியதாகியது இப்படி அளவற்றபேதங்களில் நுண்மையாக விருந்தாலும் அனேகமாகாமல் ஒன்றாயிருந்து சரீரபேதங்கள்வந்து அந்தச்சரீரங்களைப்போலத் தானும் அனேகபேதங்களாகநின்று ஒன்றுக்கொன்று சமாதானமில்லாமற் பிணங்கவு மிதை நிச்சயமாகவறிந்தபோதுஎல்லாம் நானேயென்று சமாதானமாகவும் உண்டாகின்றது-எ-று. * பிணங்கவுமென்றவும்மையால் இணங்கவுமென்றதிர் தமுவும் இதை விரிக்கில் வெகுமாம். (௰௪)

அருவமாயதிதூரமாயத ணித்துமாயதனைத்துமா
யருவம்யாவுமளித்துமீள வொழிக்குநாளிலொழிப்பது
பொருவிலாவொளிகட்குமுள்ளொளி யாகியேபொலிகின்றதிங்
கிருமைநீடியஞானமோடது நேயமாகவிசைந்தது

(இ-ள்) உருவமில்லாததாய் அஞ்ஞானிகளுக்கு வெகுதூரமாய் ஞானிகளுக்கு வெகுகிட்டமானது சகலமூர்த்தாளும்உருவங்களெல்லாம் உண்டாக்கித்திரும்பப்போகிற காலத்திலேபோக்குவது ஒப்பில்லாதசோதிகளுக்கு உள்ளேநின்ற சோதியாகியே பொலிகின்றது இவ்விடத்திலே இம்மைமறுமையிலேபெருகிய ஞானமும் அதினுடனேநேயமுமாகப்பொருந்தின-எ-று. * (ஆதியந்தமென்றகவியும்காணும்பலவென்றகவியும் பூதமைந்தென்றகவியும் அருவமாயதென்றகவியும் ஆத்மசொரூபத்தைச்சொன்னதினாலே யொருதொடர்.) (௰௫)

ஆனவிப்பொருண்முன்புரைத்தவவற்றினாலறியும்பொரு
ளூனமற்றமனத்தனுயநல்லுடம்புமற்றவ்வுடம்புசேர்
ஞானமுற்றுமவற்றினாலறியப்படும்பொருணன்மையு
மீனமற்றதிறத்தினோடுசுருக்கமாகவியம்பினேன்

(இ-ள்) இப்படியான இந்த ஆத்மாவானது முன்சொன்ன சரீரஞானங்களினாலறியப்பட்டபொருள் குற்றந்தீர்ந்தமனதுடைய அருச்சுனநல்லவுடம்பு மற்ற அந்தவுடம்பை சொந்தஞானமுதிர்ச்சி இந்தவுடம்பு ஞானமென்றவிரண்டினாலறியப்பட்ட ஆத்மஸ்வரூபமுங்குற்றமற்றவிதத்துடனே சுருக்கமாகச்சொன்னேன்-எ-று, (௰௬)

எள்ளலானதிகழ்ந்தியான்முன்னுரைத்தவிப்பொருளீதெலா
முள்ளவாறுதெரிந்தெனன்பர்தமக்குணர்ந்திடவோதினார்
கள்ளமாதருமாயவேலைகடந்துகாதல்சையின்பமாம்
வெள்ளமாமெனையெய்துவாறெனவேறுகூறவிரும்பினான்,

(இ-ள்) இழிவானதைநீங்கி நான் முன்சொன்ன இந்தஅர்த்தங்களினையெல்லாம் உள்ளபடிதெரிந்து என்னுடையபரதர்தங்களுக்குத்தெரிவிக்க ஓதினபேர்கள் வஞ்சனையான மயக்கத்தைக்கொடுக்கப்பட்டமாயாசமுத்திரத்தைக்கடந்து ஆசையுண்டாக்கப்பட்ட சுகமானவெள்ளத்தையொப்பாகியவென்னையடைவர்களென்றுசொல்லிமேல்வேறேசொல்ல விச்சையானார்-எ-று, * (இப்பொருளீதெலா மென்ளலான திகழ்ந்துள்ளவாறு தெரிந்தனப் பொருளுக்கேற்ப மாறுக.) (௰௭)

கலிவிருத்தம்.

ஓதியவுடம்புக்கு முயிர்க்குமுண்மையா
யாதிகண்டறிபவ ராருமில்லையாற்
றீதிலிவ்விரண்டுமுன் செய்வதேதெனி
னீதியினவற்றினை நிகழக்கூறுவாம்,

(இ-ள்) நாம்முன்சொன்ன வுடம்புக்கும் ஆத்மாவுக்குஞ்சத்தியமாஆதியைக்கண்டு அறிகிறவர்களாருமில்லை யாகையால் இவையிரண்

னும் அநாதிகுற்றமற்ற விந்தவிரண்டும் முன்செய்கிறதேதென்பாயாகில் நியமத்தினாலே அவைகளை விளங்கச் சொல்லுவோம்-எ-று, * (தேகத்தைப் பிரகிருதியென்று உயிரைப்புருஷனென்றுஞ்சொல்லுவாருமுளர் ஆதியை யறியப்படாததினாலே அநாதியென்றது, (௰௮)

நண்ணரியகுணத்தின் வேறின்மைகாட்டலாற்
பண்ணரியவினைகளுக் குடம்புகாரணம்
எண்ணரியதுன்பமோ டின்பமென்றிவை
யுண்ணரியகாரண முயிரென்கின்றதே.

(இ-ள்) சொரூபகுணங்களினுடைய செயலேயல்லாமல்வேறில்லாததைக் குறிக்கிறதினாலே வினைத்தகருமங்களாகிய புண்ணியபாவங்களுக்கு உடம்புகாரணம் இந்தப்பிரகிருதிகுணத்தால்வந்த புண்ணியபாவங்களைக் கொடுக்கப்பட்டதாகநிச்சயித்த சுகதுக்கமென்ற இவைகளையனுபவிக்கிற காரணமானது உயிரென்றுசொல்லப்பட்ட புருஷன்-எ-று * (இதனாலுடம்புசெய்து உயிரனுபவிக்குமென்றது.) (௰௯)

இவ்வுயிரிவ்வுட றன்னிலேயிருந்
தவ்வுடல்பயிற்றிடுங் குணங்களானவை
துவ்விடுமிறந்திடுந் தோன்றுமிக்குண
மெவ்வாறுடையன வென்றிருத்தலால்.

(இ-ள்) இந்தப்பிரகிருதியைக் குற்றமுடையதாகவென்றும், என்னுடையதென்றும், அங்கீகரித்திருக்கிறதினாலே இந்த புருஷனாகிய சீவன் இந்தவுடம்பிலிருந்து அந்தவுடம்பை நடத்தப்பட்ட பிரகிருதிகுணங்களான புண்ணியபாவங்களால்வந்த சுகதுக்கங்களையனுபவிக்குமரணமாகு சனனமாம்-எ-று, * (அங்கீகரியாமலனுபவிக்கிற ஆகமானுபவத்தைவிட்டு அங்கீகரித்ததினாலே சுகதுக்கங்களை யனுபவித்துச் சனன மரணப்படுமென்றது,) (௨௰)

உண்பனயாவையு முண்கின்றானுமெய்க்
கண்கொடப்பொருளையுங் காண்கின்றானுமா
னண்பவப்பொருட்குமொத் திருக்குநாதனு
மெண்செய்திவ்வுடம்பிலே நின்றவீசனே.

(இ-ள்) தோமா அனுபவிக்கப்பட்ட சகலத்தையுமனுபவிக்கிறவனும் உடம்பிலிருக்கின்ற கண்ணைக்கொண்டு எந்தப்பதார்த்தங்களையுங் காண்கின்றவனும் எந்தப்பதார்த்தங்களுக்கும் சமமாயிருக்கின்ற கர்த்தனும் இந்தவுடம்பிலே கர்த்தனென்று சங்காரஞ்செய்துநின்ற சீவனுன்-எ-று. * (ஈசனே-சீவன்.) (௨௧)

இப்படியுயிரையு மியாக்கைதன்னையு
மெய்ப்படவறிந்தவன் வேட்டைவதுசார்ந்

தொப்பனவன்றியே யொழுகிவாழினும்
பொய்ப்படுபிறவியின் மறுத்தும்போகிலான்.

(இ-ள்) இப்படி சீவனையும், உடம்பையும், நிச்சயமாக அறிந்தவன் வேண்டியவைகளைத் தனக்கென்றேற்புகிறதல்லாமல் அனுபவித்துவிக்தியமாய்க்கூடிச்சுகித்தாலும் பொய்யாகவுடைய பிறவியிலேதிரும்பவும போய்ப்பிறவான், மோக்ஷத்தை யடையான்-எ று. * (அறிந்தவன் ஞகியானனென்பதுகருத்து. ஆகலால் அப்பிரகிருதியால் அநுபவம்வந்தனுபவித்தாலும் தனதென்று அகங்கரியான் அதனாலே மோட்சமுறுவனென்பது) (௨௨)

செறியுமிப்பொருளையே சிலர்தியானமாங்
குறியினுற்றம்முளே கண்டுகொள்வர்க
ளறிவருஞ்சாங்கிய யோகமாகிய
நெறியினுலெங்குமாய் நிற்பக்காண்பரால்.

(இ-ள்) சுவாமான விந்த ஆத்மசொரூபத்தைச் சிலர் தியானமானகுறியினாலே தங்களுடையமனதிலே கண்டுகொள்வார்கள் சிலர் அறியப்படாத சாங்கியயோகமாகிய மார்க்கத்தினாலே உள்ளும்புறம்பும் எங்கும்பூரணமாய் நிற்பக்காண்பார்கள் எ-று. (௨௩)

இருமையுமறிவதற் கிடமிலாதவர்
ஒருமகன்றெய்வமென் றுரைத்தவொன்றையே
யருமையிலருச்சனை செய்வராதலான்
பெருமையினவர்களும் பிறவிமேவிடார்

(இ-ள்) இப்படித் தியானமென்றும், சாங்கியயோகமென்றும்-சொல்லப்பட்ட இரண்டையும் அறிகின்றதற்கிடமில்லாதவர்கள் ஒருகுருவானவர் தெய்வமென்றுசொன்ன வொன்றைத்தானே யருமையினாலே பூசைசெய்வார்கள் - அந்தப்பூசையினுடைய பெருமையினாலே அவர்களும் பிறவியைச்சேரார்கள் - ஆத்மாவைக்காண்பார்கள்-எ று. * (பூசிக்கவரும்தெய்வம் காட்டுவதினாலே ஆத்மாவைக்காண்பார்கள என்பதாம். (௨௪)

போவனநிற்பன யாக்கைபூண்டுகொண்
டியாவருந்துயர் படுகின்றவீதெலாம்
மேவருமுயிருடல் வேறுபாட்டினை
யாவர்கண்டறிவதோ ரறிவிலாமையே.

(இ-ள்) நடத்துகின்றது நிற்கிறதுமான சராசரமாகிய தேகத்தைத்தரித்துக்கொண்டே யாருந்துக்கப்படுகின்ற இவையெல்லாம் மனம்பொருந்துதலாக வரப்பட்டசீவனும் உடம்புமான பிரகிருதிபுருஷக்

கூட்டம் இந்தப்பிரகிருதி புருஷர்களுடையவேறுபாட்டை ஒப்பில்லா ஞானமில்லாத அஞ்ஞானத்தையுடையவர்கள்யார் கண்டறிகின்றவர்கள் காணமாட்டார்கள்-எ-று. (உ௫

கெடுகின்றபூதங்க டோறுங்கெடாத
வடிவின்றிநின்ற மறைப்பொருடன்னை
நடுவென்றுகண்டவ னல்லனவெல்லாங்
கடுகின்றனையொழி யாவகைகண்டான்.

(இ-ள்) கெடுகின்ற பஞ்சபூதாத்துமாக்கள் தோறும்பிறந்து கெடாமல் குற்றமில்லாமல் நிறைந்திருக்கின்ற வேதப்பொருளான வஸ்துவானதைப் பொதுவென்று கண்டபேரெல்லாம் நல்லவர்களென்று அப்படிக்கொத்தபேராணுவுக்கணுவாயெங்கும் நீங்காமல் இருக்கின்றவகையைக் கண்டவர்களென்றுஞ்சொன்னார் ஸ்ரீகிருஷ்ணதேவர்என்றவாறு.

ஒத்தெங்குமாய வொருமைப்பொருளினை
யத்தன்மையினா லறியுமவனே
செத்தும்பிறந்துந் திரியாவகைதனை
மெத்தன்மையிலே புகவிடுகின்றான்.

(இ-ள்) சமமாகியெங்குமாகியஒப்பில்லாமையையுடையஆத்மாவையெல்லாந் தானாச்சமமாக்கி எங்குந்தானாகிய ஒருமையானசுபாவத்தினாலறியப்பட்டவனை செத்தும்பிறந்துந் திரியாதபடிக்குந் தன்னைச்சத்தியசுபாவத்தினாலே புகுதவிடுகின்றவன்-எ-று. * (சமமாவது அணுவுக்கு அணுவாய் மகத்துக்கு மகத்தாயிருப்பது சத்தியசுபாவமாவது பிரமசுபாவம், பிரமமொன்றுதவிர மற்றவெல்லாமசத்தியமாதலால் பிரமத்தைசத்தியமென்றது சுபாவமாவது எல்லாந்தானாய் ஒன்றிலுங் கூடாததாய் அசையாததாய் சைதன்னியமாய் நின்மலமாயிருப்பது, இன்னஞ்சொல்லிலவிரிவாம், பிரமத்தையே ஆத்மாவென்பது.) (உ௬)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உணரவிகாரியென்றும் வினையெலாமுடம்பினோடே
புணர்வனவென்றுகண்டான் பொய்யிலாமெய்மைக்கண்டா
னிணர்மலர்முடியாயெல்லா வினைகளுஞ்செய்துமீசன்
குணமிலியாதலாலே யவற்றொடுங்கூடிநில்லான்.

(இ-ள்) சைதன்னியமான ஆத்மாவை விகாரங்களில்லாத அவிகாரியென்றும், கருமங்களெல்லா முடம்போடே பொருந்துவதென்றும், கண்டவனே பொய்யில்லாத மெய்யைக்கண்டவன் பூங்கொத்துக்களைத்தரித்த கிரீடத்தையுடைய அருச்சுனா இப்படி அதிகாரியான

ஆத்மாவுடம்போடேகூடியந்தவுடம்பாலே கருமங்களைச் செய்தாலு ம குணமில்லாத நிர்க்குணனுடையபடியினாலே அந்தவுடம்போடுங்கரும த்தோடுங் கூடிசில்லாது-எ-று. * (உணர்வு இவ்விடத்தில் ஆத்மா இ தனாலே ஆத்மாஉடம்போடுங் கருமத்தோடுங்கூடாமல் நிற்பனென்று ம் அந்தவுடம்புங்கருமமும் ஆத்மாவைக்கூடிநிற்குமென்றும்அறிவது

உன்னியவானமெங்கு மொழிவறநிறைந்தவேனுந்
தன்னுடநுண்மையாலே பிறரொடுஞ்சார்வதுண்டோ
பன்னியவதுபோலெங்கும் பரந்துளனேனுமங்கு
மன்னியவீசனந்த வுடம்பொடுமருவமாட்டான்

(இ-ள்.) எல்லாரும்நினைத்த ஆகாயமானது அணுவத்தனையிடமானு லு மில்லையென்பதுதீர வெங்குந்நிறைந்ததானாலும் தன்னுடைய சூ ட்சுமத்தினாலே மற்ற வாய்வு அக்கினி அப்பு பிருதிவு என்றநாலுபூத களோடுங் கூடுவதுண்டோ அந்தநாலும் இந்த ஆகாசத்தைக் கூடா மையுண்டோ இரண்டுமில்லையே, இப்படி வேதங்கள் முறையிட்டன போல ஆத்மா வெங்கும் பரந்திருக்கின்றவனானாலும் உடம்பான அந் தவிடத்திலிருக்கின்ற ஆத்மா அந்த வுடம்போடுங் கூடமாட்டான் எ-று. * (ஒழிவாயெங்கும் நிறைந்தவெனமாறுக, ஆகாசம் வந்தவிடத் திற் பிறவென்றதனாலே மற்ற நாலு பூதமுமாயின,ஆகாசத்தை நாலு பூதமு மாதாரமாகவுடையதுபோல ஆத்மாவை யாதாரமாக வுடைய து உடம்பென்ப தருத்தாபத்தி,ஈசனிவ்விடத்தில் ஆத்மாயென்பது)

இரவிதானொருவனேயாய் நின்றிந்தவுலகத்தோங்கும்
விரவியவிருளைநீக்கி விளக்குறுமாறுபோலத்
தரவியாவருமுன்னில்லா சராசரருடம்புதோறும்
பரவியானுரைத்தமாய னொருவனேபரந்துநிற்பான்.

(இ-ள்) சூரியனானவன் தனக்கிரண்டாவதில்லாமற் றானொருவனே யாகிநின்று இந்தவுலகத்தி லெங்குங்கலந்த விருளைப்போக்கிப் பிரகா சிக்கிறபடிபோல முன்னே தன்னையுண்டாக்க யாருமில்லாதவனாய் இ ப்போது நான் விரித்துச்சொன்ன மாயனாம்,ஆத்மாவானவன் தனக்கி ரண்டாவதில்லாமல் தானொருவனுமே சராசரங்களுடையவுடம்புகள் தோறும் பரந்துநிற்பான்-எ-று. * (தரவியாவருமில்லாமாயனெனமா றுக,இன்னமும் முன்தரவியாவரு மில்லாமற்றானே தந்தசராசரருட ம்புதோறுந் தானொருவனே பரந்துநிற்பானென்றுஞ் சொல்லலாம.)

ஓரின்மேலாகிநின்ற வுயிரினோடுடம்புக்குள்ள
பேரினோடிறப்புமூப்புப் பிறப்பெனுமிவறறைநோய்ப்

பாரின்மேலறிவார்வீடு பற்றினாரென்றான்பார்த்தன்
தேரின்மேனின்றவேதச் சிரத்தின்மேலிருக்குஞ்சீரோன்

(இ-ள்.) விசாரித்தறியில் எல்லாவற்றிற்குமேலாகிநின்ற ஆத்மாவை அதுவுடனே உடம்புக்குள்ளபேறுடனே பிறப்பு சாவு மூப்புயவ்வன மென்று சொல்லப்பட்ட விந்தநாலுஞ் சாவு கீழ்பிறப்பாகிய வினைகளைவேறாகப் பகுத்துப் பூமியினிடத்தி லறிகின்றவர்களே மோட்சத்தை யடைந்தவர்களென்றார் அருச்சுனனுடைய தேரின்மேலேநின்ற வேதச்சிரசின்மேலிருக்கப்பட்டசிறப்பையுடையஸ்ரீகிருஷ்ணசுவாமி()

௰௩-வது, பிரகிருதிபுருடயோக-அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

——(*)——

ஆ-அத்தியாயம்-௰௩-க்கு-கூடியசெய்யுள்-௩௱௩.



உ

பதினான்காவது

# குணத்திரயயோக அத்தியாயம்.



கலிவிருத்தம்.

செய்யமாமலர் மேலுறைசெல்வியும்
வையமாமட வாளுமகிழ்ந்ததோ
ளையன்மெய்யயன் பாலடியோமெலா
முய்யமீள வுரைக்கத்தொடங்கினான்

(இ-ள்.) சிவந்த பெரிய தாமரைப்பூவின்மேலிருக்கின்ற லட்சுமியும் அறியாமையையுடைய பெரிய பூமிதேவியுங் கூடிமகிழ்ந்த திருத்தோள்களையுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமி கிருபையினாலே அடிமையானாமெல்லாம் பிழைக்கும்பொருட்டாகத்திரும்பவும் அந்தசசத்தியமான ஆத்மாவை சொல்லத்தொடங்கினான்-எ-று * (லட்சுமியையும் பூமிதேவியையும் ருக்குமணியென்றுஞ் சத்தியபாமை யென்றுஞ் சொல்லலாம். (க)

நல்லதாமறிவிதி யாதினுநல்லது
கல்லநீர்தவத் தோர்க்கறிவாயது

மல்லவாகிய தொண்முடிமன்னியான்
சொல்லமேயவ தன்றுனிவாவதே

(இ-ள்) முன்சொன்ன ஞானத்திலும் நல்லதான ஞானமெல்லாவற்றிலுநல்லதாங் குற்றந்தீர்ந்ததவம்பண்ணுகிறரிஷிகளுக்குஅறிவாகியது மற்றபேனாயிச்சித்த தோளேயுங் கிரீடத்தையுமுடையராசாவே, அந்த ஞானத்தினுடைய உறுதியானதைஇப்போதுநானுக்குசொல்லப்பட்டது-எ-று (௨)

இன்னதன்மையின் ஞானத்தியனையா
லென்னைவந்தடைந் தாரிவ்வுலகினில்
பின்னைவந்தடைந் தாரிறவாரதன்
றன்மையாசிதனி லாங்சதுசாற்றுவாம்.

(இ-ள்) இந்தசுபாவமான இந்தஞானசுபாவத்தினுலே வந்து என்னையடைந்தபேர்கள் பிறகு சிருஷ்டிகாலத்தில் இந்த பிரபஞ்சத்திலேவந்து பிறவார்கள் பிரள்யகாலத்திலே சங்காரத்துக்குங் கூடார்கள் அந்தஞானத்தினுடைய சுபாவமென்னவென்றாலது சொல்லுவோம் எ-று, * (ஆங்கு அசை-பின்னரிவுலகெனமாறுககாலத்தோன்றேவெழுவாய்வந்தடைதலாவது அஞ்ஞானத்தைநீங்கி ஞானத்தில் வந்தென்னையடைதல், (௩)

மூதவாவென் குணமவைமூன்றினும்
பேதமாகப் பிரகிருதிதன்னிலே
காதலால்வைப்ப னியான்கருவைகருப்
பூதமியாவும் புலப்படுகின்றதே

(இ-ள்)பழைய தவசையுடையஅருச்சுனஎன்னுடையகுணமூன்று அந்தமூன்றிலும் பேதமாகப் பிரகிருதியிலே நான் விசுவாசமாகக்கருவைபபேன் அந்தகருவைசகலபூதஙகளுங் கெற்பிக்கிறது (௪

இந்தவண்ணத் தினுலிவ்வுலகிடை.
வந்துயோனியெல் லாம்வருவித்திடுந்
தந்தையாயிவை யீன்றளிகின்றதா
யந்தமாமலர் மேலயனுமென்றே

(இ-ள்)இந்தவிதத்தினுலே இந்தப்பிரபஞ்சத்தினிடத்திற்பிரகிரு[illegible] வந்து சகலயோனிகளையும் வரப்பண்ணுகிற தகப்பனுகி அந்தயோ[illegible] களைப்பெற்று ரட்சிக்கிறதாகிய அந்தப்பெரிய தாமரைப்பூவின்மே[illegible] ருக்கிற பிரமதேவனுகும் எ-று (௫

என்றுமுன்னங் குணமென்றியம்பிய
மூன்றுமூலப் பிரகிருதிதன்னிலே

தோன்றியுள்ளன சொல்லொருவைப்பற்றி
யூன்றிநிற்பவவற்றையுணர்த்துவாம்,

(இ-ள்)மூன்பொருந்தின குணமென்றுசொன்ன மூன்றுமூலப்பிரகிருதியிலே தோன்றியுளளது அந்தகுணங்களானவை பழைய ஆத்துமாவை சனனமரனத்துக்கு ஏதுவாகப்பிடித்து ஊன்றினிற்பது அந்த மூன்றுகுணத்தையும் அறிவிப்போம்-எ று; (சா)

சத்துவம்மிர சத்தாமதமென்
வுய்த்துவந்த பெயரையுடையன
பெத்துவந்து வளங்கருகிற்பன
மெய்த்துவந்தவற றின்செயல்வேறுகேள்

(இ ள் சத்துவகுணமென்றும் இராசதகுணமென்றும்தாமதகுணமென்றும் வைத்துவந்தபெயரையுடையது எந்தசத்துவந்துவங்களையுந்தரமாட்டுவது நிச்சயித்துவந்தஅந்தமூன்றுகுணத்தினுடையதொழில்களைவேறுவேறாகச் சொல்லுவோம்கேள் அருச்சுனா-எ-று *(துவந்துமென்கிறதை பெந்தமென்று வழக்கமாகச்சொல்லுவார்கள்) (எ)

பற்றுமாசின்மை யாய்ப்பளிங்கொப்பன
வுற்றநல்ல வானதுண்டாக்குவ
தெற்றுமின்ப மலர்துன்பமென்பது
சற்றமில்லது சற்றுவமாவதே.

(இ ள்) பற்றப்பட்ட ஆசையாகிய களங்கமில்லாமையினாலே பளிங்கையொப்பாக நின்மலமானது உறுதியானஞானத்தையுண்டாக்குவது எதுவந்தாலுஞ் சுகமில்லாமல் துக்கமென்பது சற்றுகிலுமில்லாததுசத்துவகுணமாவது-எ-று. (அ)

ஓதுமாசையி லேபிறந்துள்ளது
தாதுகற்புரை யுன்னிறஞ்சார்ந்தது
பேதுசெய்வினை யோடறிவாய்ப்பின்னர்க்
கேதுவாய விராசதமென்றதே.

(இ ள்) சொல்லப்பட்டஆசையிலே பிறந்திருக்கிறது தாது கற்புரையுன்னிறஞ்சார்ந்தது மயக்கமுஞ்சொல்லப்பட்டகர்மத்தோடு அறிவாய் பிறகுவரப்பட்ட மரணசனனத்துக்கு ஏதுவாகியது, ராசதமென்கின்றகுணம்-எ-று. (கூ)

குறிகொளாத மயக்கமுங்கோதிலா
நெறிகளான கேழ்தலுங்கித்திரை
செறிதலானது மென்றிவற்றுற்றின்ன
மறிவைமாய்க்கு மதாதமமாவதே.

(இ-ள்) கேட்டுங்கேட்டதைக்கண்டும் மெய்யென்று ஒப்புக்கொள்ளாதமயக்கமுங் குற்றங்குடியாயிருக்கின்ற மார்க்கங்களானதைநடத்துகின்றதும் நித்திரை மிகுதலானதுமென்று சொல்லப்பட்டதுவை கனிருலே நிச்சயமாக ஞானத்தையழிக்குமது தமோகுணமாவது-எ-று

கலிநிலைத்துறை.

வாழுஞ்சத்துவமற்றவில் விரண்டையுமறைத்துந்
தாழுமற்றவவ்விரண்டுமேதமோகுணங்களைப்பின்
வீழுசத்துவதவங்களவ் விராசதம்வினையி
னூழிமற்றிவையிரண்டுதாழ்ந் தொன்றுமிக்குளவாம்

(இ-ள்) சத்துவகுணமானது ஒருவேளை அந்த ராசத்தாமததமானவிரண்டையுமறைத்துத் தானேபிரசலமாகவாழும் அந்தத்தமோகுணமானதொருவேளைபிரபலமாக எழும்பினுல் அந்தசத்துவராசதமிரண்டுமடங்கும் அந்தராசகுணமொருவேளை மிகுந்ததுண்டானுற் சத்துவகுணமுந் தமோகுணமுமிரண்டும் விழுமிவைகள இரண்டுந் தாழுந்து ஒன்று அதிகமாகி இருக்கிறது பழையவிதியினுல் எ-று * (மற்ற ஆசை) (௰௧)

கலிவிருத்தம்.

உரைசெயுந்தத்துவ முன்பந்துய்த்திடு
மிரசதவினைகளோ டறிவையார்த்திடும்
புரைசெய்திவ்வழுக்கையே பொருந்திப்போர்த்திடும்
தரைசெறிபுகழினுய் தம்மென்கின்றதே.

(இ-ள்) பூமியெங்கும் நெருங்கிய கீர்த்தியையுடைய அருச்சுனு சொல்லப்பட்ட சத்துவகுணமானது சுகத்தையனுபவிக்கப்பண்ணும் ராசதகுணமானது கருமத்துடனே அறிவைக்கட்டுந் தாமதமென்ற குணமானது குற்றத்தைச்செய்து இந்த அஞ்ஞானத்தைமூடும்-எ-று (௰௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஒத்துநல்லறிவுமிக்க யாதொருபொழுதப்போது
சத்துவந்தழைத்தபோதாங் தாங்கரும்வினைகளைக்கொண்
டெய்த்தவத்தாசைகூற வுலோபம்வந்துய்க்கபோது
மத்திமகுணமேசால வளர்ந்ததென்றறிநீமன்னு.

(இ-ள்) ராசாவே சகல இந்திரிய அந்தக்கரணங்களிலுஞ் சமமாகவொத்த ஞானமிருந்தபொழுதெப்பொழுதோ அப்பொழுதசத்துவகுணமிருந்ததுவளர்ந்தபொழுது தாம்செய்து முடிக்க அரிதான கருமங்களையேசெய்து முடிப்போமென் றுட்கொண்டுவைத்துஅதிலாசைமிகுதியாக லோபம்வந்து கூடியிருந்தபோது சத்துவதமோகுணங்களுக்கு நடுவான ராசதகுணமேமிகுந்து வளர்ந்ததென்றறிவாய்-எ

௶. * (லோபமும் சஞ்சலகருமமும்காமியகருமமும் விஷயவிச்சை யும்வந்தபோது ராசதகுணமென்றறிவது ) (௰௨)

தக்கதுதகாதென்றொன்றைத் தானறியாதபோது
அக்கருமங்கண்மாட்டு மிகழ்ச்சியோடிருக்கும்போது
மொக்குமெய்ம்மயக்கத்தோடு முறக்கமவந்துற்றபோது
மிக்கதுதமமேயென்று விசையநீயறியவேண்டும்.

(இ-ள்)அருச்சுன ஒருபதார்த்தத்தை இதுதகுமானது இதுதகாத தென்று தான்பகுத்தறியாதபோதும்ஏந்தக்கருமங்களிடத்திலும் வெறுப்புடனே யிருக்கும்போதும உடம்பிலொத் திருக்கப்பட்டமயக்கத்துடனும் நித்திரைவந்தபோதுந் தமோகுணமே அதிகமானதென்று நீயறியவேண்டியது-எ-று. (௰௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

தக்கசத்துவமேமிகழ்ந்தபோதிறந்தோர்
தெய்வயோனிகளிலேசாவார்
மக்களிற்பிறப்பாரிராசதம்வந்து
விளைந்தபோதுடம்பினைத்துறந்தோர்
மிகவெழுதமமேவிளைந்தபோதிறந்தோர்
விலங்குசாதிகளிலேவீழ்வார்
ஓக்கமற்றிவற்றின்பலன்களுந்தெரிய
வுரைக்கின்றேனிவற்றையுமுணர்வாய்

(இ-ள்.) தக்கதான சத்துவகுணமேநடக்கிறபோது செத்தவர்கள் மேலான தெய்வயோனிகளிலே யடைவர்கள் இராசகுணமே வந்துண்டானபோது தேகத்தைவிட்டவர்கள் மனிதயோனிகளிலே பிறப்பார்கள் மிகுந்து எழும்புகிறதமோகுணமோ யுண்டானபோது செத்தவர்கள் மிருகசாதிகளில்வீழ்வாாகள் இதனுடனேகூடி இந்தத் திரிகுணத்தினுடையபலன்களுந் தெரியச் சொல்லுகிறேன் இதையுமறிவாய் அருச்சுன-எ-று. * (சத்துவமே தம்மே யென்றதனால் இராசதமேயென்றுவருவித்தது ஏகாரமேதுக்கென்னில் ஒவ்வொன்றில்மூன்றுகுணமுங்கலந் தென்பது குணமாதலாலே எங்கே தனிக்குணத்தைச்சொன்னது கலந்துதிர்ந்தது திரும்பத்தனியாகவு மிருக்குமோவென்னில் தக்கசத்துவமென்றதனாலும் மிகெழுதமமென்றதனாலும் கலந்தகுணத்திலும் மூன்றிலொன்று எதுமிகுந்ததோ அதுவே முதலாக மற்ற இரண்டுந்தாழுகையால் மிகுந்ததைக்கொண்டு ஏகாரம்வந்தது வீழ்வாரென்றதனால மேலோகத்திலேநித்தெய்வயோனியிற் பாரம்பரையாகவே பிறப்பாரென்றும் மத்தியலோகமான பூமியில் மனிதயோனியிலே தானே பாரம்பரையாகப் பிறந்து சுழலுவாரென்றும் கீழான மிருகயோனிகளில் வீழ்ந்து மேல

ன மனிதயோனிக்கும்வாராமற் பாரம்பரையாகத்தாழ்ந்துவீழ்வாரெ
ன்றது இன்னம்விரிக்கில் வெகுவாம். (௰௫)

அருங்குணமாயசத்துவபலமா மழுக்கறலிரசதபலமாம்
பெருந்துயருழற்றல்தமோபலமாகும் பேதைமையேசியமுறையே
பொருந்தியவிந்தக்குணங்கண்மூன்றாலும் பூதகாலங்களுக்கெல்லாம்
வருந்திருவாயஞானமோடுலோப மயக்கமென்றின்னணம்வருமால்.

(இ-ள்) அரிதானகுணமாகிய சத்துவத்தினுடையபலமாகும் அழுக்கறலான நின்மலமாயிருப்பது ராசதகுணத்தினுடையபலமாகும் பெரியதுக்கத்தை யனுபவித்தல் தமோகுணத்தினுடைய பலமாகும்மூடத்துவம் இப்படிசொன்ன வரிசைப்படியே இந்த மூன்றுகுணங்களினுலும்பொருந்தின சிவசரீரகூட்டங்களுக்கெல்லாம் வரப்பட்டதென்னவெனில் சாத்துவிககுணத்தினலே சிறப்பாகிய ஞானமவரும் இராசதகுணத்தினலே லோபம்வரும், தாமதகுணத்தினலே அஞ்ஞானம் வரும்-எ-று. (௰௬)

சத்துவமார்ந்தர்பரகதியடைவார் தமத்துளோரதோகதிசார்வார்
மதிமருணதோராயினோர்நடுவின் மானிடப்பிறவியாய்வாழ்வா
ரித்திறமாயவுருவமேவிகாரி யானவிகாரியென்றவற்றை
மெய்த்திறனுகவறிந்தவனறிந்த பொழுதிலேவீட்டின்பமடைந்தான்

(இ-ள்) சத்துவகுணமுடைய மனிதரான சாத்துவிகர்கள் மேலான மோக்ஷத்தையடைவார்கள், ராசதகுணத்தோரானவர்கள்மத்தியலோகத்திலே மனிதப்பிறவியாயிருப்பார்கள, தமோகுணமுடையவர்களோ மேல்நடுவென்ற இரண்டுகதியும் அடையார்கள் இந்தவிதமானதேகமேவிகாரி நான் அவிகாரியென்று தன்னையுந்தன்னுடமையையுமான இந்தவிரண்டையும் நிச்சயப்படியாக அறிந்தவன்அறிந்தபொழுதேமோக்ஷசுகத்தையடைந்தான்-எ-று. * (சாத்துவிகாகள மோக்ஷத்தையடைந்தார்களெனவே இனித்திரும்பார்களென்றும் ராசதகுணத்தராய் மனிதராயிருப்பாரெனவே சொற்காதிபலன்களுக்குப் போகின்றதும் பூமிக்குமனிதராகவந்து சுகிப்பதுமாகத்திரிவரல்லது தெய்வயோனியுமோட்சமும் பெறுர்களென்றும் மிருகயோனியும் அதோகதியும் அடைவார்களென்று மற்றுளோருங் கதிசாராரெனவே மிருகயோனியும் அதோகதியும் அடையுமென்பது அருத்தாபத்தி ) (௰௭)

உடம்புடனிருந்தேயுனாத்தவிக்குணங்கள்
மூன்றையுமுள்ளவாறறிந்து
கடந்தவன்பிறப்புமூப்பிறப்பாதி
யாகவேகட்டுனாககின்று

விடம்புரையிதிம்மையாவையுங் கடந்து
  வீட்டின்பம்விளைபவனென்றுந்
தடங்கடலிடையேவளர்ந்தவர்தமக்கு
  வேறிதுதனஞ்சயனுரைத்தான்

(இ-ள்) ஆத்மாதேகத்தோடிருந்தே நான் சொன்ன இந்தமூன்றுகுணங்களையுமுள்ளபடியறிந்து கடந்தவன்பிறப்பு மூப்புச்சாவுமுதலாகச்சொல்லுகின்ற நஞ்சையொப்பான எல்லாத் துக்கத்தையுங்கடந்து மோட்சசுகம் விளைக்கின்றவனென்று பெரியதிருப்பாற்கடலின்மேலே திருக்கண்வளர்ந்தருளிய ஸ்ரீகிருஷ்ணசுவாமிசொன்னார் அவருக்குவேறேயிந்தச்சொல்லை அருச்சுனன் சொன்னான்-எ-று. (௰அ)

கண்ணியலுலகிற்கடப்பரிதாய குணங்கண்மூன்றையுங்கடந்துயர்ந்த
புண்ணியரியல்புமவர்களையறியுங் குறியையுமடிகளின்றருளென்ன
வெண்ணரியவுலகுமுலகில்வாழுயிரு மிருவினையாக்கையுமாகப்
பண்ணியுமழித்துமேவிளையாய பிரமம்வேறிவ்வகைபணித்தான்.

(இ-ள்) இடமேசுபாவமானவுலகத்திலே யாராலும் கடக்கப்படாத மூன்றுகுணங்களையுங்கடந்து மேலானநல்லவர்களுடைய சுபாவமும் அவர்களையறியப்பட்ட குறியையுந் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று அருச்சுனன்சொல்ல அதற்குப்பெரியவர்களாலே யெண்ணமிட்டவுலகமும் உலகத்திலேவாழப்பட்ட சீவனும் நல்வினைதீவினையானகருமமுமுடையதேகமும் இப்படியாகவுண்டாக்கியும் அழித்து மிதுவே பொழுதுபோக்குதலாக விளையாடப்பட்டமேலான ஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் வேறேயிந்தப்படிசொன்னார்-எ-று. (௰௯)

வாய்மையவல்லாற்குணமவைமூன்றின்
  வருகின்றகாரியமாய
தூய்மையுந்தொழிலுமயக்கமுமென்று
  சொல்லியதுறையிவைமூன்றுஞ்
சேய்மையவென்றுபெறாதபோதிரங்கல்
  பெற்றபோர்மகிழ்தலசெய்யாதான்
தாமயலாகாக்குணங்களோடிருந்தே
  யவற்றினாலசலிப்பிக்கப்படாதான்.

(இ-ள்,) குணமான அந்தக்கரணமூன்றினால் வருகின்ற காரியமாகிய பரிசுத்தமுங்கருமமுமறியாமையுமென்று சொல்லப்பட்ட இந்த மூன்றுவிதமும் பெறக்கிடையாதபோது தூரத்திலிருக்கின்றது கிட்டவில்லையென்று விசாரப்படுதல் பெறக்கிட்டக்கிடைத்தபோது விட்டுப் போகாததைப்போல அவமானஞ்செய்தல் இந்தயிரண்டும் வாயினாலே செய்யாமலிருக்கிறதுமல்லாமல் மனதினாலுஞ் செய்யாதவ

ன் தாங்களன்னியமாகாமல் ஆத்மாவோடு நீயேனாவென் றிருந்தகு ணங்களோடுகூடியிருந்தே யந்தக் குணங்களாலே சலிக்கப்படாதவ ன்-எ-று. (உ௰)

கலிவிருத்தம்.

மானமவமானம்வரு மின்பமிடர்மண்பொன்
னுனமகிழ்வப்பிரிய மன்பர்பகையானே
ருனவுரையோடுபுக ழூற்றபொழுதப்பா
னீனமொருசின்றகுண மானவையிகழ்ந்தோன்

(இ-ள்.) வரப்பட்டதானவெகுமானமவமானஞ்சுகதுக்கம் மண்பொ ன் சந்தோஷம் கோபம் தோழர் பகையர் நிந்தைகீர்த்தி இவைகளடை ந்த பொழுது சமமானவன் குற்றமடைகிற குணமானதைவெறுத்தவ ன்-எ-று * (சந்தோஷக் கோபத்தை பிரிய மப்பிரியமென்றுந் தோ ழர் பகைஞரைச் சத்துரு மித்துருவென்றும்நிந்தையை அபகீர்த்தி யென்றுஞ் சொல்லுவார்கள்என்ன மண்ணேடென்றுஞ் சொல்லாம்.)

இப்பரிசினல்வரு குணங்களையிகழ்ந்தே
மெய்பருவமாயபெரு வீடுபெறுகிற்பா
ரெப்பரிசினுமிடை யின்றியெருமன்ப
லொப்பவரிலாதவெனை யுன்னுமவர்கண்டாய்

(இ-ள்) இந்தவிதத்தினாலே வரப்பட்ட குணங்களைக்கடந்தே குண நீதனுகிச் சத்தியமான பருவமாகிய பெரியமோட்சத்தைப் பெறமாட் டுவார்களெந்தவிதத்தினாலு மிடைவிடாம லெழும்பின அன்பினாலே ஒப்பானவர்களில்லாத என்னை நினைக்கிறவர்கள் கண்டாயருச்சுனா -எ-று, * (உரைக்குப் பின்னிரண்டு பாதத்தையு முன்னாகவு முன்னி ரண்டுபாதத்தையும் பின்னாகவுமாறுக.) (உஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஒழியாதென்றுமியாவர்க்கு மியானேயுணர்த்திவருகிதலா
லழியாவறிவுங்கெடாவீடுங் கேடிலின்பமானதுவு
மழியாவரமுமென்னுள்ளே யளவாகாநின்றனவென்றுன்
சுழியாநின்றபெருவெள்ளத் திடையேபண்டுதுயில்கொண்டான்

(இ-ள்) எல்லாருக்கும் நானேவிடாம லென்றைக்கு முபதேசம் பண்ணி வருகிறதினாலே கெடாதஞானமுங் கெடாத மோட்சமுங் கேடில்லாத சுகமானதுங் கெடாததருமமும் என்னுள்ளே யுண்டா கிறதென்று சொன்னர் ,முற்காலத்திலே சுழித்து நின்ற பிரளயாந் தப்பெரிய வெள்ளத்தினிடத்திலே ஆலிலைமேலே பள்ளிக்கொண்டரு

ளிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி எ-று * (எல்லா மூணடாகிற தென்னுள் ளேயாகையா லெல்லாவற்றிற்குநானே ஆதாரமுங் காரணமுமென்ற து.) (௨௭)

௰௪-வது, குணத்திரயோக அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

———(*)———

ஆ-அத்தியாயம்-௰௪-க்கு-கூடியசெய்யுள்-௪௱௰௨

௨

பதினைந்தாவது

# புருஷோத்தமயோக அத்தியாயம்.

———

கலிநிலைத்துறை

சாயையன்னவெவ்வினைத் தளையறுக்கவோதகவில்
பேயையின்னுயிர்செகுக்க வோபிள்ளையாய்வளர்ந்தான்
வேயையொன்றியவறி சிலைவிசையற்குமீள
மாயைதன்னையோர்மர மொக்கவருணிக்கலுற்றான்

(இ-ள்) நிழல்போலத்தொடர்ந்த கொடுமையுள்ள கருமத்தை யறு க்கவோ கொல்லத்தக்க பூதகியென்றபேயின் இனியசீவனைக்கொல்ல வோ குழந்தையாய் இடையர் சேரியிலேவளர்ந்த ஸ்ரீகிருஷ்ணசுவாமி மூங்கிலைப்பொருந்திய கட்டுதலையுடையகாண்டீபமென்ற வில்லையுடை ய அருச்சுனனுக்கு மாயையை ஒருமரத்தையொப்பாகவருணிக்கத்து வக்கினார்-எ-று. (௧)

கலிவிருத்தம்.

வேர்மேல்துதலைகீழது வீவில்லதுவேதத்
தேர்மேவியவிலைமேவிய தியாரும்புகறலினு
லார்மேவியவசுவத்தம தெனவேயரசதனின்
பேர்மேவியபெருமாயைசெய் பிறவிப்பெருமரமே.

(இ-ள்) மேலே வேருள்ளது, கீழே தலையுள்ளது, அழிவில்லாத து, வேதமாகிய அழகுபொருந்திய இலைகூடியுள்ளது, யாருஞ்சொ ல்லுகிறதினாலே நிறைவுபொருந்திய அசுவத்தமென்றே சொல்லப் பட்ட அரசமரத்தின் பெயரை யடைந்தது,பெரியமாவை செய்யப் பட்ட பெரியசன்ன விருட்சமாகிய பிறவிமரம் எ-று. * (பெருமா

யைசெய்கிறவிப்பெருமரமானதுவோ, மேலது தலைசிறந்தவிவில்லது வேதத்தோர்மேவிய விலைமேவியதியாரும் புகறவினுலாமேவியவசுவத்தமதெனவே யரசதனின் போமேயதெனமுடிக்க ) (உ)

இவ்வாறிதனியல்பாகிய வகையாதெனியியாரும்
ஒவ்வாவகைபெரிதாகிய பிரமத்தொருவிடையே
வைவாள்வலியுழலாதவன் முறையேவரன்முறையே
மெய்வான்முதலவருமாதலின் மேலானதுவேயே.

(இ-ள்.) இந்தப்படி இதினுடைய சுபாவமாகியவித மென்னவென்றுகேட்கிற கூரையுடைய ஆயுதவலுமையினுலே பகைஞரைச செயிக்கிற அருச்சுனு, கேள் ஒன்றுமொவ்வாதபடி பெரிதாகிய பிரமத்திலொருவிடத்திலே அந்தப்பிரமத்தினுடைய விதிப்படியேவரதத்தக்கிரமப்படியே சிதாகாசமுதலாக வெல்லாம்வரும் ஆதலாற்பிரமத்தினிடத்தி லுண்டான சித்திலே வேர்க்கொண்ட மாயையாகையால் வேர் மேலானது—எ-று.*(மெய்யான சிதாகாசம்.) (௩)

ஊழாலவருமுலகாகியு முயிராகியுமெழலாற்
கிழானதுதலையாய்வரு முதலிறிடைகீழாய்ச்
சூழாகியபிறவித்தொட ரொருகாலமுமடையப்
பாழாமவகையழியாமையி லழியாததோர்படியே.

(இ-ள்) இனி மாயையில் நின்றும் வியாதியால் உலகங்களாகியும் உயிராகியும வரப்பட்ட அழகினுலே தலைகீழானதாய் வரப்பட்டமுகல்களைட மூன்றுமாயைக்கு மேலில்லாமல் அதோமுகமாய்ச் சுழல்வதாகிய பிறவித்தொடர்ச்சியெல்லாம பாழாம்படி யொருகாலமு மழியாமையினுலே இந்தச் சனனவிருக்ஷம் அழியாதது ஒப்பில்லாதசுபாவமுடையது—எ-று. (௪)

கருநாண்முதல்வினையாலது வளர்காதல்செய்தலினு
லருநான்மறையிலையேயிவை யவையாமெனவறிநீ
வருநாளகளிலொருநாளபெறு வகையின்மையினுலே
பெருநாட்டியசுவத்தம தெனலாயதுபேரே.

(இ-ள்) கருப்பற்றுநாள்முதலாகக் கருமமானது வளரப்பட்ட ஆசையைச் செய்தலினுலே அரிய நாலுவேதங்களுமேயிலைகள் இதையந்தப்பிறவிமரமாகுமென்று நீ யறியவருகிறநாளகளி லொருநாளபெரும்படியில்லாததினுலே பெரியயுகம் அறியப்பட்ட அந்தப் பிரவிமரமான மாயையானது அசுவத்தமென்றுபெயருடையதாகியது -எ-று.
* கருநாண்முதல் வினைவானதென்று பாடமோதிற் கருப்பற்றுநாண்முதல் வினைவானது வரப்பட்டதென்றும் பெருநாடியவென்று பாடமோதிற் பெருமையடைந்தவென்றும். ) ()

மற்றிப்படிசிறந்தி றவிம் மாயாமரமதனின்
பெற்றித்திறமிதுவல்லது பிறிதின்மையினாலே
யுற்றிப்படியறிவாய்ப்பொரு ளெல்லாவுமுணர்ந்தா
ரிறுதியபெருமானிப்பிற மின்னதுசிலவுளகேள்.

(இ-ள்.) இந்தப்படி விளங்குகின்ற இந்தமாயாமரத்தினுடைய சுபாவவிதம் இதல்லாமல் வேறில்லாததினாலே இப்படி யுறுதியாக அறிவால் எல்லாப்பொருள்களையு மறிந்தபேர்களிடத்திலே இந்தப்பெரியபிறவிமரத்தினுடைய வகை யின்னுஞ்சிலவுண்டு கேள் அருச்சுனா எ-று.

கண்ணேனெனவென்னையாப்பல பிறவிக்கதிவழியே
மண்ணேமுதல்கீழாமுல கிடையேவளர்வனவும்
விண்ணேமுதன்மேலாமுல கிடையேயிடைவனவு
மெண்ணேறியபவமாகிய பனையாமெனசத்தருமே.

(இ-ள்) இவன் என்கண்ணனென்று சொல்ல வொப்பான அருச்சுனா பலபிறவிகளினுடைய கெதிவழியே பூலோகமுதலாகக் கீழானவுலகங்களினிடத்தில் வளருகிறதும் ஆகாசமுதல் மேலான வுலகங்களினிடத்தில் நெருங்கினதுமாக லக்ஷம் எண்ணின எண்பத்துநாலுலட்சம் ஆச்சுபேதப்பட்ட பிறவியாகிய பனைமரத்தாலே பொருந்து எ-று.
* பனைமரமாவது பெருங்கால்வாய்.

நெறியால்வரும்வினைபோயபல நிலமாமுலகிடையே
யறியாமையெனாமேற கீழ்தலி லொர்பிறுமுளதாம்
பிறியாதெழுதுணையாகிய பெருநீர்மாயின்வளரும்
பொறியாகியகிளைமேதளிர் போன்மேபொருபொலிவே.

(இ-ள்) செய்கின்ற கர்மத்தினாலே வரப்பட்ட கருமமே வேர்-பல நிலங்களான லோகங்களினிடத்தில் அறியாமையாகிய அஞ்ஞானத்தோடே தங்கவிழுதலினாலே கீழிலும் வேருள்ளதாம் ஒருகாலமும பிரியாமலெழும்பப்பட்ட குணங்களாகிய பெரியநீரிருந்ததினாலே வளருமபொறியாகிய சத்தபரிசரூபரசகந்தமான இந்தவிஷயங்களே தளிர்போலப் பூரிப்பையடைந்தது-எ-று. (௧)

கனவுந்திசழ்சமுதாயுரின் மிருகாதிருநகரு
மெனவந்தழிதலினாலுரு வதுவின்றிமுறையாது
முனைவந்திடுமுதனாளொடு முடிவின்மையினாலே
தனதந்தமுமுதலுந்தெரி தரவில்லதுதானே,

(இ-ள்) சொற்பனமும் தோன்றப்பட்ட கானலில்மிகுந்தநீரைக் காட்டுவதுபோலவந்து அழிதலினாலே முன்சொன்றும் உருவில்லாமல் முன்னேயுண்டான முதல்நாளும் அதனுடனே முடிவுநாளுமில்லாததினாலே தன்னுடைய முதலும் முடிவுந் தெரிவ தில்லாததென

பூக்கமழ்நாற்றங்கொண்டு பொருமளியோகுமாபோற்
றீக்கனல்கின்றவேலோய் சிவனென்கின்றசீரோன்
யாக்கையையெய்தும்போது மதனைவிட்டேகும்போதும்
போக்கரிதாயவாறு புலன்களைக்கொண்டேபோமால்

(இ - ள்) நெருப்புச்சுடுகின்ற வேலையுடைய அருச்சுனா வண்டானது வரும்போதும் பூவில்மணக்கின்ற பரிமளத்துக்காகவந்துபொருந்தும் போகின்றபோது பரிமளத்தைக்கொண்டுபோகும் அப்படிப்போலச் சிவனென்றுசொல்லப்பட்ட சிறப்புடையவன்சரீரத்தைச்சேரும்போதும்இந்திரியங்களைக்கொண்டேசேரும் அந்தச்சரீரத்தைவிட்டுப்போகின்றபோதும் அந்திரியங்களைப் போக்கப்படாதபடியினாலே இந்திரியங்களைக்கொண்டேபோமென்றவாறு.* (பொறியளியென்பாருமுளர்.

இதுவும்-அறுசீரடியாசிரியவிருத்தம்,

மின்னையனையவுடம்பதனைவிடுவதடைவதாய்விடையந்
தன்னேரில்லாதான்பலவுங் காணுகின்றதன்மையினை
யென்னேகாணாரறியாதா ரறிவார்யோகத்தாலேதம்
முன்னேகாண்பாரிதனியற்கை யாதோவின்னமொழிவன்கேள்.

(இ - ள்.) தனக்கு ஒப்பில்லாதசீவனானவன் மின்னையொப்பானசரீரத்தைவிடுகின்றது சேருகின்றதாக விஷயங்களனேகமுந் தானாகஅனுபவிக்கின்ற சுபாவத்தையறியாத மூடர்களென்னவோகாணார்கள் அறிவுடையவர்கள் யோகதிருஷ்டியினாலே தங்களுடைய கண்முன்னேகாண்பார்கள், இதனுடைய சுபாவமென்னவோ அதை யின்னுஞ் சொல்லுகிறேன் கேள் அருச்சுனா-எ-று. * (தன்னேரிலலாதானமின்னே யனையவென்றும், விஷயம்பலவுமென்றுமாறுக - தம்முன்னேயென்பது-சரீரத்திலாத்மாவிருக்கச்சேதானே ஆத்மாவேறு-சரீரம வேறெனக்காணுதல் அறிவில்லாதவர்கள் செத்துங்காணார்களென்ப தருத்தாபத்தி,) (௰௪)

இந்தியங்களுக்குங்கண்ணா யிரவிதியிந்துவின்பால்
வந்தெழுங்கதிருநானே மானிலமாகிநின்று
நந்தியேறனையதோழா சாமமேமுதலாந்தன்மை
தந்திரந்தவிர்ந்துமெல்லாந் தாங்குகின்றேனுமானே.

(இ-ள்) களிற்றினையையொப்பான தோழா, பஞ்சேந்திரியங்களுக்கும் விஷயங்களைக்காட்டுகின்றகண் நான் சூரியன்-சந்திரன் அக்கினி இவர்களிடத்திலுண்டாகி யெழும்புகின்ற பிரகாசமுநானேசாமமுதலான சுபாவதந்திரங்களைவிட்டுப் பெரியபூமியாகிநின்று எல்லாந் தாங்குகின்றவனும் நானே-எ-று, (௰௫)

கலிநிலைத்துறை.

மூந்துவானசுவை மூற்றுமாகியே
இந்துவாகிநின் றுண்பனயாவையுந்
தந்துசேர்சுவை யகத்திலேதக
நந்திடாவகை வளர்க்கின்றேனுநான்.

(இ-ள்) முதன்மையான பெருமையுள்ள அறுசுவைமுழுதுமாகிச் சந்திரனாகிநின்று போசிக்கின்றதெல்லாங்கொடுத்து ஆறென்றுதொகை சேர்ந்த சுவையினிடத்திலேயிருந்து அந்தச்சுவைகளுக்குத்தக்கதாகக் கெடாதபடி வளரச்செய்கின்றவனுமநானே எ-று. * வான்சுவையென்றதனால பெருசுவையினாலனேகபேதமுண்டு ஆகையால் அனேகவிகற்பங்கூடிய வொருசுவையாகப்போட்டு அறுசுவையென்று தொகைபடுத்தினதினாலே வான்சுவையென்றார்.) (௰௩)

இன்பநக்குவ தீஞ்சுவையுண்பவா
நன்பயன்செய நால்வகையுண்டியு
மின்பமாம்வகை யாக்கைகடோறுநின்
றன்பவங்கியா யறுக்கின்றேனுநான்.

(இ-ள்) தோறா-கின்கின்றதும் நக்கின்றதும் மதுரமுண்டாகச்சுவைக்கின்றதும், உண்கின்றதும் ஒன்றாக நல்லபலனைசசெய்யப்பட்ட நாலுவிதப்போசிப்பும் இன்பமாகினபடிக்குச் சரீரங்கடோறும் அக்கினியாய்நின்று பாகமாகச் சீரணஞ்செய்கின்றவனும் நானே எ-று.

நல்லமாந்தர்நல் லறிவுநன்கிலாப்
பல்லர்தங்கள்புல் லறிவும்போரிசழ்
வில்லமைந்ததோள் வீரர்வீரவியா
னல்லதில்லையென் றறியவேண்டுமால்.

(இ-ள்) போர்செய்துவிளங்கிய வில்லிருந்ததோளையுடைய வீரர்களுக்குவீரனான அருச்சுனா, நல்லமனிதர்களுடையஞானமும் நலமில்லாசகிறியவர்களுடைய புல்லறிவாகிய அஞ்ஞானமும் நானேயல்லாமல வேறில்லையென்றறியவேண்டும் எ-று, (௰௫)

அசைவில்லாமறைக் கறிவுநானதன்
வசையிலாதமெய்ப பொருளும்வாய்மைசே
ரிசையினாலெடுத் தோதுவேனுமியான்
விசையகேளின்னம் வேறுமொன்றையே

(இ-ள்) சலனமில்லாத வேதத்துக்கு அறிவுநான், அந்தவேதத்தினுடைய குற்றமில்லாத சத்தியமானபொருளும் என்னுடையவாக்கி

லேசொந்தவிச்சையினாலே யெடுத்துச்சொல்லுகின்றவன் நான் இது வல்லாமல்வேறுமொன்றை இன்னஞ்சொல்லக்கேளாருச்சுனா எ-று, ()

மருவுகின்றதவ வுலகினமாயதலே
யுருவமாகமூன் புடையதொன்மையே
யருவமொன்றிலா தழிவதின்மையே
குருவநின்றதோர் குறியிலின்பமே,

(இ-ள்) குருகுலத்தவனே, இந்தவுலகத்தில் முன்பே உருவம் அருவமென் றிரண்டுள்ளன, அவற்றில் உருவமொன்றே நாசத்தையடைகின்றது, அருவமானதொன்றுமில்லாமல் அழிவதில்லை, இதுவென்றுமுள்ளதாக நின்ற ஒப்புங்குறிப்புமில்லாததாய் ஆனந்தம-எ-று, * (குருவென்றது குருகுலத்தவனேயென்பது, அருவமாய்ஒப்புங்குறியுமில்லாததாய் ஆனந்தசொரூபமாய் அழிவில்லாததாயென்று முள்ளதாய் நின்றது எனமுடிக,) (உ0)

மொழிசெய்கின்றவிவ் விரண்டுமுற்றவே
விழியினாலுற நோக்கின்மெய்மையே
யழிவதியாக்கையிங் கழிவுபாடிலா
தொழிவதென்னெனி லுயிரொன்கின்றதே,

(இ-ள்) சொல்லுகின்ற இந்தவிரண்டுமுடியக் கண்ணாலேயுற்றுப் பாக்கில் இந்தவுலகத்தில் உருவானசரீரமே அழிகின்றது நிச்சயம்அழிவுபாடிலாமல் ஒழிந்திருப்பதென்னவென்றுகேட்கில் அருவமான ஆத்மாவென்கின்றதே நாசமில்லாதது-எ-று, (உக)

இவையிரண்டையுங் கடந்துயாதுமோர்
நவையுமின்றியே நாசமின்றியே
யெவையுமின்றியே யாவுமின்றியே
குவையினின்றதோர் குறியிலின்பமே,

(இ-ள்) இந்தவிரண்டையுங்கடந்து யாதுமொருகுற்றமில்லாமல் நாசமில்லாமல் எந்தக்கூட்டமுமில்லாமல் ஒருகருமமுமில்லாமல் திரண்டுநின்றது ஒப்புங்குறிப்புமில்லாத ஆனந்தம்-எ-று. (உஉ)

இந்தவின்பமியா னென்னையுள்ளவா
சிந்தையின்கணே தெளிதன்மேயினார்
பந்தமொன்றிலார் பழையவிப்பொருட்
கந்தமாதிவே றறியவெண்ணுமோ.

(இ-ள்) இந்தஉருவம் அருவம் இரண்டையுங்கடந்த ஆனந்தமானவது நான் என்னையுள்ளபடி மனதினிடத்திலே தெளிவையடைந்தவ

கள்பாசபந்தமொன்றுமில்லாதவர்கள் பழையதான இந்தப்பொருளுக்கு ஆதியந்தம் வேறேயறியப்படாதது எ-று.                (உ௩)

வேதநாலுநின் றுரைசெய்தாலுமுன்
ஞேதலாவதென் றுலகறிந்ததோ
காதலாலெனக் கினியதோழனீ
யாதலாலுனக் கறியவோதினேன்.

(இ-ள்.) நாலுவேதத்தையும் ஒழியாமல் நின்று சொன்னாலும் ஒன்றென்று சொல்லுதலினால் அறிதென்று உலகமறிந்ததுவோ அல்லஆகையினாலே எனக்கு நீ இனிதான தோழனாதலா லுனக்கு அறியச் சொன்னேன்-எ-று,                (உ௪)

அறுசீரடிஆசிரியவிருத்தம்.

கண்ணேயோரிடத்துமின்றி யதனிலேவைக்கிற்காதல்
பண்ணேயயாக்கிநின்ற வினையெலாம்பயக்குமென்றான்
வெண்ணேயோவிதூரனிட்ட விருந்தையோவேலைசூழ்ந்த
மண்ணேயோரிண்டுமுன்னாள் வரும்பசிதீர்ந்தமாயோன்.

(இ-ள்) வேறோரிடத்திலுமில்லாமல் அந்த ஆனந்தத்திலே மனக்கண்ணைவைக்கில் ஆசைக்கூட்டங்களோடு கூடிநின்ற கருமமெல்லாம்பயிக்குமென்றுசொன்னார்-இடையர் வீட்டு வெண்ணெயையோ விதூரனிட்ட விருந்தையோ கடல்சூழ்ந்தபூமியையோ பொசித்து முற்காலத்திலே வரப்பட்ட பசிதீர்ந்தஸ்ரீகிருஷ்ணசுவாமி.                (உ௫)

௧௫-வது, புருஷோத்தமயோக-அத்தியாயம்
முற்றுப்பெற்றது.

———*———

ஆ-அத்தியாயம்-௰௫-க்கு-கூடியசெய்யுள்-௪௩௭.



௨

பதினாறுவது.

தெய்வாஸுரஸம்பத்துவிபாகயோக அத்தியாயம்.



கலிவிருத்தம்.

மறந்திருந்த மனத்திருணீக்கிடுந்
திறந்தெரிப்படச் செப்புதன்மேயினு
ணறந்திறந்தெரிந் தாக்குதற்காகவே
பிறந்திருந்துழல் கின்றபொருளனே.

(இ-ள்) (இதனைப் பின்னிரண்டடியும் முன்னாகவைத் துரைகொள்ளாகுவது,) தருமத்தினுடைய வகையைத்தெரிந்து தருமத்தையாகப்பணணுகிறதற்காகப் பிறந்திறந்து உழலுகிற பேராளனாகியஸ்ரீகிருஷ்ணசுவாமியானவர் ஞானத்தைபறந்து கெட்ட மனதிலுள்ள அஞ்ஞானத்தைப்போக்கப்பட்ட விதத்தை நன்றாகத்தெரியச்சொல்லத்துவக்கினார்-எ-று, * (கருமத்தையாகவே பாபமறியுமென்பதருத்தாபத்தி அந்த ஞானத்தைநீக்குகிறவிதமாவது எ று. (க)

தெய்வவசுரரென் றித்திறத்தோராதாய்
வையகமாந்தரெல் லாகளும்வாழ்வதிங்
கைகேளவற் றின்றிரமென்றுதன்
செய்யவாய்திறந் திவ்வணணஞ்செப்பினான்

(இ-ள்) ஐயா,இந்தப்பூமியிலுள்ள மனிதரெல்லாரும் தேவர் அசுரரென்றுசொல்லபபட்ட இந்த யிரணடுவித முறையவரா யிருப்பது அந்தயிரணடிலுடைய விதத்தைக்கேளென்று தமமுடைய சிவந்திருவாயைத்திறந்து இந்தப்படிசொன்னார் எ-று. (உ)

இதுவுங்கலிவிருத்தம்.

அஞ்சுதலின்மையு மறிவையாக்கலும்
நெஞ்சினியடக்கலு நிலைகெடாமையும்
வெஞ்சினமின்மையு மெய்ம்மைகூறலுந்
தஞ்செனவேழ்வியுந் தவமுமாக்கலும்.

(இ ள்) பயப்படுதலில்லாத தைரியமும,அறிவை யுண்டாக்குகிறதும்,மனதையடக்குகிறதும,நிலைமைபழியாததும,கொடுமையுள்ள கோபமில்லாமையும், சத்தியமானமெய்சொலலுகிறதும அடக்கலமென்று யாகமுந்தவமுஞ்செய்கிறதும்-எ-று. (௩)

மறைபயிலறந்தனை மறந்திராமையுங்
குறளைகடவிர்தலுங் கொள்கைமாற்றலும்
பிறர்பிழைபொறுத்தலும் பேரொழுக்கமே
லறன்வழிதானமோ டருளையாக்கலும்.

(இ-ள்) வேதங்களிடைவிடாம லோதப்பட்ட தருமத்தை மறந்திராமலும, கோட்சொல்லுகிறதைவிடுதலும்,விஷயங் கொள்ளுகிறதை விலக்கலும் அன்னியர்செய்த குற்றத்தைப்பொறுத்தலும், பெரியஒழுக்கதருமத்தை இச்சித்ததானமும் அதனுடனே தயவுண்டாக்கலும் -எ-று, * (மறைபயிற்றுதலுக்கனை மதித்திராமையு மென்று பாடமோதில் வேதமோதலும் தன்னைப்பெரியவனாக மதிததிராமலுமென்றுரைகொள்ளு மிதுபொருந்தாது.) (௪)

தங்களுக்குக் கிடைத்த சகலத்தையும் எல்லாரு மறியவெடுத்து நாட்டுவார்கள்-எ-று. (எ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

விரும்பலவாகியொழுக்கங்கடுறந்தார் மெய்ம்மையுஞ்செம்மையும்விட்டார், நிரும்பயனுயவறிவுமாய்ந்துள்ளரிடம்படாமனத்தினேடிசைந்தார். பெரும்பழியாயதொழில்களைபயில்வார் பிழைப்புவாயப்யொன்றறியாதா, ரரும்பகையாயிவ்வுலகினையெல்லா மழிப்பதன்பொருட்டவதரித்தார்

(இ-ள்) ஆசாரங்களை யிச்சியாத துராசாரர்களாகி யாசாரங்களைவிட்டவர்கள் மெய்ம்மையும் ஒப்புறவையும் விட்டவர்களமெய்மையையும் விட்டவர்கள பெரிய பிரயோசனமாகிய அறிவுகெட்டுமூடராயுளளவர்கள் விசாலமாகப் பரந்தமனதோடே பொருந்தினவர்கள் பெரியபழியாகிய தொழில்களே பழக்கமானவர்கள் தவறுதல்கிடைத்தல் என்றவிரண்டிலொன்றி மறியாதவர் இந்தவுலகத்தையெல்லாம் அழிக்கிறநிமித்தியமாக விலக்க அறியப்பகையாய்ப்பிறந்தவர்கள்-எ-று, (அ)

அறுசீரடியாசிரியவிருத்தம்,

நிறைவிலாக்காமபோகந் தன்னையேநிறைக்கவேண்டி
மறைவிலாமானத்தோடு மதங்களைமருவிநின்று
குறைவிலாமயக்கத்தாலே கோபத்தையடைந்துநின்று
பொறையிலாவிரதம்பூண்டு பொய்த்தவம்புரியாநிற்பார்,

(இ-ள்) அளவில்லாத காலம் அனுபவித்தாலும் நிறைவில்லாத விஷய போகத்தையே நிறையப்பொசிக்கவேண்டி மறைவான மானத்தைக் கெடுத்தும் மறைவில்லாத மானத்துடனே கெர்வங்களையடைந்துநின்று குறைவில்லாத மயக்கத்தினுலே கோபத்தையடைந்துநின்று பொறுமையில்லாத விரதத்தைதரிசித்துப் பொய்யாகத் தவசுசெய்வார்கள்-எ-று, (௯)

இறந்துபோமளவுமெய்தாப் பொருளையேயெய்தநிற்பார்
மறந்துமோர்பொருள்வேரில்லை வரும்பயனன்றியென்பார்
பிறந்துபேராசையாய பாசத்தாற்பிணிக்கப்பட்டார்
சிறந்தபோகங்கட்காகத் தீமையாம்பொருளேசெய்வார்,

(இ-ள்) செத்துப்போகின்றபரியந்தமும் எட்டாதபொருளையேஎட்டவேணுமென்று வருந்திநிற்பார் வருகின்ற விஷயப்பிரயோசனத்தையல்லாமல் மறந்து மொருபொருளவேறேயில்லையென்பார்கள் தங்களிடத்திலுண்டான பேராசையாகிய பாசத்தினுலே கட்டப்பட்டார்கள் சிறப்பான விஷயபோகங்களுக்காகப் பொல்லாங்கான காரியமே செய்வார்கள்-எ-று, (௰)

இப்பொருளடைந்தோம்வேறிப் பொருளினையடைவோமென்று
மிப்பகைசெகுத்தோம்வேறிப் பகையினைச்செயிப்போமென்றுந்
துய்ப்பவரெம்மிற்றுய்க்க வல்லவரில்லையென்று
மொய்ப்பவரெம்மின்மிக்கா ருளர்கொலோவென்றுமிற்பார்.

(இ-ள்) இந்தப்பொருளையடைந்தோம் வேறேயிருக்கின்ற இந்தப் பொருளையடைவோமென்றும்இந்தப்பகையாளியைக்கொன்றோம்வேறேயிருக்கின்ற விந்தப்பகையாளியைச் செயிப்போமென்றும் போகங்களனுபவிக்கின்றவர்களி லெங்களைப்போல அனுபவிக்கவல்லவர்களில்லையென்றும் எங்களுக்குச்சமானம் எவர்கள் யாவருமில்லை எங்களிலும் அதிகமானவர்களுண்டோ இல்லையென்று இறுமாந்துநிற்பார்கள்-எ-று, (௰க)

இனம்வலியின்பம்பெற்றோ மெம்மின்மிக்கார்களில்லை
தனமிகவுடையோமென்றுந் தம்மையேவியவாநிற்பார்
மனதினில்யாகஞ்செய்வோ மறைவெனக்கொடுப்போமென்று
தினமவைதோறுஞ்சிந்திப் பதுவலாற்செய்வதில்லார்,

(இ-ள்) உறவுபலம் சுகமிவைகளை யடைந்தோமிதனு லெங்களிலும் அதிகமானவர்களில்லையென்றும் மிகுந்ததிரவியமுடையோமென்றுந் தங்களைத்தாங்களே அதிசயப்பட்டு நிற்பார்கள் யாகஞ்செய்வோம்மேகத்தைப்போலத்தானங்கொடுப்போமென்றுதினந்தோறுமனதிலே நினைக்கின்றதல்லாமற் செய்வதில்லாதவர்கள்-எ-று. (௰௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்,

துடக்கறவில்லநினைவெனப்பட்ட சூழலைப்பற்றியேசுழல்வ
ரடற்கரிதாயமயக்கமென்கின்ற வலையிலேயகப்பட்டுநின்று
ருடற்குடில்வாழ்வாம்புன்னுனிப்பனிநீ ருலர்ந்திடி லுயிரநடுக்செய்திக்
கடப்பரிதாயநரகமெனகின்ற கடல்களில்விழவேகடவார்,

(இ-ள்) துடற்சியறவில்லாத நினைவென்றுசொல்லப்பட்ட சுழலிடத்தைப்பிடித்துச் சுழலுவார்கள் அறுக்கப்படாதமயக்கமென்றுசொல்லப்பட்ட வலையிலேயகப்பட்டுக் கடக்கமாட்டாமல் நின்றார்கள் உடம்பாகிய சிறுவீட்டுவாழ்வானது புல்லினுனியிலிருக்கின்ற பனிநீரளவு அப்படிக்கொத்ததேகம்போனால் உயிரானதுநடுங்கிக்கடக்கப்படாத நரகமென்றுசொல்லப்பட்ட கடல்களில்விழக் கடவர்களேயல்லாமல்கடக்கக்கடவார்களல்ல-எ-று, (௰௩)

கலிநிலைத்துறை,

வியந்துதங்களையேமேலாய்ப் பார்த்துமென்மாந்தர்தம்மை
நயந்துகொண்டாடவில்லார் நல்லறைவசெய்தாரொன்று

பயன்றொடாததனைத்தற்காகப் பாடியபன் முப்பனூலக
ளியமமிய படிசெய்யாதே யாகங்களியற்றுகிறபார்,

(இ-ள்) தங்களைப்பெரியவர்களென்றுசொல்லிக்கொண்டாடத்தக்க ஒழுக்கமில்லாதவர்கள் தங்களைத்தாங்களே மேலாகப்பார்த்து அதிசயி த்துமய சகாரணவர்கள் பிரயோசனத்தை யிச்சித்து இந்தச்சோயாசிக் கவையறமறைச்செய்தானென்று சொல்லுகிறதற்காக எல்லாருமறிந்திய பழையவேதங்கள் சொன்னபடிசெய்யாமல யாகங்களைத்தாறுமாறுகச் செய்வார்கள்-என்று, * (பயன்றொடர்தலாவது பிரயோசனத்தை மன துதொடருதல அதாவிச்சித்தல,) (௰௭)

வன்மையிகலிப்பொல் லாங்கியுங்காமமுங்
குன்மியானெனுமபெருமைபக லூழுந்துளோர
றென்னியப்பகனிலும யாவாமாட்டினு
மன்னியமெளுகமொய் பொறுமைபாக்குவார்,

(இ-ள்) நிலைமையான மனச்செருக்குடனே வலுமையும், ஆசையு மிகுந்து கூடினவனென்று சொல்லப்பட்ட பெரியமயக்கமுஞ் சுற்றிக்கொ ண்டிருக்கின்றவர்கள் என்னுடைய சுபாவத்திலும் யாரிடத்திலும் அ ஙகீபமென்றெண்ணிக்கொண்டு பொறுமையை யுண்டாக்குவார்க ள்-எ-று. (௰௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்,

மற்றவர்தம்மையிந்த மானிடராஜேரியாக்குக்
கொற்றவசிறாஜூரைக் கொடுமையாலரவொப்பாரை
பற்றிமிடுமைசேர மசுரர்களோனியாய
புற்றனைத்தோறுயானே புகபுகவிழுத்துகின்றேன்

(இ-ள் இந்தமனிதராமவர்கள் எல்லாருக்குமரசனென அருச்சனிறை ப்படிகேட்டானவர்களைக் கொடுமையாலே பாம்பையொப்பானவர்களை ச் சேருதலில்லாத பூரித்ததுக்கஞ்சேரப்பட்ட அசுரயோனிகளாகியபு றப்பனைத்தோறும புதுதப்புகுத அவர்களை நானேவிழுத்தள்ளுகிறேன்-

கலிவிருத்தம்,

இவ்வகையசுர யோனியடைந்தோர்
மெய்வகையாமறி வின்மையினாலே
கைவர்சடூதர கக்கதிதோறு
மூய்வகையின்றி யுழன்றுதிரிந்தே

(இ-ள்) இப்படி அசுரயோனியடைந்தவர்கள் மெய்வகையான அ றிவில்லாமையினாலே தப்பிப்பிழைக்கின்ற வகையில்லாமற் பொல்

மாதுநரகவழிதோறும் உழன்றுதிரிந்துவருவார்கள்-எ-று. * (உய்வகையின்றி நிரகக்கதிதோறு முழன்றுதிரிந்து நைவார்களெனமாறுக.) (௰௭)

ஒருவன்சிக்க வியற்றுவதேனு
மருநர்கத்தி லடைப்பதுதாறும்
வருவகைமூன் றுள மறநவைதன்னை
யொருமுறைகூறி யுணாததிவென்கேள.

(இ-ள்) ஒருவன்கெடச்செய்வதானாலுங் கடக்கரியநரகத்திலடையப் பண்ணுகின்றதும் தானும்வருகின்றவிதமூன்றுண்டு-அந்தமூன்றையு மொருதரஞ்சொல்லிதெரிவிக்கின்றேனகேள் அருச்சுன. (௰௮)

காதலினாகிய காமமுலோபங்
கோதறவேசுடு திக்கோப
மாதலினாலவை மூன்றுமகன்றார்
வேதனைதீரபெரு வீடுவிளைந்தார்.

(இ-ள்) ஆசையினாலுண்டாகிய காமலோபங்களாங்கமறச் சுடப்பட்ட நெருப்பையொப்பான கோபமாகையினாலே அந்தகாமக்குரோத லோபமாகமூன்றையும் நீக்கினவர்கள் பிறவிவேதனையில்லாமற்போக்கபட்ட பெரியமோட்சத்தையுண்டானவர்கள்-எ-று. (௰௯)

கூறினநூல்வழி சேர்குறிபேணு
தேறினவாறுசெய் வாரிகலோகம்
வேறியலாபர லோகம்விளைகரும்
பேறினவானவை பேறுபெறுரால்.

(இ-ள்) வேதஞ்சொன்னவழியே சேரப்பட்டகுறியை மதியாமல்விட்டுக் காமகருமங்களில் மனதேறினபடிசெய்கின்றவர்கள் இகலோகமும் வேறுசுபாவமுள்ள பரலோகமுமுண்டாக்குகின்ற பேறுனவிந்தவிதமான பேறுபெறுர்கள-எ-று. (௨௰)

இதுவுங்கலிவிருத்தம்.

ஆதமிடாதவறி கைக்குவழியான
வேகமுதனூலவை விதித்தநெரியாலே
யேதநினையாதுன்வினை யேயிசைகவென்றான்
பூதமுதலானவை பொருத்தருளுகின்றான்.

(இ-ள்) ஆகையால அடாதகாரியத்தை யறிகைக்குவழியான வேதமுதலான சாஸ்திரங்கள் அவைகளவிதித்த மார்க்கத்தினாலே குற்றமான காரியத்தையுங் குணமான காரியத்தையும் அறிந்து குற்றமானது

ரியத்தை நினையாமல் குணமான வுன்னுடையகருமத்தையே பொருந்துவாயென்றுசொன்னார் பூதமுதலான சகத்துக்களையெல்லாஞ் சமைந்தருளிச்செய்கின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமி-எ-று. (உ௪)

௰சு-வது, தெய்வசம்பத்துவிபாகயோக-அத்தியாயம்

முற்றுப்பெற்றது,

——-※—— —

ஆ-அத்தியாயம்-௰ரு-க்கு கூறியசெய்யுள் சகஎ.

[illegible]

உ

## பதினேழாவது.

## சிரத்தாத்திரயவிபாகயோக அத்தியாயம்.

———※———

கலிவிருத்தம்.

உண்மையொளி யொளித்துலகியாவையுங்
கண்டுகாப்பவன் கட்டுரைத்திட்டதே
கொண்டுபார்த்தனக் கொண்டலவண்ணனையன்றனைத்
தொண்டுகூறப் பணிந்திவைசொல்லுவான்.

(இ-ள்) சகலலோகத்தையும் உண்டாக்கித்திரும்ப ஒளித்துக்கொண்டுகாக்கின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமி யுபதேசித்ததையே சன்னையாகக்கொண்டு அருச்சுனனானவன் அந்தமேகநிறமான ஸ்ரீகிருஷ்ணசுவாமியை அடிமைசிறக்க வணங்கி இதுசொல்லுவார் எ-று. (க)

வேதமேமுதனூல்விதியன்றியே
காதலாலுலகோர்செயுங்காரிய
மேதமாங்குணமூன்றிலும்யாதெனை
வோதமாகடல்வண்ணனுமோதுவான்.

(இ-ள்) வேதமேமுதலான சாஸ்திரவிதியல்லாமல் ஆசையாலே உலகத்தார்செய்யப்பட்ட கருமமானது குற்றமாகும், மூன்றுகுணத்திலும் எந்தகுணமென்றுகேட்க, அலையுள்ளகறுத்தகடல்போலும் நிறமுடைய ஸ்ரீகிருஷ்ணசுவாமியுஞ் சொல்லுவார்-எ-று. (உ)

அறுசீரடியாசிரியவிருத்தம்,

யாவர்களாசைப்பாடு மியம்பிடினியம்பப்பட்ட
மூவகைக்குணமுமாகி யல்லதுமுடிக்குதில்லா

மேவருமவற்றினுய வேறுபாடுகளையெல்லாங்
காவலனெதெரியக்கூறக் கேளெனக்கழறலுற்றான்.

(இ-ள்) எல்லாருடைய ஆசைப்பாடுஞ் சொல்லில் எல்லாஞ் சொல்லப்பட்ட மூன்றுவிதகுண மாவது, அந்தமுக்குணத்தையு மல்லாமல் வேறேமுடிகதுநில்லாது மனதுபொருந்தவரப்பட்ட அந்தமூன்று குணத்தி லுண்டாகிய வேறுபாடுகளையெல்லாம் தெரியச்சொல்லக்கேளாய ஜாவேவென்று சொல்லத்தொடங்கினார்-எ-று. (௨)

கொச்சககலிப்பா.

சாத்துவிகர்தேவரையே சரண்புகுவர்தாமதர்கள்
சாத்தல்புரிவன்பேயும் பூதமுமாய்களைப்பிடிப்ப
ரேத்தரியகுணமவற்றி னிராசதமாங்குணமுடையோர்
காத்தவெனவரக்கரையு மியக்கரையுமடைவர்களால்

(இ-ள்) சாத்துவிகம் ராசதம் தாமதமென்று சொல்லப்பட்ட குணமூன்று, இந்த குணமூன்றில் சாத்துவிகமான குணத்தை யுடையவர்கள் தேவர்களைச் சரணமடைவார்கள்-தாமதமானகுணத்தையுடையவர்கள் தங்களைக் காத்துரட்சிப்பதுபேயும்பூதமென்றுநிச்சயமாகியவைகளை மறவாமற் பூசிப்பார்கள், புகழுஅரிதாகிய ராசகுணத்தையுடையவர்கள் ஈசத்தரென்று ராட்சதரையும்யட்சதரையுஞ் சரணமடைவார்கள்-எ-று (௩)

கலிவிருத்தம்.

அடங்கியபொறியிரு லறிவுமன்றியே
இடம்படுநூல்களி னியல்புமன்றியே
யுடம்பையுமுயிரையு மொருக்குமாதவத்
தொடங்குவரசுரயோ னிகளிற்சேர்ந்தினர்,

(இ-ள்) ஐந்துபொறிகளுமடங்கினவிடத்திலுண்டாகிற அறிவுமல்லாமலே விரிவுண்டான சாஸ்திரங்களினுடைய விதியுமல்லாமலே உடம்பையு முயிரையும் வருத்தப்பட்ட பெரியதவத்தைத் தொடங்கிச் செய்வார்கள் அசுரயோனிகளிலே பிறந்தவர்கள்-எ-று, (௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உண்பன்யோகம்யாரு முறுதவந்தானமென்னா
வெண்படவுரைத்தநான்கு மோரொன்றுமூன்றாய்நின்ற
பண்படுகுணங்களாலே கேளெனப்பற்றும்வீடு
நண்பொடும்பகையுமில்லான் முறைமையினவிலலுற்றான்

(இ-ள்) எல்லாரும் அடையப்பட்ட ஆகாரயாகந் தானமென்றெண்ணப்படச் சொன்ன நாலும் பண்ணப்பட்ட குணங்களாலே ஒவ்

வொன்று மூன்றாய்நின்றது அவைகேளென்று சம்சாரமு மோட்சமு மூறவும் பகையுமில்லாத ஸ்ரீகிருஷ்ணசுவாமி ஆகாரமுதலாகச் சொன்ன முறையினாலே சொல்லதொடங்கினார் எ-று. (௬)

சத்துவகுணத்தாருண் துரைத்திடலமுதுசார்ந்த
தித்தித்தசுவையவாகித் தேகஞ்சிகனெனவுஞ்சேர்ந்த
வத்தித்தவலிநோயின்மை யறிவுநல்லாயுவின்பம்
மத்திக்கச்செய்தவிந்த வுணவுகண்மடங்கலன்னாய்

(இ-ள்) சிங்கத்தை யொப்பான அருச்சுனா, சாத்துவிககுணமுடையவர்களுடைய ஆகாரத்தைச்சொல்லில் அழகுடையதாகித் தித்தித்த ருசியுடையதாகி யுடம்புசிக்கெனவுஞ் சேர்ந்ததாகிச் செம்மையானதாகி வயிற்றுநோயில்லாத ஆரோக்கியம அறிவுநல்லஆயிசுசுகம் இவைகள் அதிகமாகச்செய்த இந்த ஆகாரங்கள தானசாத்துவிக போசனம்-எ-று, * (தேகஞ்சிக்கெனவாவது பெலம்,) (எ)

இப்படியன்றிவேறு மிராசத்தருணவுகேட்கிற
கைப்பனபுளிப்புவர்ப்புக் கூர்ப்பனகடியவெய்து
நெய்ப்பயினெருப்புச்போலச் சுடுவனவிவற்றினாலே
மெய்ப்பயினோயினெஞ்சந் திமெ்பையும்விளைவவேலோய்.

(இ-ள்) வேலாயுதத்தைத்தரித்த அருச்சுனா, இந்தப்படியல்லாமல் வேறான ராசதகுணத்தாருடைய ஆகாரத்தைக்கேட்கிற் கசக்கிறது-புளிக்கிறது-உப்புகரிக்கிறது-உறைக்கிறது-நெய்வார்த்தை சமையுடைய நெருப்புப்போலச்சுடுவது இவைதான் ராசகுணத்தாருடைய ஆகார மிந்த ஆகாரத்தினாலே உடம்பிலே பழகப்பட்ட வியாதியும மனதிலே துக்கமுமுண்டாவது-எ-று. (அ)

ஊசினையடைந்தநெஞ்சிற் றாமதருணவுகேட்கி
லூசினபழஞ்சோறெச்சி லும்பர்பூசனைக்காசாத
பேசினவெந்திலாத வினையணவிவற்றினாலே
காசினமுதலாயுள்ள துயரெலாம்விளைவுகண்டாய்,

(இ-ள்) குற்றத்தையடைந்த மனதையுடைய தாமதகுணத்தோருடைய ஆகாரததைக்கேட்கில் ஊசிய பழஞ்சோறு எச்சில தேவர்களுடைய பூசைக்காகாது, நிந்தித்தது, வெந்ததிலலாதது, இவைகள தாமதருடைய போசன மிதினாலேகாயபபட்ட கோபமுதலாயுள்ள துக்கமெலலா முண்டானவை கண்டாயருச்சுனா எ று, (௯)

செயத்தகுவனவென்றல்லாற் சேர்பயன்சிந்தியாதே
தயக்கநான்முறைசெய்யாகஞ் சாத்துவிகன்செய்யாகம்
பயத்தையேவேண்டியாதல் பலர்புகழ்வேண்டியாத
லியற்றுறுகின்றயாக மிராசதரியாகமாமே

(இ-ள்.) செய்யத்தக்கதென்று செய்வதல்லாமல் அதனால்வருகிற பிரயோசனத்தை இச்சையாக நினையாமலே மந்திரகிரியைகளைக் குறையாமல் விளங்கச்சாஸ்திரத்தில விதித்தபடி செய்யப்பட்டயாகமானது சாத்துவிககுணமுடையவன் செய்கிறயாகமென்றுசொல்லப்படும் பிரயோசனத்தையே வேண்டியாகுதல், பலரும்புகழவேண்டியாகுதல், செய்யப்பட்டயாகம் ராசதகுணமுடையவன் செய்கிறயாகமாம்-எ-று. (௰)

நூற்படுநெறியுமன்றி நுனித்தவர்முதலாயுள்ள
தாற்பரியமும்வேறன்றித் தக்கமந்திரமுமன்றி
யேற்பவர்க்கீத்தலன்றி யியற்றுறுகின்றயாகந்
தார்ப்பொலிகின்றமார்ப தாமதரியாகமாமே.

(இ-ள்.) சாஸ்திரத்திலுண்டாகிய வழியுமல்லாமல் கூர்மையான கவமுடையவர் முதலாகவுள்ள பெரியோர்களுடைய தாற்பரியமுமல்லாமற் செய்கிறதற்குத்தக்க மந்திரமு மல்லாமல் யாசகருக்குக்கொடுக்கிறது மல்லாமற் செய்கிறயாகமானது பூமாலை விளங்குகின்ற மார்பையுடைய அருச்சுனா தாமதர்கள்யாகம்-எ-று. (௰௧)

கலிவிருத்தம்,

தீக்குலாவேலினாய் தவத்தின்செய்கைதான்
வாக்கினாற்பேசுதல் மனத்தினுக்குக
லாக்கையாலியற்றுத லாயிருப்பது
நோககினாலிவற்றினை நுணித்துக்கூறவே.

(இ-ள்) நெருப்புகுலாவப்பட்ட வேலையுடைய அருச்சுனா, தவத்தினுடைய செய்கையானது வாக்கினாலேபேசுதல் மனதிலேயுண்டாக்குதல்சரீரத்தினாலேசெய்தல்என்று மூன்றுவிதமாயிருப்பது இந்தத்தவத்தைதான்நினைத்துக்கூர்மையாக்கிச்சொல்ல நீகேள்-எ-று. (௰௨)

இதுவுங்கலிவிருத்தம்.

தீர்த்தயார்க்குஞ் செவிக்கினிதாயின
வார்த்தைமாமருந் தேயெனலாயென
வோர்த்துமென்மொழி கூறுதலோதுதல்
வார்த்தையாற்பண்ணு மாதவமென்பதே

(இ-ள்) சந்தேகந்தீர்ந்தது எல்லாருக்குங் காதுக்கு இன்பமானதுவார்த்தையே பொருமையுள்ள அமிர்தசஞ்சீவினீயென்று சொல்லலவதுவேதசாஸ்திரம் அப்பியாசிக்கிற மேலானசொல்லைச்சொல்லுகிறது வேதசாஸ்திரங்களை யோதுகிறது இப்படியிருக்கிறதுவார்த்தையாற்பண்ணப்பட்ட பெரிய தவமென்றது-எ-று. (௰௩)

காரத்துக்காக அன்புடனே பண்ணினகொடையும் இப்போதுகொடுக்கின்றவிதனால் இனிமேற் பலனுண்டென்று நினைவோடிசுகொடுத்ததுவும் எட்டுத்திக்குநிறைந்த கீர்த்தியையுடைய அருச்சுனா இராசததானமாம்-எ-று, (உ0)

வாயாதகொருடைநாளை வழங்காதகாலத்தே
போயாதநிலத்திடையே யிழிந்தகுலத்தவர்களுக்கே
யாயாதவறிவினொடு மப்பிரியத்தொடுங்கொடுத்தல்
காயாதபெருந்திறலாய் தாமததானமே

(இ-ள்) யாராலுஞ்சாயாத பெரியதிறமையையுடைய அருச்சுனா கிடையாதபொருட்செல்வத்தைக் கொடுக்காதகாலத்திலே இசையாதநிலத்திலே இழிகுலத்தவர்க்கு விசாரியாதஅறிவுடனே பிரியமில்லாத உதாசினத்தோடுங்கொடுக்கிற தானந்தாமததானம்-எ-று. * கிடையாததிரவியமாவது வார்த்தைவருமென்று பொய்சொல்லி அவைகளை நீ வாங்கிக்கொள்ளென்றால ஆயாதவறிவு மூடம். (உக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஒப்பரிதாயவுண்டியோடியாக முறுதவந்தானமென்றுரைத்த
வப்படியெல்லாமறிவகையுனக்கு முரைத்தனனடையமற்றையா
வெப்படியாகுமிவற்றினைச்செய்தால் வீடுபெற்றுயர்நெறியாவ
தெப்படியென்னிலதனையுமுனக்குத் தெரிவகையியம்புவன்கேளீ.

(இ-ள்) ஒப்பில்லாத ஆகாரத்தோடு யாகம் உறுதியானதவந்தானம் என்றுசொன்ன அந்தநாலுவிதசுபாவமெல்லாம் அறிகின்றபடிக்கு உனக்குச்சொன்னேன் இவைகளெல்லாம் எப்படியாகும் இவைகளைசசெய்தால் மோட்சத்தைப்பெற்றுயர்ந்தவழியாவதெப்படியென்னில் அதனையுமுனக்குத்தெரியும்படி சொல்லுவேன் நீகேளாயா எ-று. (உஉ)

ஓமென்கின்றதனியெழுத்து முரைத்தற்கரியதற் றமூந்
தாமென்கழுறதற்குமேற் சத்தென்கிறதனி பதமு
மாமென்கின்றவிவைமூன்று மறிவின்பெற்றிடுவலாருலே
யாமூ பணருமறையோரி யாகத்தேதோன்றிற்றெனவறியாய்.

(இ-ள்) ஓமென்றுசொல்லுகின்ற தனியெழுத்தும் சொல்லுதற்கரிதான தத்துவென்கின்றசொல்லும் இதற்குமேலசத்துஎன்று சொல்லுகின்ற தனிச்சொல்லும் ஆமென்றுசொல்லுகின்ற இவைமூன்றும் அறிவினுடையசுபாவம் ஒளியும் மணமுமுடைய பூமாலையைத்தரித்த மார்பையுடைய அருச்சுனா இந்தமூன்றினாலே நாமமுன்பு அறியப்பட்ட ஓதவரியவேதபாராயணரான பிராமணருடையயாகத்திலே பொருந்திற்றென்றறிவாய் எ-று, * [பதமாவதுசொல்.] (உங)

ஓமென்றுரைத்தே வினைசெய்வார் வீடுற்றவர்வீடுறுமவர்க
டாமுன்புரைத்ததற்பதத்தை யுரைத்தேசெய்வார்சத்தென்றே
யாமென்றிருந்தேவினையாகு மினைவமற்றழகாயினவெல்லாங்
காமபலத்தின்மேலின்றிச் செய்வாரறிஞர்கதிர்வேலோய்.

(இ-ள்) பிரகாசமுள்ள வேலைத்தரித்த அருச்சுனா, மோட்சம்பெற்ற பிரமஞானிகள் ஓமென்று பிரணவத்தைச்சொல்லியே கருமத்தைச் செய்வார்கள் மோட்சத்தைப்பெறுகிறவர்கள் தாங்கள் முன்புசொன்ன தத்தென்றுசொல்லியே கருமத்தைச்செய்வார்கள் சத்தென்றுசொல்லியே நாமென்றிருந்த கருவமாகும், இது அழகானது எல்லாம் வினைபயலத்தின்மேலில்லாமற் கருத்தையறிவுடையவர்கள் செய்வார்கள்-எ-று. * (ஓம்-ஆவது பிரமசொருபம், தத்தாவது அதென்றுபேர், அதுவென்றந்த பிரமத்தையேசொன்னது சத்தென்றது-நல்லதென்றுபேர், உலகத்தாரும் நல்லகாரியம்பண்ணினவனைச் சற்கருமம்பண்ணினனென்பார்கள், ஆகையாற் சற்குணமேபிரதானமென்பது கருத்து, அல்லாதுசெய்தால் அசத்தாமென்றருத்தாபத்தி.) (உச)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காதலாலிந்தப்பதங்களைமூன்றினையுங் கற்றுணர்ந்தவரெலாங்கருத்தா, லோதலாம்வகையாலுரைத்தலாற்றவமுந் தானமுமுதலியவயர்ந்தார், மாதலாலிந்தப்பதந்தனைவிருமபி வினைசெயத்தகுவதென்றளித்தான், றீதிலாதுலகந்தன்னுளேயுதித்த தேவகிதிருவயிற்றுதித்தோன்.

(இ-ள்) ஆசையினாலே இந்த ஓம் தத்து-சத்தென்ற சொல்லுக்கள் மூன்றையுங் கற்றறிந்தபெரியவர்களெல்லாங் கருத்தினாலே யோதலாகும்படியான வாக்கினால் சொல்லுதலினாலே தவந்தானமுதலானவைகளாலே மேலானார்கள், ஆதலால் இந்தமூன்றுசொல்லையும் இச்சித்துக் கருமத்தைச்செயத்தக்கதென்றருளிச்செய்தார்-தீங்கில்லாமலுலகமானது தன்னுக்குள்ளே பிறக்கத் தாம் இந்தவுலகத்திலுள்ளவர்களிலொரு தேவகியினுடைய திருவயிற்றிலே திருவவதாரஞ்செய்தருளிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி எ-று. (உரு)

௰எ-வது, சிரத்தாத்திரயவிபாகயோக அத்தியாயம் முற்றுப்பெற்றது.

ஆக அத்தியாயம்-௰எ-க்கு-கூடிய செய்யுள்-௪௮௩.

## பதினெட்டாவது

## உபநிஷத்துப்பிரதிபந்தனமோட்சயோகஅத்தியாயம்.

——(*)——

### கலிவிருத்தம்.

ஏகமேகருதுவா ரிதயமேவிளைவதோர்
யோகமேயுலகிலோர் பொருவிலாவொருவனே
நாகமேயமளியாய் நளினமேமால்வதோர்
மேகமேபணியெனு விசையன்மேல்வினவுவான்.

(இ-ள்.) ஒன்றானபிரமத்தையே தியானிக்கிறவர்களுடைய இருதயத்திலே விளையாடப்பட்ட ஒப்பில்லாதயோகமே, உலகத்திலுள்ளோர்களில் ஒப்பில்லாதகர்த்தனே, சேஷனாகியபாம்பே சயனமாகியதாமரைகளே மலரப்பட்டதொரு நீலமேகத்தையொப்பானவனே, அனுக்கிரகம்பண்ணுமென்றுசொல்லி அருச்சுனன்மேற் கேட்கின்றான்-எ-று.

### இதுவுங்கலிவிருத்தம்

சன்னியாசமாவதுந் தருந்தியாகமாவது
மென்னியாயமாகவெம் பிரானியம்புகென்னவே
வன்னிவாயுவானமாகி மண்ணுநீருமாகியோன்
றன்னியபொருட்டொகைத் திறந்செலத்தொடங்கினான்.

(இ-ள்) நீர்சொன்னசத்தியுடைய நியாயமான சன்னியாசமாவதும், அதற்குத்தக்கதியாகமாவதும், எந்தநியாயமாக இருக்கும், எங்களுக வாமியேசொல்லுமென்ன ஆகாசம் வாயு அக்கினியாகியபின்பு நீரு மண்ணுமாகி நின்ற ஸ்ரீகிருஷ்ணசுவாமி பழையவிபமுள்ள பொருளினுடைய தொகையின்வகையைச் சொல்லத்தொடங்கினார்-எ-று. (௨)

காமியமாதிருப்பான்செய் கன்மமானயாவையுந்
தாமடக்கவேயிருக்கல் சன்னியாசமாவதில்
சேமமின்றியேவிளைப் பயன்களானயாவையுந்
தீமையெனறறத்துடைத் திருந்தியாகமாவதே.

(இ-ள்) இந்தப்பிரசஞ்சத்தில் இச்சைபொருந்திய பிரயோசனத்தைச்செய்யப்பட்ட கருமமான சகலமுமடக்கித் தாம் சுகமாகவிருக்கிறது, சன்னியாசமாவது இன்பமில்லாமலே கருமபலன்களானவை சகலமும் பொல்லாதென்று அறத்துடைத்திருக்கின்றது தியாகமாவது-எ-று.

திங்கியற்றுகின்றதீ வினைத்திரங்கள்போலவே
ஈங்கியற்றுநல்வினைத் திறங்களானயாவையு
மாங்கியற்றலின்றிவிட் டிருத்தலேயுருத்தமாஞ்
சாங்கியத்தையோதிநிந் தவத்துளோருரைப்பரால்.

(இ-ள்) தியாகமாவது பொல்லாங்குசெய்கிற பாவவிதங்களை விட்டாற்போலவே இங்கே செய்யப்பட்ட புண்ணியவிதங்களான சகல கருமமுஞ் செய்வதில்லாமல் விட்டிருந்ததேதியாகமென்று அர்த்தமாகப்பட்ட சாங்கியத்தைச் சொல்லாநின்ற தவத்தை யுடையவர்கள் சொல்லுவார்கள்-எ-று. (௩)

ஞாலகாரணங்களாத வியாகமோடுநற்றவ
தானமோடிகாத்தலைத் தகாமைகூறுவாருளா
ரானகாரணத்தினு லறிந்தடங்கினூர்க்கலா
லீனமாமிவற்றைவிட் டிருத்தலென்றிருத்தலே.

(இ-ள்) ஞானத்துக்குக் காரணங்களாகையால்யாகத்துடனேநல்ல தபசு தான மிவைகளை விடுகிறதைத் தகாதென்று சொல்லுவார்களுண்டு யாகந் தவந் தானமென்கிற விவைகளை விட்டிருக்கிறதென்றிருத்தல் இவைகளாலே ஞானமுண்டான காரணத்தினு லிதையறிந்து அடங்கினவர்களுக்கல்லாமல் அறியாதவர்களுக்கு விடக்கூடாது-எ-று.

கலிவிருத்தம்.

தியாகமூன்று வகைப்படுஞ்செப்பக்கேள்
யாகமுந்தவந் தானமுமென்றிவை
மயலறுக்கு மனத்தினையாதலா
லயர்வுறைத்தல் விடுகையடாததால்.

(இ-ள்) இந்தத்தியாக மூன்றுவிதப்படும், அதைச் சொல்லக்கேள் அருச்சுனு யாகமுந் தவமுந் தானமுமென்ற விந்தக்கருமமானமனதிலுள்ள மயக்கத்தை யறுக்குமாகையால் விடுதலென்றுசொல்லுதல் மறந்துசொல்லுதல்ஆகையால் அந்தக்கருமத்தைவிடுவதுஅடாததுஎ-று.

என்னசெய்வ தெனவிவ்வினைகளாற்
பின்னையெய்து பெரும்பயனுவது
தன்னைவிட்டுச் செயத்தகுமென்பது
முன்னையோருமெனக்குமுடிவரோ.

(இ-ள்) இந்தக் கருமமானது ஞானகாரண மாகையால் விடப்படாதாகில் மேலதிகமாவது என்னசெய்வதென்று கேட்கில் இந்தக்கருமங்களாலேபிறகுவரப்பட்டபெரியதானபிரயோசனமாவதை இச்சிய.

மல்விட்டுக் கருமத்தைச் செய்யத்தகுமென்று சொல்வதுபழையவர்களான பெரியவர்களுக்கும் எனக்குஞ் சந்தேகந் தீர்ந்த நிச்சயம்-எ-று.

நித்தமாய நெறியின்வினையினை
மத்தர்போல வொருவன்மயக்கிறம்
பித்தனாய்விடு கின்றவன்பெறுநியெச்
சித்ததாமத் தியாகமென்கினறதே.

(இ-ள்) சித்தியையுடைய அருச்சுனா "அறியாத நித்தியமாகிய விதிவினையுடைய கருமத்தை (உன்மத்தனைப்போலே) ஒருவன் மயக்கத்தினாலே பித்தனாகிவிடுகிற அந்தத்தியாகத்தைத் தாமதத்தியாகமென்று சொல்லுவது-எ-று. (அ)

மெய்வருத்தமுண் டென்றுவிடுவதாக்
கையமில்லை யிராசத்தியாகமாங்
கைவரும்பல மாசைகைமாறவே
செய்வசெய்வது சத்துவத்தியாகமே.

(இ-ள்) இப்படி ஞானகாரணமென்று கருமம்பண்ணும்போது சரீரவருத்த முண்டென்று விடப்பட்ட அந்தத்தியாகத்துக்கு ஈம சந்தேகமில்லை, அது ராஜத்தியாகமாகச்செய்த கருமத்துக்குக் கையில் இருக்கின்ற பலனில்லாத ஆசை கைவிடவேசெய்யவேண்டியதுசெய்வதென்றிருக்கில் அவை ஞானகாரணமான சாத்துவிகத்தியாகம்-எ-று. (கூ)

யாதின்மாட்டி னுமையமென்றின்றிபே
தீதின்ஞானியுந் தியாகியுமானவன
கோதின்பமுந் துன்பமுங்கூடவினை
மீதில்வேணடல் வேண்டாமையுமவிடுமால்.

(இ-ள்) எந்தத் தத்துவத்தினிடத்திலும் சந்தேகமொன்றில்லாமல் தெளிந்த குற்றமில்லா ஞானியுந் தியாகியுமான ஒருவனும் குற்றமில்லாத சுகமுங் குற்றமுமுள்ள துக்கமுஞ் சிறகைக்கொடுக்கப்பட்ட கருமத்தின்மேலே ஆசையும் வெறுப்புங் கெடும்-எ-று. * (சுகங்கொடுக்கின்ற கருமமாவது புண்ணியமான நல்வினை துக்கங்கொடுக்கின்ற கருமமாவது பாவமானதீவினை, வேண்டலாவது விருப்பு வேண்டாமையாவது வெறுப்பு, வேண்டுதல் வேண்டாமையில்லா தவனை நானே அவன், அவனே நான், ஆகையாலே அவனேபிரமமென்பது கருத்து.)

யாக்கையோடு மிசையுமிருவினை
நீக்கலாவன வல்லநிலத்திடை

(இ-ள்) ஆதாரமாவது ஆகாரமானவுடம்பு நடத்தப்பட்ட சீவன்மனது முதலான அந்தக்கரணம் பிராணபானாதிவாயுக்களினாலே ஆசையுடனே வரப்பட்ட தொழில் இந்தவுடம்புசீவனாகரணத்தொழிலென்ற நாலினுடைய உண்மைத்தொழிலுக்கு அருத்தமாகப்பட்டசோதியான தெய்வமென்பதென்று முன்சொன்ன நாலினுடனே தெய்வமென்று கூட ஆ அஞ்சு-எ-று. (௰௪)

வாக்கினாலாதன்மெய் மனத்தினாகுக
லாக்கையாலாதவிவ் வுலகில்யாவரும்
விக்குவார்சிலையினாய் வினையிரண்டிலொன்
றுக்குநாளிங்கிவை யைந்துமதேண்டுமாம

(இ-ள்) வாராவிருகக்கட்டின வில்லையுடைய அருச்சுனா வாக்குமனகாயத்தாலாகுதல் இவ்வுலகில் எலலாரும் நல்வினை தீவினை இரண்டிலொன்று செய்யும்போது இப்போதுசொன்ன இந்தவுடம்பு சீவன்கரணத்தொழில் தெய்வமென்ற அஞ்சம் வேணும் எ-று. (௰௫)

இவ்வகையேவரு வினையிரண்டையு
மெய்வகையேயா னன்றிவேறிலைச்
செய்வகையானெனச் சிந்தைமேயினா
னுய்வகைவேறிலா னுணர்வுமாய்ந்துளான்.

(இ-ள்) இந்தப்படியே வரப்பட்ட கருமமிரண்டையு மெய்யானபடி பொருந்தினவனல்லாமல் வேறில்லை இந்தக்கருமத்தைச் செய்யப்பட்ட விதத்தையுடையவனும் நானென்று மனதிலே அகங்காரமடைந்தவனே அந்த அகங்காரமே கெதியல்லாமல்லேறேதப்பிப்பிழைக்கின்ற வகையில்லாதவன் அறிவுகெட்டவன்-எ-று. (௰௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்

யாவனொருவன்றன்னுடம்பை யானென்றிருக்குமியல்பொழிந்தா
னியாவனொருவன்கரணங்க ளியாதென்றேமெவிளைந்திரா
னியாவனவனிவ்வுலகத்தை யடையக்கொன்றானயினு மப
பாவமில்லையவன்கொன்ற பழியுமில்லைபார்மன்னா

(இ-ள்) எவனாகிலும் ஒருவன் தன்னுடைய சரீரத்தை நானென்றிருக்கப்பட்ட சுபாவத்தையொழிந்தானோ அவன் எவனாகிலும் ஒருவன் அந்தக்கரணங்களானவை ஏதாகிலும் ஒருவிஷயங்களிலிச்சையாக விரானோ அவனெவனோ அவனிந்த வுலகத்தாரை யெல்லாங் கொன்றானாலும் பாவமில்லை அவன்கொன்ற பழியு மில்லைகண்டாய்ராஜாவே-எ-று, * (பாவமும்பழியுமில்லையெனவே அவன்செய்தகருமம் இப்படி முடிந்தாயிற்று, (௰எ)

அறிவுமறியப்படும்பொருளு மறிவானொருவன்றானுமாய்
நெறியில்வினைகள்விதிக்கின்ற விதியினிலைமைநிற்பதுதான்
செறியுந்தொழிலுஞ்செய்வானுஞ் செய்தற்குரியவறிவுமாங்
குறியில்வினைகண்முடிப்பதுவு மின்னுஞ்சிலவுங்கூறக்கேள்.

(இ-ள்) எல்லாவற்றையுமறிகின்ற அறிவும் அந்த அறிவினாலறியப் படுகின்றபொருளும் இவைகளிரண்டையுமறிகின்றவனும ஆகிக் கரு மத்தைவிதிக்கின்ற விதியினுடைய நிலைமைகெடாமல நிற்பது ஏதுவா னதாகிய கருமமும கருமத்தைச்செய்கின்றவனும அந்தக்கருமத் தைச்செய்வதற்கு உரித்தான அறிவுமென்று மூன்றாகப்பட்டகுறியி லே கருமங்கள்முடிந்திருப்பது இன்னுஞ்சிலசொல்லக்கேள் அருச்சு னா-எ-று. (௰அ)

ஆன்றவறிவுங்கருமமுமக் கருமஞ்செயாக்கினோனு
மூன்றவுணரும்பகுதியொடு திருகுதியெனவேறுரைத்தனவு
தோன்றவினையுமின்பமுமுன் சொன்னகுணங்களின்றொடர்ச்சியிலே
மூன்றுவகையாமோரொன்றே யவற்றின்றிறனுமொழிவக்கேள்,

(இ-ள்) நிறைந்த அறிவாகியஞானமும அந்தஞானத்தினால் செய்கி ன்றகருமமும் அந்தக்கருமங்களைச் செய்கின்றவனுமென்ற மூன்றையு மூலப்பகுதியாக அவையறியப்பட்டபுத்தியுடனே திருத்தியென்று வேறே சொன்னதைரியமும நன்றாகவுண்டாக்கப்பட்ட சுகமுமாக ஞானம கருமங்களாதன் புத்தி தயிரியம சுகமென்ற ஆறுமொவ்வொன்றேமுன் சொன்ன முக்குணத்தொடர்ச்சியினாலே மூன்றுவிதமாம் அவைகளி னுடைய விதத்தை நான்சொல்லக்கேள அருச்சுனா-எ-று; (௰௯)

நன்றாய்ஞானத்திரளாகி நானாவிதமாய்விரிந்தெங்கும
பொன்றுகின்றபூதங்க டோறும்பொன்றாப்பொருளாகி
யொன்றாநிற்பதொன்றினையப் படியேயுணருமுணர்வதனை
யன்றேமெய்யுணர்சாத்துவிக ஞானமெனவேயறைப்பர்களால்,

(இ-ள்) நன்றாகி ஞானத்திரட்சியாகிப் பலவிதமாயெங்கும் வியாபி த்து அறியப்பட்ட சகலபூதங்களிலும் அழியாதபொருளாகி ஏகமாகி நிற்பதாகிய ஆத்மாவானவொன்றை அப்படியேயறிகின்றஅறிவைச்சா த்துவிகஞானமென்றே விதிப்பார்கள் அல்லவென்றுசொல்லார்-எ-று,

ஊனப்படுமிவ்வுடறோறு முள்ளபொருளையுணராதே
ஈனப்படக்காண்கின்ற விராசதமாஞானமேயாகு
ஞானத்திரளாய்நின்றதையோ ருடம்பினிடையுநாட்டிடையோர்
தானத்திடையுமடங்கக்காண் பதுதாமததமாஞானமே,

லாவற்றிலும் மனது ஒருமையாகச்செய்ய அதுவே முந்தினதாகவரப்பட்ட காரியமெல்லாந் தாமதகருமம்-எ-று. (௨௧)

பற்றுமாங்காரந்தானும் பழுதறத்துறந்துயாவு
மூற்றெழுமுயற்சியோடு நிலையினோடுமையுமொன்றி
பெற்றமோரிழிவுபெற்றி துன்பமோடின்பமென்றுஞ்
சற்றுமோர்சலிப்பிலாத தலைவன்சாத்துவிகனென்பான்.

(இ-ள்) கருமபலத்திலிச்சையு மாங்காரமுங்கெட எல்லாம்விட்டுத் தன்னிடத்திலிருந்தெழும்புகின்றவுச்சாகத்தோடும்நிலையோடும்வசனமுமொருமித்துயாதாகிலுமொரு போக்குவருத்துஎன்ற லாபநஷ்டங்கள் துக்கம் அவற்றுடனே சுகமென்ற விலைமுதலாகியனவந்தாலெல்லாவற்றைக்குஞ் சற்றாகிலுமொரு சலிப்பில்லாதகர்த்தன் சாத்துவிகனென்று சொல்லப்படுவன்-எ-று. (௨௪)

கலிவிருத்தம்.

வினைப்பயன்றனை வேண்டலும்வேட்கையு
மெனைத்துமியார்க்கு மிடாமையுந்தூய்மையு
நினைப்பினீடு நெஞ்சின்மகிழ்தலு
மினைப்பவாழ்பவ ரிராசதமாந்தரே.

(இ-ள்) செய்கிற கருமத்தின்பலனையிச்சித்தலும் சகலசுகமுந்தனக்கேவேணுமென்கிற ஆசையுமெவ்வளவாகிலும்யாருக்குங்கொடாதலோபமுஞ் சுற்றமும பலசித்தியாகிறதற்குமுன்னே நினைக்கிறநினைப்பிலே ஆமோ ஆகாதோவென்று அனேகநீளமாக நினைக்கிறதும் பலசித்தியானபேர்க்கு மனதிலே சந்தோஷப்படுகிறதும் இந்தவிதமாக வாழ்கிறமனிதர்-எ-று. (௨௫)

மனமொருக்கலும் வான்கலைநூல்களைத்
தனமொருக்கொடு கற்றலுந்தக்கவ
ரினமகிழ்த்தலு மின்றியுண்டாக்கிய
சினமவிடுக்கிலார் தாமதஞ்சேர்ந்துளார்

(இ-ள்) மனது பலவழியோடாமல் கொடுக்கிறதும் பெருமையுள்ள கலை சாஸ்திரங்களைத் திரவியசெலவுபண்ணிக்கொண்டாகிலும் கற்கிறதும் பெரியவர்களின் கூட்டத்தை சந்தோஷிப்பிக்கிறதுமல்லாமலுண்டாகின கோபத்தை விடமாட்டாதவர்கள் தாமதகுணஞ்சேர்ந்தவர்கள்-எ-று. (௨௬)

ஈனமற்ற துறவறமில்லற
ஞானம்பெற்றெறுடு நல்வினைதீவினை

யானதஞ்சுவ தஞ்சத்தகாதென
தாவறிந்தது சாத்விகபுத்தியே.

(இ-ள்) ஒருகாரியத்தை நினைக்கிறபோது இதுகுற்றமற்ற துறவறமோ இல்லறமோ ஞானமோ பந்தமோ இதுபுண்ணியமோ பாவமோவென்று விசாரித்தாலது இதுசாஸ்திரவிதியல்லாததினாலே பயப்படுவது இதுசாஸ்திரவிதியாகையாற் பயப்படத்தக்க தல்லவென்றுதான் நிச்சயமாகவறிந்து சாத்துவிகபுத்தி-எ-று (உஎ)

தருமம்பாவந் தனக்குச்செயத்தகுங்
கருமஞ்செய்யத் தகாதகருமங்க
ளருமையாலறி யாதவறிவரோ
விருமையாயத விராசதபுத்தியே.

(இ-ள்) தர்மம்பாவந் தனக்குச்செய்யத்தக்ககாரியஞ் செய்யத்தகாத காரியங்கள் இவைகளை யருமையிலறியாத அறிவுசாத்துவிகதாமதமான விரண்டுவிதமுங் கலந்ததாகிய இராசதபுத்தி-எ-று. * [தனக்கென்று அவரவருக்கு விதித்தகுலாசாரப்படியே தனக்குச்செய்யத்தக்கதென்றார்.] (உஅ)

பாவமாகத் தருமத்தைப்பார்க்கிலு
மாவதாமென் றடாததுநோக்கலுந்
தீமைசெய்கின்ற சிந்தனைதீங்கிலே
போவதாமது தாமதபுத்தியே.

(இ-ள்.) தருமத்தைப் பாவமாகப்பார்க்கிறதும், அடாதபாவத்தை ஆவதான தருமமாகப்பார்க்கிறதும், பொல்லாததைச்செய்யெண்ணமனது பொல்லாதிலே போவதாகியது தாமதபுத்தி எ-று. (உகூ)

மனஞ்செயுந்தொழின் மன்னுயிரின்றொழி
லினஞ்செயிந்த்ரியஞ் செய்தொழிலென்றிவை
கனஞ்செய்தேறினுங் கண்டுபொறுத்தலுஞ்
சினஞ்செயாமையுஞ் சாத்துவதிருத்தியே.

(இ-ள்.) மனதுசெய்கிறதொழில் நிலையான பிராணவாயுவினுடைய தொழில் ஐந்தென்று கூட்டஞ்செய்த இந்திரியங்கள்செய்கின்ற தொழிலென்றுசொல்லப்பட்ட கருமங்கள் கனமாகச்செய்து அதிகமானாலும் அவைகளைவெவ்வேறேயாகக்கண்டு பொறுமையுங்கோபமுஞ்செய்யாத பொறுமையுஞ் சாத்துவிகத்தைர்யம்-எ-று. (௩௰)

பண்ணிக்காமந் தருபயனைக்கொள்வா
[illegible]

கண்ணிற்சோகங் களிப்புறக்கம்பய
நண்ணித்தாங்குச்சதமயபொறைநாளுமே.

(இ-ள்) கருமத்தைப்பண்ணி யந்தயிச்சையானது தரப்பட்டபயனை க் கைகொள்ளவேண்டிநினைத்து மனது பிராணவாய்வு இந்திரிய மி வைகளுடைய தொழிலைத்தாங்குகின்ற திருத்தியானது இராசத் தயி ரியம் தயிரியம் பொறுமை திருத்தி இவைமூன்று மொன்று இப்பால் விசாரிக்கிற சுகம் மதம் நித்திரை பய மிவைகளுண்டாகிறவிஷையங்க ளை இச்சித்து மனது பிராணவாய்வு யிந்திரியங்களின் தொழிலைக்கூ டித் தினந்தியமுந் தாஙகப்பட்ட தயிரியத் தாமததயிரியம்-எ-று கக

துன்பமாவது பொன்றுதுடக்கற
வின்பமாகி வினைவிடையாவர்க்கு
மன்பவாரமு தேயனலாவதா
மென்பசாத்து விதந்தருமின்பமே

(இ-ள்) தோழாகேள் ஒருசுகத்தைமுதல்பழகுகையில் துன்பமாவ தை யொப்பாகியிருந்து பழக்கந் தீர்ந்தபிறகு சகல கருமத்துடக்கும் அறத்தக்கதாகச் சுகமாகி வினைகிறவிடத்திலேயெல்லாருக்குங் கிடை யாத அமிர்தமென்று சொல்லலாவதாகுமென்பது சாத்துவிகங்கொ டுக்கிறசுகம்-எ-று. (கஉ)

பொருத்தமாம்புல னோடுமொழியிலே
யருத்தமாமெழுந் தாரமுதென்னலாய்
விருத்தமாய்விளைத் தாவிடமாகியே
யிருத்தலாகு முராசதவின்பமே.

(இ-ள்) இந்திரியங்களுடனே யொருத்தமாகிய விஷையங்களிலே விசுவாசமாயெழுந்தால் அமிர்தமென்றசொல்லாகி வெறுப்பாயெழுந் தால் விஷையமாகியிருக்கிறது விராசதசுகமாகும்-எ-று. (கங)

துடருறக்க மயக்கொடுசோம்புமேற்
படவுதித்தவை பண்ணும்பொழுதினுங்
கடன்விளைத்து முடிந்தகாலத்தினு
மிடர்விளைப்பது தாமதவின்பமே.

(இ-ள்) எந்நாளுந் தொடர்ந்துவருகிற நித்திரை மயக்கம் அதனுடை ய சோம்பு இது அதிகப்படவுண்டாகி அவைகள்செய்யும்போது அது முறைமையாகவுண்டாக்கி முடிந்தபோதும் ஆத்மஞான சுகம்பிறக்க வொட்டாமல்துக்கத்தையுண்டாக்குவது தாமதசுகம்-எ-று. (கச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இந்தவியற்கையினுவிக் குணங்களைவிட்டவரில்லை
அந்தணர்க்கும்வணிகர்க்கு மரசருக்குஞ்சூத்திரற்குந்
தந்தமியற்கையினுற் குணமூன்றின்றன்மையினுல்
வந்தவினைத்திறமவற்றை யுணர்த்தக்கேண்முடிமன்னு.

(இ - ள்) இந்தசுபாவத்தினுலே விகதக்குணங்களை விட்டவர்களில்லை பிராமணருக்கும் இராஜாக்களுக்கும் வைசியருக்கும் சூத்திரருக்குந் தங்கள்தங்கள் சுபாவத்தினுலாகிய மூன்றுகுணத்தினுடையசுபாவத்தினுலேவந்த கருமவிதங்கள அவைகளையுனக்குந் தெரியச்சொல்லக் கேள் கிரீடந்தரித்த ராஜாவே-எ-று, (கடு)

கலிவிருத்தம்.

களைசெயைம்புலன்களைக் கரணநான்குடன்
துறைதுறையடக்கலுந் தவமுந்தூய்மையும
பொறையொடுகல்வியும் பொருந்துஞானமு
மறையவர்தொழிலென வகுக்கவேண்டுமே.

(இ-ள்)குற்றத்தைச்செய்கின்றபஞ்சேந்திரியங்களை அந்தக்கரணநாலுடனே அவையவைகளை அந்தந்த துறைகளிலும் அடக்கிறதும் தேகமும் போகங்களைவிட்ட தபசும்சாஸ்திர விதியாசாரமான சவுசாதிசுத்தமும், படித்தவர்களிடத்தில் விகாரமில்லாத பொறுமையும், அவற்றுடனே பரத்துவத்தையறிகிறகல்வியும், வேதசாஸ்திரார்த்தமும், பரதத்துவநிச்சயமும் பொருந்தினஞானமும் பிராமணர்களின் கருமமென்று சொல்லவேணும்-எ-று. (கசு)

தலைமையுங்கொடையொடு தறுகணாண்மையும்
நிலைமையுங்கீழ்ப்படா நெஞ்சினிட்டமுங
கொலைபயில்போர்களிற் புறங்கொடாமையுஞ்
சிலைமலிதோளினு யரசர்செய்கையே.

(இ-ள்) வில்லுச்சண்டைமிகுந்த தோளையுடைய அருச்சுன கர்த்தத்துவமுந் தானமும் அதினுடனே ஆங்காரமான ஆண்மையுஞ்சலியாத நிலைமையான தயிரியமுங் கீழ்ப்படாதமனதுடைய மேன்மையுங் கொல்லுகின்றதைச் செய்யப்பட்ட சண்டைகளிலே ஓடாமலெதிர்நடக்கிறதும் அரசர்களின் தொழில்-எ-று. (கஎ)

உழுதொழில்பசுக்களை யோம்பல்வாணிபம்
வழுவறச்செய்தையே வணிகர்வாழ்க்கையாம்
பழுதறவிவர்களைப் பாதுகாத்தலே
விழுமியதொழில்களவே ளாளர்க்கென்பவே.

(இ-ள்) உழவு தொழில் பசுக்களைக்காக்கிறது வாணிபம் குற்றமறச் செய்கிறது-இவைகள் பழைமையான வைசியருடைய தொழிலாகும் இந்த மூவரையுங் குற்றமற இடைவிடாமல்காக்கிறது மேலாகிய வோர்த்தொழில்கள்செய்கிறது இந்தத்தொழிலகள் சூத்திரரானவேளாளருக்கென்றுசொல்லுவது எ-று. (கூ அ)

கலிவிருத்தம்.

நீராவனைத்துஞ் செயலேசெயலே
நாராயணனு முதனாயகனுக்
காராதனையா மதனாலவரே
வாராவழியா மவரேதருமால்

(இ-ள்) இந்த நாலுவருணத்தாலும் தங்கள்தங்களின் தொழிலேயே செய்யவே அவை (நாராயணனாகிய) தலைமையான கர்த்தனுக்குப் பூசையாம் அதனாலே அந்நாராயணரே இவர்கள்திருப்பவாராதவழியாகிய மோக்ஷமாகப்பட்ட வரத்தைத்தருவார்-எ-று, * (அன்னியவர்ணாசாரத்தைச் செய்தவர்கள் நரகிலவிழ்வாரென்பதுகருத்தாப-தி ()

அல்லாவினைதா னழகாவரினுஞ்
சொல்லாபெரியோ ரவைசெய்வதனிற்
றொல்லாதலமே தொடருந்தொழிலே
பொல்லாவெனினுஞ் செயலேபொருளே

(இ-ள்) சுத்தமல்லாத அன்னிய வருணத்தாருடையதொழி லழகாய்வந்தாலும் பேரியோர்கள் தங்கள் கருமங்களைவிட்டு அன்னிய கருமங்களிலே போகார்கள் அன்னிய வருணத்தாருடைய கருமம் நல்லதென்று அந்தக்கருமத்தைச் செய்வதிலும் பழமையான தங்களுடைய குலத்துக்கு அன்றுமுதலாகத் தொடர்ந்ததொழில் பொல்லாதானாலும் தங்களுடைய குலாசாரம் செய்கின்றதே நல்ல திரவியம்-எ-று.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கனலெறிபுகையோடன்றிக் காணமுன்படாமைபோல
வினைகளுங்குற்றந்தன்னை விட்டிராதாதலாலே
யனையதென்றிகழ்தலாத வடுத்தகாரியங்கடம்மை
நினைவருந்தருமமென்றே செய்கையேநீதியெல்லாம்

(இ-ள்) சத்தமுடைய நெருப்புப் புகையுடனே காண்பதல்லாமல் புகையில்லாமல் நெருப்பைமாத்திரம் காண்பதற்கு எதிர்ப்படாததுபோலக் கருமங்களுங் குற்றத்தைவிட்டுநிர்மலமாயிராது ஆகையாலே அப்படிக்குற்றமுடையதென்று செய்யாமல் வெறுத்து விடாமலாவது தங்கள்தங்கள்குலத்துக்கு அடுத்த கருமங்களை நினைக்

கப்படாத பிரமமாகியதருமமென்று எல்லாஞ் செய்வதேவிதி-எ-று *
(எல்லாமென்பதேனென்னில் ஒருகுலத்துக்கு விதித்தகருமம் அனே
கத்தில் வெகுகருமம் நல்லதா யிருக்குஞ் சிலகருமங் குற்றம்போலத்
தோன்றும அந்தகுற்றமாகக் கண்டதைவிடாமலெல்லாஞ்செய்வதேநி
யமமென்றுநிதியாவதுசிருஷ்டிக்குமுன்நியமமானது. (௪௧)

இதுவுமது.

வெல்லப்பட்டமனத்தினனாய் வேறொன்றினையும்வேண்டாதே
யல்லற்பற்றுமுடம்பற்று மறவேயறுத்தான்வினையாவுஞ்
செல்லச்செல்லவெறுத்தவனா யதனாற்சித்தமுடிவாகச்
சொல்லப்பட்டகரணங்க ளுக்குத்தூய்தாய்விடுமன்றே

(இ-ள்) செயிக்கப்பட்டமனதையுடையவனாய்என்னைத்தவிரவேறொ ன்றையும் இச்சைப்படாமல் துக்கத் தொடர்ச்சியான ஆசைப்பற்றுந் தேகத்தொடர்ச்சியான ஆசைப்பற்றும்ஒருக்காலுமில்லாமலறவேவெ றுத்தவனாய்கருமங்களெல்லாம்நடக்கநடக்க அந்தப்பலன்களைவெறுத் தவனாய் அதிலேமனஞ்சலிக்கச்சித்தமுடிவாகச்சொல்லப்பட்ட நாலுக ரணங்களுஞ் சுத்தபவித்திரமாகிவிடுவன்-எ-று. (௪௨)

சொன்னகரணமவைநான்குந் தூய்தாய்விடுமத்தூய்மையினா
லுன்னரியபெரும்பொறையை யுடையனாகுமப்பொறையா
லின்னல்செய்யும்பொறியைந்து மிராகத்துவேஷமெனுமிரண்டு
மன்னதன்னைநலியாம லாற்றுமதனை மாற்றினன்.

(இ-ள்) என்னைத்தவிர வேறொன்றையும் இச்சியாம லறவிட்டால் மனம புத்தி யாங்காரஞ் சித்தமென்றுசொன்ன கரணமான நாலும் நிர்மலமாகிவிடும் அந்தக்கரண சுத்தியினாலேநினைக்கவரியாதபெரிய பொறுமையாகியதயிரியத்தையுடையவனாகும அந்தப்பொறுமையினா லே துக்கத்தைச்செய்யப்பட்ட அஞ்சுவிஷயமுமவிருப்புவெறுப்பெ ன்கிற விரண்டும அந்தவேழைதன்னைவருத்தாமல் அவைகள் செய்ய ப்பட்ட தொழிலைப் போக்கிவைவன-எ-று. * (ராகமாவது ஆசைதுவே ஷமாவது பிணக்குதூயதாயுமென்றுமற் றாயதாய் விடுமென்றது நிரு மலமாய் முன்னிருந்த மலம் விடுமென்பது.) (௪௩.)

காடுமலையுமலைமுழையுங் கடுநாமுதலைகளில்லா
வோடும்தனலாற்றுளளிட்ட விடமேயுறையுளாககொண்டு
தேடும்பொருளென்றின்றியே சிறிதேயுண்டுசென்றெங்கு
மாடுமனவாய்மொழியாக்கை யடக்கப்பெறுமாலவனேயால்

(இ-ள்) காடும் மலையும் முழையுங் கடினமானநாரகையுடைய மு தலையினாலே வருத்தமில்லாமல் ஓடப்பட்ட சலத்தையுடைய ஆறு மிவைகளுள்ளிட்ட விடமே யிருக்கிறவிடமாக விருந்துக் கொண்டு

தேடப்பட்ட பண்ட மொன்றுமில்லாமலே கொஞ்சமாக ஆகாரம்ப ண்ணி யெங்குந்திரிந்த கூத்தாடப்பட்ட மனது வாய் வசனஞ்சரீர மி ந்தமூன்று கரணங்களையு மடக்கப் பெறுவானந்த நிருமலன்-எ-று, * (கடுமாமுதலே நவிவில்லாவென்றுபாடமாயிற் கடினமிருகமுதலான உபத்திரவமில்லாத காடென்றுரைப்பது) (ச ச)

சொன்னவிவைவயோவடங்கிடவே தோன்றுகளிப்புங்காமமுமுன்
பென்னதியானென்கின்றதுவு மெரிபோல்வெகுளியொடுவலியு
முன்னறவிர்ந்துசாந்திபெறுஞ சாந்திபெறவேயோரிடத்தும்
பின்னமடையாதொன்றாகி நின்றபொருளின்பேருருவாம்.

(இ-ள், மனம் வாக்கு காயமென்றுசொன்ன இந்த்திரியிந்தகரணங் களும் அடங்கிப்போகவே முன்னமேயுண்டாக்கப்பட்ட கெர்வமும் ஆ சையும் எனதென்கிற சுதந்திரமும நான் சருத்தனென்கின்ற ஆங்கார மும் நெருப்பைபயொப்பான கோபமும இவையாளுடனேபலமும் இ வைகளை நினைப்பதைவிட்டுச் சாந்திபெறுவன் இந்தச்சாந்தியைப்பெற வே ஓரிடத்திலும் பின்னமாக விடைவிடாமல பூரணமான வேகமா கிச் சலியாமல்நின்றபிரமத்தினுடைய பெரியசொருபனுனவன்-எ-று.

அந்தவுருவானவன்பின்னை யாதேவரினுமபரிவுறு
னிந்தவுலகத்துயிர்களெல்லா மொத்தேயிருக்குமிக்கவனும்
பந்தமலவிட்டெனைபுபமி பத்திபெறுமப்பத்தியினுற்
சிந்தையிலடையேயெனைத்தெளியு மதனுலெனையேசேருமால்.

(இ-ள்) அந்தப்பிரமசொருபமானவன் பிறகு எவ்வெவற்காலும் அ தில இச்சையாய்க்கெடான் இந்தப்பிரபஞ்சத்திலுள்ளசீவனுக்கெல்லா ம் இவனுஞ்சமனுயிருப்பன் பாசபந்தமறவிட்டு என்னையுமறியப்பட்ட பத்திபெறுவன் அந்தபத்தியினுலே மனதினிடத்திலே என்னைத்தெளி வான் அந்தத்தெளிவினுலே என்னையேசேருவான்-எ-று. (ச கூ)

என்னைப்பற்றிக்கொண்டிறவே டெல்லாவினையுமியற்றினும்
பின்னைப்பிறவாப்பெறும்பதமென் னருளினுலேபெறுங்கண்டாய்
னின்னைத்தொடரும்வினையெல்லா மென்னைநினைந்தேசெயின்வினை
டன்னைக்கடத்தற்கருந்துன்ப மெல்லாங்கடக்கத்தகுதியால்.

(இ-ள்) உறுதியாக வென்னை இச்சித்துக்கொண்டு எல்லாக்கருமத் தையுஞ்செய்தாற் பிறதுபிறவாத பெரியமோட்சத்தை என்னுடையகி ருபையினுலே பெறுவன்கண்டாய் அருச்சுனா ஆகையால் உன்னைத் தொடர்ப்பட்ட கருமத்தையெல்லா மென்னையே நினைத்துச்செய்தால் அந்தவினைகளை அவைகளால்வரப்பட்ட கடகிறதற்கரிதான துக்கமெ ல்லாங் கடக்கத்தக்கவனுப் எ-று. * என்னையேநினைப்பதாவது கரும

ம்பண்ணுகின்றவனும் பண்ணுவிக்கிறவனும் பதத்தையடைகிறவனும் நானேயென்றென்னை நினைத்துச்செய்யென்றதனாலே நீ வினையைத்தொடாதிரும் என்பதுகுறிப்பு.) (௪௭)

அறுசீரடி யாசிரியவிருத்தம்,

ஒன்றியமனத்தினாலே யானுரைக்கின்றவுண்மை
நன்றிதென்றுணராயாகி னாசமேயடை யுமற்றீ
தன்றியுமரசர்க்கெல்லா மடுத்தகாரியமாயுள்ள
வென்றியையுடையாயேனும் வேறுநீவிளைவகேளாய்,

(இ-ள்) ஒருமையானமனதினாலே நான்சொல்லுகின்ற உண்மை இது நல்லதென்றறிந்துகொள்ளாயாகில் நாசத்தையேயடைவாய் இதுவல்லாமலும் இராசாக்களுக்கெல்லாம டுத்தகாரியமாயிருக்கின்றவெற்றியை நீயுடையாயாகிலும்இனிமேலொன்றுவிளைவதுண்டோ அதைச்சொல்லுகிறேம் கேள் அருச்சுனா-எ-று, (௪அ)

கலிவிருத்தம்.

விரைசெயதார்மன்னவேண்டலைபாயினுங்
கரைசெய்துன்றனைக் காலுறவார்த்திடு
மரசர்தங்குண மாகியவாண்மையே
புரைசெயவாளமர்க் கேபுகுவிக்குமால்.

(இ-ள்) பரிமளிக்கின்ற மாலையைத்தரித்த ராசாவே நீ என்வசனத்தையுந்தள்ளிச சண்டையை வேண்டாதவனானாலும் வங்கிஷக்கிரமமாககட்டுப்பட்ட ராஜாக்களுடைய சுபாவகுணமாகிய ஆண்மையானசேவகமே அஞ்ஞானமென்கின்ற வகையினாலே உன்னைசசேர்த்து நான்சொல்லப்பட்ட பெரியசண்டைக்கே புகுதப்பண்ணும் எ-று,

பொறிகளுண்ணின் றவற்றின்புலைப்பெலா
மறியவாட்டினன் போலவாக்கைகள்
வறிதுநின்றுதன் மாயையினால்வினைக்
குறிகள்செய்விப்ப னீசனென்றேகொள்வாய்.

(இ-ள்) சகலசீவன்களுடைய விஷயங்களுக்குள்ளேநின்று அந்தவிஷயங்களுடைய பொருத்தமெல்லாமறிய ஆட்டுகின்றவனைப்போலத் தன்னுடையமாயையினாலே அவர்களுடைய சரீரங்களானவை விருதாவாகநின்று கருமத்தினுடைய குறிகளைச் செய்யப்பண்ணுகின்றவன் ஈஸ்வரனென்றேயறிந்துகொள்வாய் எ-று, * (இவை சேவகம்வேண்டாமென்றிருந்தால் ஈஸ்வரனுடைய ஆக்கியாசக்கரம் திரும்பாமல்விடாதென்பதுகருத்து,) (௪௯)

வேறுபட்டொருவற்குவிளம்புவ
மாறுபட்டபொருளின்வகையெலாம்

கூறப்பட்டதுனக் கிக்குறிகளை
யேறப்பார்த்துனக் கேறியவைசெய்வாய்.

(இ-ள்) வேறுவசப்பட்ட ஒருவருக்குச்சொல்லாமல் விலக்கப்பட்ட ரகசியமான பொருளினுடைய வகையெல்லாம் உனக்குச்சொல்லப்பட்ட இந்தக்குறிகளை யுனக்கேறப் பார்த்துப்பொருந்தினபடிசெய்வாய்-எ-று. * (ஏறப்பார்த்தலாவது மனதிலேகொள்ளவிசாரித்தல்.) (௬௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நீதவலாதனவுளவோ வினவேண்டிலெனத்தேறி
யோதலினுளினைத்தலினு லெனைப்போக்கியொன்றறியா
யாதலினலியாவர்களு மறியாதவொருபொருளைக்
காதலினலுனக்கினன முரைக்கின்றேன்கடைப்பிடிநீ

(இ-ள்) இவன்வேணடினும் போகாத பொல்லாங்குண்டோவென்று மனதுதேறி ஓதுகிறதினாலும் நினைக்கிறதினாலும் என்னைத்தவிர வேறொன்றையுமறியாதனாகையினாலே எல்லாருமறியாத ஒருபொருளை ஆசையினாலே நன்றாயுனக்குச்சொல்லுகிறேன் அருச்சுனா மறவாதகடைகைக்கொள்ளுவாய்-எ-று. (௬௨)

என்னையேநினைந்தெழுவுன் மனத்தினையென்னிடையேவைத்
தென்னையேநினைந்திருமற் றென்றனக்கேபூசனைசெய்
என்னையேகுருவாக்கொள் ளுதிசெய்யிலெப்பொழுது
மென்னையேவந்தடைவ ரிதுமெய்யென் றுணர்நீயே.

(இ-ள்) என்னையேநினைந்தெழும்பு, உன்மனதை யென்னிடத்திலே வைத்து என்னையேநினைந்திரு, எனக்கேபூசனைசெய், என்னையேகுருவாகக்கொள்ளு இதை வேறுராகிலுஞ்செய்தாலெப்போதும் வந்து என்னையேசேருவார் இதுமெய்யென்றறி அருச்சுனா நீ-எ-று. (௬௩)

இருவேறுவகையாய வெவ்வேறுவினைகளையு
மருவேவனென்றறவிட்டு மாயையினுன்மறைப்பரிய
வொருவனையேபற்றுதியேல் பற்றினக்காலுனைப்பிறவிக்
கருவேரைக்களைந்தேறக் கைதருவேன்கதிர்வேலோய்.

(இ-ள்) இரண்டுவிதமாய் வேறுபட்டதாகிய பலவான் எந்தக்கருமங்களையுங் கூடேனென்று அறவிட்டுமாயையினாலே மறைக்க அரிதாகியவேகமான என்னையேசரணமடை சரணமடைந்தால் உன்னையலையப்பண்ணுகின்ற பிறவியினுடைய கெற்பவேரைப்பிடுங்கி மோட்சக்கரையிலேற என்கைகொடுப்பேன பிரகாசமுள்ளவேலைத்தரித்தஅருச்சுனா என்றவாறு. (௬௪)

முற்றுனக்குச்சொல்லியவிம் மறைப்பொருண் மாதவமிலர்க்கும்
குற்றமறுத்தறிவரு ஞான குருவழிபாடிலாதவர்க்குஞ்
செற்றமவச்சமுக்கியாக்கு மென்னைநினையாதநிறதத்தவர்க்கும்
பற்றமறதெரிந்துரைக்கை யடாதென்றேயறிகண்டாய.

(இ-ள்) மற்றப்படி யுனக்குச்சொன்ன இந்தரகசியப்பொருளைப் பெரியதவமில்லாதவருக்கும் குற்றமான அஞ்ஞானத்தைத்தீர்த்து ஞானத்தைக்கொடுக்கப்பட்ட குருவைப்பூசைபண்ணவில்லாதவருக்குங்கோபமுடைய மனதுள்ளபாவிகளுக்கும என்னைநினையாத காமியகருமிகளுக்குஞ் சமையமறத்தெரிந்துசொல்லுகின்றது ஆகாதென்றறிவாய்கண்டாய் அருச்சுனு-எ-று. * (சமையமாவது அவாகளுடைய குறைநீர்ந்த சமையம்) (நிு)

எல்லாப்பொருட்கும்பரமாமிப் பொருளையென்னப்பர்க்கிசையச்
சொல்லாற்றெரிவிப்பாகமமை யறியச்சொல்லவேண்டுமோ
நலலார்களின்மறறொரக்கினிய நன்மைசெயகின்றருமவ
ரலலாதவரிப்பொழுதில்லை மேலுமவருமுளராகார

(இ-ள்) எல்லாப்பொருளுக்கு மேலான இந்த அருக்கத்தைஎன்னுடைய பத்தருடைய மனதுக்கிசையச் சொலலினாலே தெரியப்பண்ணுகிறாகளை அறியச்சொலலவேணடுமோ அருச்சுனு உலகத்திலுள்ள [illegible] கின்பமானநன்மைசெயகிறவர்களும், என்னை அடைகிறவ ருு அவர்கள அலலாதவாகள இப்பொழுது எனக்கு நலலவர்களுமலல ஆகையால் அவர்களிருந்தாலும் இலலாதவாகள இனிமேலும் அவாகளுளளவர்களாகார், எப்பொழுதுமில்லாதவர்களே எ-று.

ஏயவிருவோம்பேசியவிவ் வறநூலினையேயெடுத்துரைப்ப
னுயஞானயோகத்தா லெனையேயாராதிக்கின்றுன
மேயபொருளைமதனைவிட்டு விருப்பாலோக்ககேட்பானும்
தீயவினைகளறவிட்டுத் தேவருலகஞ்சேருமால.

(இ-ள்) நாமிருவரு மிசையப்பேசின இந்தத் தருமசாஸ்திரத்தையேயெடுத்துச் சொல்லுகிறவனும், கிறைவேறிய ஞானயோகத்தினுலென்னையேபூசிக்கிறவனும், மனதிலேசேர்ந்த பொருளையைவிட்டு ஆசையினுலே மனது ஒத்துக்கொள்ளக் கேட்கிறவனுஞ்சொல்லுகிறவனும் பொல்லாதபாவஙகளை அறவிட்டுத் தேவர்களுடைய வுலகததிலே சேருவார்கள்-எ-று. (நிஎ)

கலித்துறை.

என்னுமொழியினு னியம்பியஞானத்தாலே
மன்னவவுனக்குறுவன் மயக்கெலாங்கெட்டதேயான்
சொன்னவிப்பொருள்களெல்லாந் துணிந்தனைகொல்லோவென்று
[illegible]

(இ-ள்) என்னுடைய வார்த்தையினால் நான்சொன்னஞானத்தாலே ராஜாவே, உனக்குவலிய அஞ்ஞானமெல்லாம நாசமாயினவோதான், சொன்ன இந்தஅர்த்தங்களெல்லாம் ஏகமனதுடனேகேட்டு நம்பிக்கையமென்று துணிந்தாயோவென்று நல்லசிரிப்புச்சிறக்கத் தேரிலேநின்று கர்த்தனாகிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி அருளிச்செய்தார்-எ-று, (௩௮)

கலிவிருத்தம்,

மன்னவவென்மாயமது குகன்மறைநூலின்
முன்னவைமொழிந்ததிரு வாய்மொழிகளாலே
என்னகுறையுண்டினி யுனக்கெனவியம்பத்
தன்னகமகிழ்ந்துயர் தனஞ்சயனுரைப்பான்.

(இ-ள்) இராசாவே யுனக்கினியென்னமயக்கம், இனி என்னகுறையுண்டென்று பரவாசுதேவனாகிய ஸ்ரீகிருஷ்ணசுவாமி வேதசாஸ்திரங்களை முன்னேதிருவாய்மலர்ந்தருளின வார்த்தைகளினாலேசெல்லத் தன்மனது சந்தோஷமாகிக கீர்த்தியாலுயர்ந்த அருச்சுனன்சொல்லுவான்-எ-று. (௩௯)

பையரவின்மேலினிது பள்ளியமர்வோனே
வையமுமிவ்வையமதின் மன்னுயிர்கள்யாவுஞ்
செய்யவினையற்றது சிதைத்தலதுதானு
மெய்தெரியினீமுன்விளை யாடும்வகையன்றோ

(இள்.) படத்தையுடைய பாம்பின்மேலே சுகமாகப் பள்ளிகொள்ளுகிற சுவாமி பிரபஞ்சமும் இந்தப்பிரபஞ்சத்தில் வாசமான சகல சீவன்களும் உண்டாகச்செய்ததொழிலுள்ளது, அழித்தல் இஃதிரண்டும் மெய்யாகத்தெரிந்து பார்க்கில் நீ முன்விளையாடப்பட்ட விநோதமல்லவோ என்றவாறு. (௬௰)

அணித்தகையசோதிய மலாவுன்னருளாலே
கணித்தலரிதாயபிற விக்கடல்கடந்தேன்
பிணித்தபெருமாயைமலங் கெட்டதுபிரானே
பணித்தபணியல்லது செயப்படுவதுண்டோ.

(இ-ள்) அழகிய சுபாவமான பிரகாசமுள்ள நிர்மலமாகிய சுவாமி, உம்முடையகிருபையினாலே கணக்கிடப்படாத பிறவிக்கடல்களைக்கடந்தேன் இந்தப்பிறவிக்கடல்களிலே என்னைக் கட்டிவிழப்பண்ணினபெரியமாயையினுடைய விசாலமானது நாசமாயிற்று, என்னுடையகர்த்தனே நீகட்டளையிட்ட ஏவலையல்லாமல் வேறுயேவல்செய்யப்படுவது உண்டோ இல்லை-எ-று. * (பிறவிக்கடலைக்கடக்கவே மோக்ஷக்கரையேறினேனெனவும், மாயை நாசமாகவே ஞானம்பெற்றேனெனவுஞ் சந்தேகந்தீர்ந்து கிருதார்த்தனானேனெனவு மருச்சாபத்தி.) (

வையமுழுதுண்டதிருவாய்மொழிதிறந்திட்
டுய்யவடியேன்முனுரைசெய்தவுரையாலே
ஐயமுமகன்றதெனவாகுமறவிட்டேன்
செய்ததினியுந்தனருளிச்செயல்களன்றோ.

(இ-ள்) பிரபஞ்சமெல்லாவற்றையும்பொசித்தருளியதிருவாய்மொழியைத்திறந்து அடியேன்மாயையைவிட்டு தப்பிப்பிழைக்க அடியேன்முன்னே யருளிச்செய்த திருவார்த்தையினாலே சந்தேகம்போயிற்று-என்னுடைய சுயமாகவிசாரிக்கிற தருமபாவவிசாரணையையுஞ் சுகத்தையுஞ் சுத்தமாக அறவிட்டேன் இனிஉமதுடைய அருளவாக்குச் செயல்களேயல்லவோ அடியேன்செயவது எ-று. * (அற்புமறவிட்டேனென்று பாடமோதில் என்னவர்களெனறவர்கள் மேல்வைத்த அன்புமறவிட்டேனென்பது கருத்து) (௬௨)

வேறு.

தோன்றாதனவுந்தோன்றவையுஞ்செய்யுந்
தொழினிமித்தமாய்த்திகழுஞ்சூழ்கதிரோன்போலச்
சான்றாகிநின்றதனைதநுகரணங்களசெயயுந்
தகைமைகளுக்கெல்லாந்தனிநிமித்தமாகி
வான்றனைவோர்வடிவின்றியொத்து
வரமபுகழ்ந்துநின்றவிம்மன்னுயிர்களெல்லா
மீன்றாலுங்காத்தழித்தலசெய்தாலுமுன்ற
னியல்பொம்மாறுகாததெய்வகையோவெந்தால்.

(இ-ள்) நினையாததை நினைப்பிக்கிறது சத்த பரிச ரூப ரசகெந்தமென்கின்ற ஐந்துகாரியத்துடனே செய்தொழிலென்றாக தொழிலநிமித்தியமா யெங்கும்பிரகாசிக்கும் சூரியனைப்போல சாக்ஷியமாயிருந்து மனம் புத்தி சித்தம் ஆங்காரமென்கிற காணங்களசெயயுங் காரியங்களுக்கெல்லாம் நானிமித்தமாகிக் கூடிவாழ்கின்றவன் என்றும் ஒருவடிவுமில்லாமல் ஞானயோகத்தினாலே யெதுவுஞ்சேராமல இருக்கின்றவனென்று மன்னுயிர்களையெல்லாம் காத்தழித்து உண்டாகருகின்றது முன்னுடைய வியாபியினாலே ஆகின்றது-அல்லாமல் பின்னையொன்றினாலேயுமாகின்றதில்லையென்றுசொன்னார் அருச்சுனராஜன்-எ-று. (௬௩)

எரியாயதலனுக்குவெமமைதானே
வடிவாகியிருந்தாப்போலியாதுமொன்றாந்
திரியாதமெய்யறிவினாருகாயேதுர்
திரியாமையெவ்வடிவாங்காணுமயாவும்
பிரியாதுநினைப்பற்றகின்னைசித்தம்
பெருந்தொழில்களபுரிகின்றபெற்றிகண்டாய்
கரியானயுணதடிமைத்திறமைபூண்டு
காதலியாற்கியலாதகருமமுண்டோ

(இ-ள்) அக்கினிக்கு வெம்மையானது வடிவாயிருந்தாற்போலவெதிலேயுஞ்சேராமல் மெய்யறிவினுருவா யெதுவுந்தெரியாமல் இருக்கிறவடிவானவனேயென்றுங் கரணமெல்லாம் பிரியாமலுன்னைத் தியானித்திருந்தபேர்க்கு ஊரானவனேயென்றும், பெருந்தொழில்களைசெய்கிறபேர்க்கு மரியவனேயென்று முனக்கடிமைபூண்டு பத்திசெய்தபேர்க்கு நினைத்த காரியமெல்லா மாகுமென்று சொன்னார் அருச்சுனராசன்-எ-று, (௬௪)

நானாவிதமாங்கரணங்களேனு
நனுகாதவுருவினையைம்புலன்களேனுங்
கானுறுதனிலுழலுங்கரணங்கட்கெல்லாங்
காரணமாய்நின்றவர்கள்காணுகின்றவெல்லாந்
தானாகும்வகைகாட்டியகரணந்தோறுந்
தனித்தனியேநின்றுதலையளியாநின்று
யானுமுன்னையவையோதுமென்று
மறியாதவகைநிற்பதெவ்வகைநீயையா

(இ-ள்) நானாவிதமான வெல்லாஞ்சேர்ந்த ரூபமுண்டானவனேயென்றும் நல்லபுலன்களென்கிற காட்டிலேயுழலுகின்ற கரணங்களுக்கெல்லாம் காரணமாய் நின்றவனேயென்றும கரணங்கள்காணுகின்றவெல்லாந் தானாகின்றவகைகாட்டினவனேயென்றும், அந்தக் கரணங்களைதோறும் பிறம்புபிறம்பாயிருந்து அறிவைத் தராமலிருந்தாயானாலுமவனைக் கரணங்களேதுமறியா வென்றும் தெரிந்திருக்கின்றவகை இந்தவகை ஐயாதென்றுஞ் சொன்னார் அருச்சுனராசன்-எ-று. (௬௫)

ஆடியினில்வேறுபடத்தோன்றுகின்ற
வன்னிழலுமுணர்வினாலுணர்ந்துபார்க்கிற்
கூடியவன்னிழல்போக்கிவேறில்லாமை
குறியாலேநிகழ்த்தாற்போற்குணங்களாலே
தேடியவிவ்வுடறோறுந்தோன்றித்தோன்றிச்
சீவனாய்த்திகழுகின்றவிகழ்ச்சிதானும்
பாடியவிம்மறைநெறியேயுணர்ந்துபார்க்கில்
நீயல்லாவகையுண்டோபரமயோகி

(இ-ள்) கண்ணாடியிலே வேறாய்காணுகின்ற நிழலை அறிவினாலேஅறிந்து அந்தநிழலைப்போக்கி வேறில்லாமல் குறிப்பினாலே நீசொன்ன ஞானமார்க்கப்பிரகாரம் பார்த்தால மூன்றுவித குணத்தினாலேவருஞ்சகலதேகங்கள்தோறும பிறந்து சீவனாய்த்திரிகின்ற இகழ்ச்சியெல்லாம் உலகத்திலே உன்னையல்லாமல் வேறேவகையுண்டோ பரமயோகியென்றுஞ்சொன்னார் அருச்சுனராஜன் எ-று. (௬௬)

செறிவாகுமாடியிலாதிடத்திலங்கே
திகழ்கின்றமுகநீழற்செய்கைதானும்
பிறிவாகிவேறுபடத்தோன்றுதேமுன்
பேசுகின்றமுகமேயாய்ப்பேதமகன்றுப்போ
னெறிவாழுங்கரணங்களெல்லாமேய்த்தது
நீயேயாயொழிவின்றிநித்தியாகி
லறிவானுமயபொருளுமன்றியொன்றே
யாயிருக்குமதுவேநின்னியற்கையாதி

(இ-ள்) கண்ணாடியிலேகண்ட முகத்துநிழலுடைய செய்கையைப் பிரிவாய் வேறாகவெண்ணாமல் துலக்கமான கண்ணாடியில்லாத இடத்திலே இருக்கின்ற முகம்போலப்பேதமில்லாமலும் நெறிவாழ்கின்றக் கரணங்களெல்லாமலும்போக்கி நீயேயாகி ஒழிவில்லாமல் நித்தியமாய நிகிறவனுமறிந்தபொருளான வஸ்துவும் பிறம்பும் இல்லையொன்றாக விருக்கின்றது மதனாலே உன்னுடைய இயற்கையென்று மாதியாயிருக்கின்றவனேயென்று சொன்னார் அருச்சுனராஜன்-எ-று, (கூஎ)

ஆதித்தன்றொருவனாகிநின்றே
யகதோறுமமர்ந்திருக்குதுபுனல்கடோறும்
பேதித்துப்பலவாகித்தோன்றினற்போற்
பிறிதின்றிநீயேயாய்ப்பிணக்கிறந்துநின்றே
வாதித்தமதியாகிகரணந்தோறு
மற்றவைபோற்றோன்றுகின்றமாயவனேமெய்மை
சோதித்துநின்பெருமைசொல்லுதற்குமேலச்
சுருதிகடாமல்லவோசொல்லிறந்தசோதி

(இ-ள்) சூரியனானவன் ஒருவனாகயிருந்தும் வீடுகள்தோறும் வைத்திருக்கிற குடத்துத்தண்ணீர்கள்தோறும பலவாய்க்கண்டது போலப் பிரியாமலெங்கும் நியாயசாந்தமடைந்து ஆதிக்கனைப்போல் ஏகமாய கரணங்கள்தோறும் காணுகிறமாயவனே யென்று உன்னைச் சோதித்து உன்பெருமையைச்சொல்லுதற்குச் சுருதிகளாலுஞ் சொல்லிமுடியாது சொல்லிறந்த சோதியென்றுஞ்சொன்னார் அருச்சுனராஜன் என்றவாறு, (கூஅ)

நிலையொன்றிச்சலிப்பின்றியொருவனேயாய்
நின்றாலும்வானிரவிகிழற்றானாலே
யலையொன்றுநீரோடேயலைந்துமற்றுங்
கசலமாநீரதனோடசலமாயுந்
தலைநின்றுவரும்படிபோலடிவுதோன்று
மவற்றுக்குத்தகநிற்குந்தகையோவுன்னைக்
கலைநின்றமறைதெரியவல்லவாகக்
காட்டுவதுஞ்சிலர்கண்டாலாவதென்னே

(இ-ள்) நிலையில்லாமலு மசைவில்லாமலும எங்கும் பரிபூரணமாய் ஒருவனாயிருந்தும் ஆகாயமெல்லாம் நிறைந்தும் நீராய் நீரோடே

லைசேர்ந்து கலந்து பின்னையுமிந்தப்புவன மெல்லாம்அழிந்துப்போ
ப் நீர் மேலாகவிருந்தபிறகு சேலுருவாய் உண்டாகி யதிலேயுமபொரு
ந்தியிருந்தும் உனக்குத்தடையுணடோ வென்றும் வேதாகமபுராண
சாஸ்திரங்களிலுலேயும் உன்னையறியப்போமோவென்றும் அப்படிக
லொத்தமகிமையைக் கருமிகளுக்குக் காட்டுகிறதென்னவென்றும அ
வர்களோககண்டு ஆவதெனனவென்றுஞ சொன்னார் அருச்சுனராச
ன்-எ-று. (௬௯)

ஓரொன்றலன்றியேயுலகிலுள்ள
வுறுபொருள்களனைத்தினையுமொருகாலத்தே
சீரொன்றுநின்றகதிரவிகாட்டுஞ
செயல்போலயாவர்களுஞசெயவினைகளெல்லா
மாரொன்றுநி ற நிராழியானே
யருகாலமொன்றிலறிவித்திடதியென்று
னொரொன்றுயனையொழிந்துசெயகின்றயாமீ
நிறகின்றவருளுடையநிலைமையென்னே

(இ-ள்)பூலோகத்திலுண்டான சீவராசிகளெல்லாவற்றிற்கும்மேகமா
யிருக்கிற சூரியன் மத்தியானததிலே கண்டதைமறந்து இராத்திரிக்கு
இருள்காட்டினதுபோல எவர்களுஞ்செய்கிற வினைகளெல்லாம் நீயே
என்று ஏகமாயிருந்து சங்கு சக்கரத்தைத்தரித்தவனேயென்றும் ஓடு
கிறகாலத்திலே யறிந்து கிருபையண்ணுவா யென்றும் ஏருதேரின்மே
லிருந்து மூலகத்திலேசஞ்சரிக்கிற சூரியனைப்போலிருக்கிற ஞானவா
ன்களிட நிறமென்னமோ அறியேனென்றுஞ்சொன்னார் அருச்சுனரா
ஜன் என்றவாறு. (௭௰)

அலர்கதிரோன்காட்டியவெப்பொருளுங்கண்டாய்
கண்ணொழியப்பொருளைவிழியறிகிலாபோ
லிலகறும்வெஙகிதர்காட்டறகேதுவாகி
யியாதொன்றுங்காட்டுமதுதானுமொன்றாய்
நிலவுறுமப்பொறியதுநின்வடிவமென்று
நிறையிஞன்மறையின்முடிவிறந்ததேனு
மூலகறியக்குழலூதிநிரைகணமேய்க்கு
முரவோனேயாருன்னையுணாகிற்பாரோ

(இ-ள்) பிரகாசம்பொருந்தியசூரியனலேசகலமான பொருளும்கா
ணப்படுமென்று அந்தசூரியனையல்லாமல் சகல பொருள்களையுமவிழி
யறியாதென்றும் அந்தவகைபோல எஙகும் வியாபகமாயிருக்கிறவஸ்
துவேயென்றும் மோகமாயிருக்கிறபே ரறிவார்கள்-அப்படி யறிகிற
பேர் உன்னுடையவடிவமென்றும் நிதானமாய் வேதத்தினுடைய மு
டிவுசொன்னதினலே உலகத்தார் அறிய ஆய்க்குழலூதிப் பசுக்களே
மேய்க்கிறவனேயென்றும் லோகத்திலே உன்மகிமையை ஆரறியப்
போகிறுரென்றுஞ்சொன்னார் அருச்சுனராஜன் எ-று. (௭௧)

ரூப்போலவும்,நீரிலேயுற்றசந்திரனைப்போலவும்மாணங்களைக்கொண்டு அதினுடைய தொழில்செய்வியபாயென்றுஞ் சங்குசக்கரத்தைதரித்தகையனேயென்றும்கண்ணினுலேகாணகின்றபேருக்குச்சமானமுண்டோவென்றுஞ்சொன்னார் அருச்சுனராசன்-எ-று. (எச)

பொற்புடையகுடத்துவிளக்கொன்றாய்நின்ற
 புகழ்தோறுமலவிளக்கேபுலனும்வண்ணம்
பற்பலவாமெனத்தோன்றும்பரிசுபோலப்
 பரிசோதித்தெழுந்துள்ளபற்றினுலே
நிற்பனவாநடப்பனவாமுடம்புதோறு
 நின்றாப்போலிருக்கின்றநிலைமைகண்டா
லற்புதம்வேறிலுண்டோமாயாவுன்னை
 யாராயாவறிவுடையோர்க்கறியலாமே

(இ-ள்) சல்லடைக்கணைபோலிருக்கிற குடத்திலே ஒரு தீபம்வைத்துப்பார்க்கபபார்க்க நிதானப்படாமல் பலபலவாய்க்காணும், அவைபோலஅன்பிலலாமல் மனவழுக்கினுலே பிறந்ததாபாசங்கமாய்ப் பிறந்திருக்கிற ரூபங்களதோறும் வியாபித்திருக்கிற நிலைமையைக்கண்டால அற்புதமான அதிசயம்வேறேயுண்டோவென்றும் மாயவனே உன்னையறிவினுலே ஆராயாதபேருக்கு அறிவிப்போமோ வென்றுஞ்சொன்னார் அருச்சுனராசன்-எ-று, (எரு)

கதிரொளியைக்கண்காணுக்கண்ணினுள்ள
 காத்திமிரங்களையந்தக்கதிரோன்காணு
மதிசயமேயெனவுன்னையுலகுகாணு
 வவ்வுலகைநீகாண்டியாதலாலே
விதமொழியுஞ்சாஸ்திரமுந்தெரியமாட்டா
 மெய்ப்பொருளேயுனைக்காணவேண்டிமேலாந்
துதியணிநின்றவைசொவ்விமலர்கடூவிச்
 சுரர்கணமுமுனிக்கணமுந்துதிப்பதென்னே

(இ-ள்) சூரியப்பிரகாசத்தைக் கண்ணறியாது,கண்ணிலுண்டானகாசபடலத்தை அந்தச்சூரியனறிவான், அவைபோல அதிசயமான உன்னை உலகமறியாது அந்த உலகைநீயறிவாய், அவை யல்லாமல்வேதசாஸ்திரமும் உன்னைக்காணமாட்டாது,உன்னைக்காண மெய்யானவஸ்துவேயென்றும் தேவகணங்களும்முனிகணங்களும்மேலானஸ்துதியணனி புட்பங்களினுலே அருச்சனைபண்ணுவார்களென்றுஞ் சொன்னார் அருச்சுனராசன்-எ-று. (எசு)

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

பிணித்தபிறவிப்பெருந்தளையைப் பெயர்த்தன்பெரும்பே தமைகோதணித்தவரசேயெனக்குதுதான்.றகாதேயாகத்தகுமாகத் (யைத்

துணித்தவிறல்வஞ்போரினையே துடங்கென்றேகிரெனக்கிங்குப்
பணித்தபடியேசெய்வனெனப் பார்த்தனவனுமுடன்பட்டான

(இ-ள்) கடினபிறவியாகியபெரியவிலங்கையறுத்து நீக்கினேன் பெரிய அஞ்ஞானமாகிய வியாதியைததீர்த்தகாதகனே எனக்கு ஆங்கசசஞ்டையாகாததே,ஆனதாகட்டும் எப்படியானாலுந் துணிந்தாகியவெற்றியுள்ள பெரியசண்டையையே துடஙகென்று நீரிங்கே ஏவினபடியே செய்வேனென்று அருச்சுனனுஞ்சம்மதித்தான்-எ-று, (௭௭)

கலிவிருத்தம்.

மாதவனுந்தனஞ்சயனுந்தங்களிலேமகிழ்ந்துரைத்த
வோதரியபொருளினைநீயுணர்ந்தவாறெங்ஙனெனில
வேதவியாசனனுடையமெய்யருளேமிகவுடையே
னாதலினாலறிந்தனன்வேறறியலாம்வகையுண்டோ

(இ-ள்) ஸ்ரீகிருஷ்ணசுவாமியும் அருச்சுனனும்தங்களிலேஇப்படிசந்தோஷப்படடுச்சொன்னதை யாவராலுஞ் சொலலவரிதான அாததததை நீயறிந்தவழி யெந்தவழியென்று கேட்டீராகில் சொலலுகிறேன் கேளும் திருதராட்டிரமஹாராஜாவேயென்று (சஞ்சயன்) சொல்லுகிறான் (வேதவியாசமஹாமுனியினுடைய சத்தியமான கிருபையைமிகவுமுடையவனானபடியினாலே (அறிந்தேன்) அவர்கிருபை யலலாமல வேறுவிதங்களிலே அறியலாகும் வகையுண்டோயிலலே-எ-று. (௭௮)

அப்பொருளினினைந்தோறுமற்புதமாமகமகிழ்வு
மெய்ப்பொழுதுவருமவன்றானிருக்கின்றவகைவிரித்த
வொப்பரியதிருக்கோலமுணர்தோறுமுணர்கோறுஞ்
செப்பரியபெருங்களிப்பின்சிந்தையிலேசிறககுமால்.

(இ-ள்) அவர்களிருவரும் பேசிக்கொண்டஅந்தஅருத்தத்தைநினைக்கிறபோதெல்லாம அதிசயமான ஆனந்தமும் கிஷ்டையுமெப்போதும் வருகின்றனஅந்தக்கிருஷ்ணசுவாமிதாமிருக்கிறவிராட்ரூபவகையை விரிவாகக்காட்டின ஒப்பில்லாத விசுவரூபமாகியதிருக்கோலத்தை அறியும்போதெல்லாம் என்னுடையமனதிலேசொல்லஅரிதானபெரியமனக்களிப்பு மென்மேனி மதிகமாகுது-எ-று (௭௯)

எஞ்சலிலாப்பொருளதனையிப்படியேபுகுந்தேனைச்
சஞ்சயனின்றெடுத்துரைப்பநூறுவாக்ததகாகையாய்
வஞ்சனையேகணாகவாழ்கின்றானமறிவாக்குப
பஞ்சவரேவலியவரென்றிவ்வணணம்பகாலுற்றான்

(இ-ள்) குறைவில்லாத இந்த அருத்தத்தைஇந்தப்படியேநடந்ததென்றுவகையாக வெடுத்து நின்றுசஞ்சயன் சொலலக் கௌரவர்நூறுபேருக்குந் தகப்பனாகிய முகததிலேகண்ணிலலாமல்வஞ்சனையேகண்ணாகவாழ்கின்ற திருதராட்சதன் இவர்களாகிய கௌரவாக்குப்பாண்டவாகளான பஞ்[illegible]சொல்லுகிறானெ-று

கலிவிருத்தம்.

தருமநீதி செயம்புகழெல்லா, மருவருமாயைசெய்மாதவன்வர்ய்மை, தருமம்விடாததனஞ்சயனென்று, மிருவருமின்றவிடத்தனமென்றான்.

(இ-ள்) அழகுள்ள கருமம் நீதி செயம் கீர்த்தி இதுவெல்லாம் எங்கேயிருக்குமென்றால் யாருங்கண்டு கூடப்படாத மாயைசெய்யப்பட்ட ஸ்ரீகிருஷ்ணசுவாமி சத்தியத்தையுந் தருமத்தையும் விடாத அருச்சுனனென்று சொல்லப்பட்ட விருவரும் நின்றவிடத்தி லிதுவெல்லாம இருக்குமென்றான்-எ-று. (அக)

என்றபொருட்டிறமிப்படியென்றக்
குன்றமெடுத்தருளகொண்டல்மணிப்பான்
வென்றகுலத்தின்வியாசன்விரிப்பா
னின்றவருக்கிதுநேர்படவன்றோ

(இ-ள்) என்றுசொல்லப்பட்ட பொருளினுடைய வகையை இப்படியென்று அந்த கோவர்த்தன மலையை எடுத்துக்குடையாகப்பிடித்து மழையைத்தடுத்துப் பசுக்களையு மிடையரையுங்காத்தமேகரூபமான ஸ்ரீகிருஷ்ணசுவாமி சொல்லுவார் அவர் சொன்னதையெல்லாங்குலத்துக்கு மேலான வெற்றிபொருந்திய பிர்மரிஷியாகிய வேதவியாச மஹாமுனி விரிவாகப்பாடுவா ரிவர்களிருவருமேஉபதேசிக்கவும்பாடவுமவ லலவர்கள்அல்லாமலிவர்களைத்தவிர நின்றமற்றபேர்களுக்கு இதுசொல்லவும் பாடவு முடன்படமாட்டுமோ மாட்டாது-எ-று 0 (உடன்படல்மனதுக்கிசைதல்) (அஉ)

இதுவுங் கலிவிருத்தம்.

வேதநூல்களின்முடிவினைவியாசனிற்பின்ன
ரோதநீள்கடலுலகிலுண்டாகியபுரவோன்
கோதிலாநெறியுணர்ந்தகோவிந்தமாமுனியின்
பாததாமரைப்பற்றிவிட்டிடப்படைத்தான்

(இ-ள்) இந்தவேதாந்தத்தை வியாசமஹாமுனிக்குப் பிறகு குளிர்ந்த நீளமுடைய கடல்சூழ்ந்த வுலகத்திலுண்டாகிய பெரியவரானவரில்குற்றமில்லாத முத்திமார்க்கத்தையறிந்த கோவிந்த மகாமுனியினுடைய பாதாரவிந்தத்தைத் தெப்பமாகப்பிடித்துப்பிறவிக் கடலைகடந்துமோட்சமாகிய கரையிலேறி பிறவிக்கடலிலலைந்தஅனேககாலவருத்தமுந்தீர்ந்து ஆனந்த சுகத்தைப்பெற்றவர்-எ-று. (அங)

கலிவிருத்தம்.

ஆற்றியல்வழுவியபுலன்களைந்தையும்
மாற்றியசங்கரபகவற்பாதனென்
றேற்றியபெயரினனருளினலியான்
சாற்றியவிப்பெருந் தருமநூலையே

(இ-ள்) மோட்ச மார்க்கத்தினுடைய சுபாவத்தைத் தவறின அஞ்சுபுலன்களையு மொன்றுபடச் செய்தவராகிய சங்கரபகவற் பாதன்,

ஏற்றிவைத்த பெயரையுடையகிருபையினாலே இந்தப்பெரியதருமசா
ஸ்திரத்தை நான்சொன்னது எ-று (அ

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சேயமாமதுரைநின்றுஞ்செம்மையாய்ப்பாடிதேடி
யாயனும்மாயனுர்தாமவதரித்தருளினாலே
போயனுன்மொழிந்தகீதை புலன்கடலடைந்தார்க்கன்றித்
தூயமாதவர்க்குமிந்தச் சுருதிநூல்கருதொணாதே

(இ-ள) செவ்விய பொருமையுள்ள மதுராபுரியில்நின்றுந் திருவவ
தாரஞ்செய்தருளிச் செம்மையுள்ளதிருவாய்ப்பாடிதேடிஇடையனு
ப்போய்க் கிருபையினாலே அந்த அவதாரகாலத்திலேஅருளிச் செய்
(கீதையானது) பஞ்சேந்திரியக்கடலே யடைந்தவர்களாலே நினைக்கல
ம அவர்களலலாமல் மற்றசுத்தமான பெரியதவஞ்செய்கிறவர்களுக்கு
மிருந்தவேதாந்தநூலே நினைக்கப்படாது-எ-று. (அ

தேற்பட்டகன்றுக்கன்று சேய்தனேச்சிதைசோழற்கு
நாற்பத்திரண்டுஜனம் நன்மையைத்தரித்தாலே
மேற்பட்டவேளாணுகி வேதாப்பட்டாகானேனும்
பாற்பற்றபத்திதனுற் பரமார்த்தமுண்டாமென்றார்

(இ-ள்) தேரிலே யகப்பட்ட பசுக்கன்றுக்குப்பதில்முன்னாலே பி
ளையைத்தேரிலேகொடுத்தநீதிராசனுகியசோழனுக்கு அந்தநாள்மு
ல்நாற்பத்திரண்டுசென்மத்துக்குநல்லதவமானபடியினாலேமேற்பட்
வேளான்குடிமுதல் வேதாப்பட்டாகானயேயவருடைய வுறுதியான
த்தியினாலே யுண்டான பரமார்த்த தெரிசனமென்றுஞ் சொன்னா

கலித்துறை.

கட்டார்மயலிருட்காதபச்சோதி கலைநிசம்பி
எட்டாதுயர்ந்தின்ப மாக்கவின்மாமகிமெய் வினையும்
விட்டார்கள்விட்டபின் வேதச்சுடரொளிமெய்யுணர்ந்த
பட்டாகனைருளாம் பரமார்த்ததெரிசனமே.

(இ-ள்) உலகத்திலே யிருட்போன்ற மயலேக் கட்டார்களென்று ப
நுளணுகாத புத்தியைச்சோதிபிரகாசமாய் எங்குமெட்டாம உயு
ந்த இன்பமாகினபேர் எந்தவினையும் விட்டுவிட்டவர்கள விட்டபிறகு
வேதச்சுடரொளியை மெய்யாயறிந்தபட்டாகனிட கிருபையினாலே
வர்களுக்குப் பரமார்த்ததெரிசனமென்றுஞ் சொன்னார்-எ-று. (அ



௰அ-வது உபநிஷத்துப் பிரதிபக்தனமோட்சயோகஅத்தியாயம்.
முற்றுப்பெற்றது.

ஆக அத்தியாயம்-௰அ-க்கு-கூடியசெய்யுள்-௫௭௧.
பகவற்கீதை மூலமும் உரையும்
முற்றுப்பெற்றது.